கடவுள்துணை.

# தாயுமானசுவாமிகள்

அருளிச்செய்த

# திருப்பாடற்றிரட்டு

இஃது

திருத்தணிகை கந்தப்பையர் குமாரர்

சரவணப்பெருமாளையரால்

முன்பதிப்பித்த பிரதிக்கிணங்க

மயிலம்

சுப்பிரமணியசுவாமிகளால்

பார்வையிடப்பட்டு

ஸ்ரீ.

முனிசாமிமுதலியாரவர்களது

மாதவவிலாச வச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது

பிரமாதி௵ புரட்டாசி௴





கடவுள்துணை.

# தாயுமானசுவாமிகளுடைய

மாணாக்கராகிய

அருளையரென்பவர் அந்த சுவாமிகளைத் துதிசெய்த

# அருள்வாக்கியவகவல்.

திருவளர்கருணைச் சிவானந்தபூரண - மொருவருமறியா வெருதனிச்சித்து - நவரசரூபேதமாய நாடகநடித்தும் - பயந்தனைநீக்கிப் பரிந்தருள்பராபரங் - கண்ணுறுங்கருத்துங் - கதிரொளிபோல - நண்ணிடவெனக்கு நல்கியநன்மை - யொன்றாய்ப்பலவாயொப்பிலாமோனக - குன்றாநிறைந்த குணப்பெருங்குன்ற - மண்ணையும்புனலையும் வளியையுங்கனலையும் - விண்ணையும்படைத்த வித்திலாவித்துப் - பந்தமனைத்தையும்பாழ்படநூறியென் - சிந்தையுட்புகுந்தசெழுஞ்சுடர்ச்சோதியின்னொளிருஞானம்விளங்கியமேலோ - கொள்ளைகொண்டென்னைக் குறைவிலாநிறைவு - தாட்டாமரைமலர்த் தாணினைப்பவர்க்குக் - காட்டாவின்பங்காட்டியகதிரினை - வாக்காலமனத்தான் மதித்திடவரிதென - நோக்காதிருக்கநோக்கியநோக்க - மாதியாயறிவாயகண்டமாயகண்ட - சோதியாய்விரிந்து துலங்கியதோற்றம் - பரவெளிதன்னிற் பதிந்தவென்னுளத்தின விரவிவிரவி மேற்கொளும்வெள்ளஞ் - சுட்டிகடங்காச் சோதியடியார் - மட்டுக்கடங்கும் வான்பெருங்கருணை - யெல்லைக்கடங்கா - வேகப்பெருவெளி - இல்லைப்பொதுவிற் றிருநடத்தெய்வம் - வாதவூரெந்தையை வரிசையாய்விழுங்கும் - போதவூரமேவுகாப்பூரவிளக்குச் - சுகரையகண்டதாவெளியெல்லா - திகழவேகாட்டுஞ் சின்மயசாட்சி - செழுந்தமிழ்ப்பாசை - சிவலிங்கமாகி விழுங்கியஞானவித்தகவேழ - மெழிறருபட்டினத் திறைவனையென்று - மழிவிலாவிலிங்க மாக்கியவருளி - சாந்தபூமி தண்ணருள்வெள்ள - மார்க்கநீழலசையாக்கனம் - பரவுவார்நெஞ்சிற்பாவியமாட்சி - யிரவுபகலற வேதாந்தக்காட்சி - யாட்சிபோலிருக்கு மகிலந்தனக்குச் சாட்சியாயிருக்குந் தாரகத்தனிமுத - லாணும்பெண்ணு மலியுமல்லாதோ - தானுவாய்நின்ற சத்தாந்தனிச்சுட - ரொள்ளுமெண்ணையு மெய்ப்படியும் படி - யுள்ளும்புறம்பு முலாவியவொருபொரு - ளளவிலாமதந்தொறும் வராவாபொருளென வுளநிறைந்திருக்கு மொருபொற்பணிதி...ளரு

மனப்பேய் துடிக்கத்தடிக்கக் - கொள்ளுமோனவாள்கொடுத்திடுமர
சு-பெரியபேறு பேசாப்பெருமை, யரியவுரிமை யளவிலாவளவு- து
ரியநிறைவு தோன்றுவதீதம்-விரியுநல்லன்பு விளைத்திடும்விளைவுதீரா
ப்பிணியாறு செனனமறுக்க வாராவரவாய் -வந்தசஞ்சீவியாலைக்கரு
ம்புபா கமுதககட்டிநீள்-சோலைக்கனிபலாச்சுளைகதலிக்கனிபாங்குறு
மாங்கனி -பாறேனசருக்கரை - யோங்குகற்கண்டுசேர்த்தொன்றாயக்
கூட்டி-யருந்தியரசமெனவறிஞர்சமாதியிற்-பொருந்தியவின்பம்பொ
ழிற்சிற்சுகோதய மெங்கணுநிறைந்த வியல்பினையெனக்குச்-செங்கை
யால்விளங்கத் தெரிந்தமெய்த்ததேசிகன் - றன்னையறிவித்துத்தற்பர
மாகி-யென்னுளத்திருந்தரு ளேகநாயக - னடிமுடியிலலா வருபொரு
ளைக்கு - முடியடியிதுவென மொழிந்திடுமுதலவன்-மெய்யலான்மற்
றவைமெய்யலவெல்லாம - பொய்யெனவறிவேனப் புன்னகை புரிந்
தோ, னருளும்பொருளும் பேதமாயிருந்து மிருதிறனென்று மியலு
மொன்டெனறோ - னருளுனக்குண்டே லருளும்வெளிப்படும்- பொரு
ண்மயந்தானேபொருந்துமென்றுணர்த்தோன - சததசததிரண்டுதன்
மையுந்தானே- யொத்தலாற்சதசத் தெனக்கெனவுணர்த்தோ-னுணவ
மறுவிடி னருளுறுதென்னக் - காணருநேர்மையாற காணவேயுணர்த்
தோன- சென்மமுள்ளளவுந் தீராதிழுக்குங- களமவிடாதெனக்- கூ
ட்டியவள்ள- லுளதிலதெனவு முறுதலானமாயை- வளமிலாதெனவு
ம் வகுத்தினிதுணர்த்தோ- னிலலரத்திருந்து மிதயமடக்கிய- வல்லவ
ன்றனே மகாயோகியென்றோன்-றுறவறததிறந்துஞ் சூழ்மனக்குர
ங்கொன்- றறவகையரியா னஞ்ஞானியென்றோ- னிரவாமனத்தானி
றக்கவுணர்த்திப்- பிறவாவரந்தருமபேரறிவாள-னத்தனைதருளாலனை
த்தையுமியக்குஞ்- சுத்தமாமாயையின் தோற்றமென்றுணர்த்தோ-னி
ருண்மலகமல விசைந்ததிலழுத்தும்-பொருளருட்டிரோதைப் பொற்
பெனப்புகன்றோன்-வீறுசிவமுதல விளம்பியபடியே-யாறுமனுதியெ
ன்றறிஞருக்குரைப்போன்-கொல்லாவிரதங் குவலயத்தோர்க-ளெல்
லாம்பெறுமினென் றியமபியதயாநிதி-தருமமுந்தானமுந்தவம்புரிப
வர்க்- குறிமையவரோ டுறவுகலப்பவன் - றன்றுயிர்யெலத் தாணியி
லுருவிய - மன்னுயிரனைத்தையும் வளர்த்திடும் வேந்தன் - களவுவ
ஞ்சனைகள்செய் கருமிகடமக்குந் - தெளிவுவந்துறவருள் செய்தி
டுந்திறத்தோன் - றான்பெரும்பேறு சகமெலாம்பெறவே - வான்பெ
ருங்கருணை வழங்கியமாரி-தனுசமென்றடைந்த தாபதர்தம்மை-யஞ்ச
லென்றாளு மறிஞரசிகாமணி - சீவகோடிகளுஞ் சித்தர்கோடிகளும்
யாவரும்புகழ யாவையுமுணர்ந்தோன் - யானெனதென்னு மிறைவ
னெம்பெருமான் - றானவனாகிய தலைவனெங்கோமா - னருணகிரி
யாற்கக் கிருமுகன்சொலும் - பெருண்மதல்லது பொருளெனமதியா
ன் [illegible]ப்பொரிந்திடாத - பேதமுங்கடந்த பெருந்தகைமூர்

த்தி-மூலாதார முதலாயுள்ள - மேலாதாரமும் வெறுவெளிகண்டவு
ண்மண்டலமூன்றிலு மன்னியவுருவிலுங - கண்டவையத்திலுங் கட-
வுளாய் நின்றோன் - பகர்சமயந்தோறும் பரமேயிருந்து - சுகந்தனை
ம்புரிந்தொழிலெனச்சொன்னோன் -பேதவபேத பேதாபேதா-பேத
மிதுவெனப் புகன்றிடும்புண்ணிய - னதுநானெனவே யாற்றிடுமனு
பவனு- சதுர்வேதாந்தத்தன்மையென்றுரைத்தோ னெல்லும்பகலுமி
றியானோர்க்குச- சொலலும்பொருளுஞ் சுவையெனச் சொன்னோ
ன்- சுதனேகுருவாகு சுவாமிநாயகற்கெனி னதிகமெய்ஞ்ஞானமல
லவோவெனறோ- னேசயோகத்துறு நிருபரெல்லாந்தொழு- மிரா
சயோகத்திறையிராசயோகத்தான் பொறுமைதெளிவு புனிதவாசா
ர- மறுவிலாவண்மைவாரமியற்கை- தண்ணமர்சாந்தங்கீர்த்தியெ
ண்ணெணகலை பயிலணையிலாககலவி நலலவிதககககுடுநிலைசத்தியமில
லையென்னுமெலவர்க்குந்தருகொடை - நறகுணமெலலா நண்ணிய
பெருந்தகை- சிறகுணவாரி திருவருட்செலவன்- கரமேலெடுத்துக
கருத்துறவணங்கிப் பரமேவுனககுப் பரமெனப்பகர்ந்தோ - னுலடி
மேவு மாசினையடுத்தே- சிலமெனுஞானந் தெளிந்தனனென்னவுஞ்
சித்தமௌனிதிடசித்தமாக- வைதநிலையினை வசாந்தனனெனவு- மூ
லமரபின் மூலததமௌனிதன- பாலனயானெனவும் பரிவொடும்
பகர்ந்தோன்- வடமொழியியறகையின மகிமையுணர்ந்து- திடமுறமு
ப்பொருட்டிறததையுநதெளிந்து- கண்டமுமெனனக் கனிரச மென
னத் தண்டமிழமாரி தனனைப்பொழிநது - சித்தியுமுத்தியுஞ் சிறந்த
ருளகொழிக்கு-நித்தியநிரஞசனநிராலம்பநிறைவை- பாடியுதாடியும்
பணிந்தெழுநதப-லாடியுமறியுமகங்குழைவெய்தியு-மூடனங்குழை
யவுரோமஞசிலிரப்பப்-படபடெனறுளாயபதைததுப்பதைத்துப்பா
ங்குறுநெட்டுயிரப- பாகிப்பரதவித் தேங்கியேஙகியிரஙகி- யோய்ந்தய
ம்பரம்போ லொடுங்கியேசிறிது- மேய்ந்தவிழிகவிமைப்பதுமினறிச-
சோர்ந்துசோர்ந்து துவண்டுதுவண்டுமெய் - யார்ந்தவளபோடவச
முற்றடிக்கடி- யுண்ணடிக்குறலேயுருகியேசற்றுதணணமர்மொழியம
தழுதழுத்திடவே- யுள்ளுமபுறம்பு மொருமிததிருகி-வெள்ளநீர்போ
ல் விழிநீர்பெருகிக் - களறுபசுவைக் கருதிககருதிச - சென்றுசென்
றோடித திகைப்பதுபோல-வென்புநெகக்குடைய விருகரங்குவித்துப்
புன்புலாலயாக்கை பொருந்தாளியென-வுணர்ந்துணாந்தனபா யுவ
கைமேற்கொண்டினிக்- கமணம்பிரியேனெனக கருதியேகுறித்துத்-
திருவுருவெலலாந் திருநீறிலங்க-விருகரங்களின மியன்முடிகுவித்துப்
பூரணசந்திரன போலொளிகாட்டுங்- காரணவதனங் கவின்குறுமெ
யர்வுற-விளங்கலாளெனவே யிலங்கியதிருநகை யதனமெனனத் துலங்கி
யெழில்பெற-வித்தகமையெல்லா மிசைந்துமவனருட்-சிகவனசி

வழிதேர்ந்தவரைப்பப்-பாத்திரமாடப் பரிவுடனுடிச்-சாத்திரங்காட்
டித் தழுவுசெய்தருளும்- வல்லவனெனவே மன்னுயிர்க்காக-வெல்லை
யிலன்பனிவ னெனவிளங்கி-யினவுலகத்தியற்கை பொய்யென்றேஞா
னத்தான் மெய்யெனநவின்றினிதிரங்கிக்கேவலசகலங்கீழ்ப்படமேலாய்
மேவருஞ்சுத்தமெய்யினை நல்க,வருளையுருவுகொண்டவனியில்வந்த பொ
ருளேயிவனெனப் பொலிந்திடும்புனிதன்- சைவஞ்சிவனுடன சம்ப
ந்தமென்பது-மெய்வளர்ஞானம் விளங்குமன்றிசைத்தோன்-கதிர்
விழியொளியுறக் கலத்தல்சித்தாந்த-விதிமுறையாமெனவிளம்பியமே
லோன் - முடிவினிலாகம முறைமையினுண்மையை-யடியரைகுறித்
துரைத்தருளியவண்ணல் சிதம்பரநோமை திறமாவுரைத்திறை-பதம்
புரமெனப்பகர் பரமமெஞ்ஞானி-முத்திடஞ்சாககரமுறைமையிலயிக்
கியனு-சத்தியமிதுவெனச சார்ந்தவர்க்குரைத்தோ-னஞ்செழுத்துள்
ளே யனைத்தையுங்காட்டியென்-னெஞ்சமூழ்த்திய குருநீதிமாதவ-னெ
ல்லாநிறைந்தவிறைவன்செயலெனக-கலலாவெளகருங் கருணைசெ
யகடவுள்-குருவருளாலேகூடுவதல்லாற்-றிருவருளுறுதெனதெரிந்தி
டவுரைத்தோங்குருவுருவெனக் கொண்டபிங்குறையா- பொருண்மைய
மரமெனப்புகன்றிடுபோத-செந்தமூர்த்திகளையுமெழிற்குருவடிவென
ச-சிந்தையிற்றியக்கறத் தேர்ந்தவர்க்குரைத்தோன்- சதாசிவமென்று
பேர் தான்படைத்ததுதா-னெதாவதேபொருளென்றெடுத்தெடுத்து
துரைத்தோன்-கல்லானைகன்னல் கவர்ந்திடசசெய்தவ-னெல்லாம்வ
லலசித் தெம்மிறையென்றே-னெவ்வுயிர்தோறு மிறைமேவியதிறஞ
செவ்வியபிரம்படி செப்பிடுமென்றே-னெவ்வணமெவரெவ ரிசைத்
தனரவரவர்க்-கவ்வணமாவனெம்மா னெனவறைந்தோ-னொருபாண
னுக்கே யொருசிவனுட்படி-வருமடியார்திறம்வழுத்தோனுதெனறே
ன-சிவனடியாரைச் சிவனடியாரைச்சிவனெனக்காண்பவ-னெவனவ
னசிவனே யென்றெடுத்துரைத்தோன்-விருப்புவெறுப்பினைவேரறப்
பறித்துக்-கருப்புகாதென்னைக் காத்தருள்செய்தோ - னிருசொல்லு
ரையுா இயானின்பமெய்த-வொருசொல்லுரைத்த வுயர்குணபூதரன
கதுவுமார்க்க மாறையுமகற்றி-தத்துவாதீததன்மையைத்தந்தோன்-
றிருமகண்மருவிய திகழ்வளமறைசையில்-வருமுனர்வாளரான்மருளி
லாமுனத்தா-னெண்ணியவெண்ணமெல்லாந்தெரிந்தெனக்குத்- தண்
ணருள்செயதவன் றாயுமானவ-னொருமொழிபகர்ந்த வுதவியாலவனே
ந-னிருபதமுப்போ திறைஞசிவாழ்த்துவனே.

அருள்வாக்கிய அகவல்

முற்றிற்று.



௳

சிவமயம்.

# சரித்திரச்சுருக்கம்.

தென்னாடுகள் பலவற்றினுஞ் சிறந்துவிளங்குகின்ற சோழமண்டலத்திலேயுள்ள வேதாரணியமென்னும் வடமொழிப்பெயரையுடையதிருமறைக்காடாகியசிவஸ்தலத்திலே சற்றேறக்குறைய(௱௫௰)வருஷத்துக்குமுன்பாக வேளாண்குலதிலகராயும் குருலிங்க சங்கமபத்தியிலேசிறந்தவராயும் கேடிலியப்பப்பிள்ளையென்பவ ரொருவரிருந்தாரவராலே அந்தசிவஸ்தலவிசாரணை நடத்தப்பட்டுக்கொண்டிருந்தது அக்காலத்திலேதிரிசிரபுரத்திலே அரசாட்சிசெய்துகொண்டிருந்த விஜயரகுநாதசொக்கலிங்கநாயகரென்பவர் கேடிலியப்பப்பிள்ளையினுடைய நற்குணங்களையும் கணக்குவல்லமையையும்-சிலர்சொல்லக்கேட்டு அவரை அழைத்துப்பரீட்சித்து அவருக்குப்பெரியசம்பிரதியுத்தியோகக்கொடுத்துத்தம்மிடத்தேவைத்துக்கொண்டார் அந்தக்கேடிலியப்பப்பிள்ளையானவர் சந்ததியில்லாதவரா யிருந்தமையனாருக்குத் தம்முடையஒரேபேறாகிய சிவசிதம்பரபிள்ளையென்னுங் குமாரனைக் கொடுத்துவிட்டிருந்ததினால் தமக்குச்சந்ததிஉண்டாக அருள்செய்யும்படிக்கு அந்தத்திரிபுரத்தில் எழுந்தருளியிருக்கிறதாயுமானேசுரரைத்தெரிசித்துக் கொண்டுவந்தார் அக்கடவுளதுதிருவருளினாலே -ஓராண்பிள்ளைபிறந்தது அதுகண்டு தகப்பனார்மகிழ்கூர்ந்து அக்கடவுளுக்குக்காணிக்கைமுதலானவை செலுத்திக் குமாரனுக்குத் தாயுமானவரென்கிற அக்கடவுளது பெயரைக்கொடுத்தார் அந்ததாயுமானவர்தந்தகப்பனாருக்கு மிகவும்மனமகிழ்ச்சி யுண்டாகும்படிக்கு அவர்செய்யுமுயற்சி யளவிறகு அதிகமான கீர்வாணந் தமிழ் முதலிய கல்விப்பயிற்சியிலேசிறந்தவரானார் உண்மை -அன்பு-பொறுமை-அடக்கம்-இரக்கம் இவைமுதலிய நற்குணங்களெல்லாம் அவரோடுகூட வேவளர்ந்தன ஓர்-அஞ்ஞானியினதுமனது நிலையில்லாத செல்வப்பொருளை எப்படிவிரும்புமோ அப்படியேஇவரது மனமானதுதத்துவப்பொருளையேவிரும்பிநின்றது அப்படியிருக்கையில் திருமூலநாயனார்மரபிலே எழுந்தருளியமௌனதேசிகர் தாயுமானவரைச்சந்தித்து அவரது அறிவுபக்குவத்தைக்கண்டு வேதாகமங்களின் முடிவான தத்துவப்பொருளைஉபதேசித்தருளினார் அதுமுதலாகத் தாயுமானவர்தமது ஞானாசாரியரிடத்தே மிகுந்தபத்திஉடையவராய் அவ்வுபதேசப் பொருளைச்சிந்தித்துத்தெளிந்து தினந்தோறும் தட்சிணாமூர்த்தி சந்நிதியிலே பூசைசெய்துக்கொண்டு வந்தார்-பின்புதாயுமானவருக்குத்தகப்பனார்தேகவியோகத்தை அடைதலினாலே அவரதுலௌகிகதொழிலை அ

சனது வேண்டுதல்பற்றி அதிலவிருப்பமில்லாதவராயிருந்தும்ஏற்று
க்கொள்ள வேண்டியதாயிற்று அரசனானவன் அவரைமுதலிலேஞான
வானென்று அறிந்திலனாகினும் கேடிலியப்பபிள்ளையினும் இவரையோக
கியென்று நன்குமதித்து மிகவுஞ்சிறப்புச்செய்து வைத்திருந்தான
ஆனால் கழைக்கூத்தனுடையகருத்து உடல்கரப்பிலும் அவனதுசெ
ய்கைகூத்திலும்எப்படிவைக்கப்பட்டிருக்குமோ அப்படியே தாயுமா
னவரது கருத்துச்சிவத்திலும் அவரதுசெய்கை லௌகிகத்திலும்வை
க்கப்பட்டிருந்தன இப்படிச்சில நாள்கள் சென்றபின்மேல் அ
ரசன் அவரிடத்தேவிளங்கிய அபூர்வமான சிலசெய்கைகளைக்கண்டு
அவரதுமகிமையை அறிந்துகொண்டான் உடனேவிவேகியாகிய அவ்
வரசனுக்குஅவரைக்குறித்து அச்சமும் அன்பும்உண்டாதலால்அவ
ரையழைப்பித்து உயர்ந்த ஆசனத்தின்மேல் இருந்தருளப்பண்ணிசு
வாமிஅடியேன் இதுவரையிலே உமக்கு ஊழியஞ்செய்யதக்கநான் உ
ம்மைஎன் ஊழியத்திலே வைத்திருந்தேன் ஆயினும் இதுபெரியகுற்
றமாகவின் கிருபாமூர்த்தியாகிய தேவரீர்இக்குற்றத்தைப் பொறுத்த
ருளிஇன்றுமுதலாக அடியேனால் ஆகவேண்டியவற்றைச்செய்வித்து
க்கொண்டு நிஷ்டைக்குக்குறைவுபடாமல் இருந்தருளலாமென்றுவே
ண்டுதல்செய்தான் அதுகேட்டவுடனே தாயுமானவர் திருவுளமகிழ்
ந்து அன்றுமுதலாக அளவற்றஞானயோகத்திலே இருந்துகொண்டு
கடவுளையும் குருவையும் அற்புத சின்மயமதுரமான தமிழ்ச்செம்பா
ட்டுக்களைப்பாடித் துதிசெய்துகொண்டு வந்தார் இப்படியிருக் கையில்
அவ்வரசன்மனைவி தாயுமானவரது திருமேனியின் கண்ணேயுள்ள அ
ழகைக்கேள்விப்பட்டுஅவரை அழைப்பித்துக் கண்களிகூர நோக்கிக்
கேள்விப்பட்ட வளவினும அதிகமாய் விளங்குதலால்உளமருண்டுஅ
வரைத்தன்னரசாட்சிக்குத்தலைவராகவும்தன்னாலவிரும்பப்பட்டதகா
த்செய்கைக்கு உடன்படுத்தவும் தான் கொண்டகருத்தைக்குறிப்பித்
தாள் அக்கருத்தை அறிந்த தாயுமானவரோவென்றால்உடனேஒருபா
ய்வழியினாலே அங்கிருந்து தம்மைவிடுவித்துக்கொண்டு அவள்அரசா
ட்சியி னெல்லையைக்கடந்துஇராமநாதபுரத்துச்சீமைக்குஎழுந்தருளி
னீர் இதுசெய்தி சிவசிதம்பரபிள்ளை இருசெவியை அடைந்தநின்
லே அவரும்சிறியதாய் குமாரராகிய அருளையப்பிள்ளையும் தேடிகண்டு
பிடித்துச் சந்ததிவிளங்கவேண்டுமெனனும் கருத்தைக்கொண்டுதிரு
[illegible]ம் செய்யும்படி முயற்சி செய்தார்கள்

தாயுமான சுவாமிகளுக்கு அதுகாரியத்திலே சிறிதும் இரு வுவை
ல்லாதிருந்துந்தமையனாரது வேண்டுதலின் மிகுதியினாலே உடன்ப
டவேண்டியதாயிற்று உடனேபத்தினியார் ஓராண்பிள்ளையைப் பெற்
று வைத்துச்சிவபதமடைந்தார் அந்தப் பிள்ளைக்குக் கனகசபாபதிப்
பிள்ளையென்று பெயரிடப்பட்டது. அதுமுதலாகத் தாயுமானசுவாமி
கள் கௌபீனத்தோடு பரிசுத்தசிவஸ்தலந்தோறுஞ்சஞ்சரித்துக்கொ
ண்டு இவ் வுலகத்திலுள்ள மனிதர்களெல்லாம் மெஞ்ஞான ஒளியை
ப்பெற்று அஞ்ஞான விருளினின்று நீங்கி உய்யும்படிக்குப் பலவகை
ப்பட்ட அற்புதமான பாடல்களைச் செய்தருளினர் அருளையரென்பவ
ரும் அவரிடத்தே தத்துவோபதேசம் பெற்றுக்கொண்டு அவரைவிட்
டு நீங்காமல பணிவிடை செய்துக்கொண்டு வந்தார்.

தாயுமானசுவாமிகள் அகண்டபரிபூரண சச்சிதானந்த சொரூப
மாகியசிவத்திலேகலந்தபின்பு அருளையசுவாமிகள் அகவற்பாவினாலே
குருவைத்துதித்துச் சிவயோகத்திலே யிருந்து தமக்குப்பின்பக்குவ
ப்பட்டுவரும் அடியார்களுக்கு அனுக்கிரகஞ் செய்யும்படி கனகச
பாபதிப்பிள்ளைக்கு அபிஷேகஞ் செய்தருளினர்

இக்குருபரம்பரையில் தஞ்சமாநகரத்துக் கீழ்பால் அன்னப்
பன்பேட்டையிலுள்ள மடத்தில் இப்போது இருக்கின்ற அம்பலவா
ணசுவாமிகளுடைய அடியார்கூட்டத்திலே ஒருவராகியும் அந்த ஆதீ
னத்துக்கு உரியவராகியும் உள்ளெடுத்துக்கட்டி அருணாசலநாவல ர
வர்களிடத்திலிருந்த ஆதீன புஸ்தகத்தையும் மற்றுஞ் சிலபுஸ்தகங்க
ளையும் அழைப்பித்து ஒப்பிட்டு அச்சிற்பதிப்பித்ததென்றறிக.

---

தாயுமானசுவாமிகளது சரித்திரம்

(*)

முற்றுப்பெற்றது.

## நூலினுட்பிரிவு



முற்றியது.

உ

கடவுள்துணை.

# தாயுமானசுவாமிகள்பாடல்

—(*)—

## திருவருள்விலாசப்பரசிவவணக்கம்.

ஆசிரியவிருத்தம்.

அங்கிங் கெனாதபடி யெங்கும்ப்ரகாசமா
யானந்தபூர்த்தியாகி
யருளொடு நிறைந்ததெது தன்னருள்வெளிக்குளே
யகிலாண்டகோடி யெல்லாந்
தங்கும்படிக்கிச்சை வைத்துயிர்க்குயிராய்த்
தழைத்ததெது மனவாக்கினிற்
றட்டாமனின்றதெது சமயகோ டிகளெல்லாந்
தன்றெய்வமென்றெய்வமென்
றெங்குந்தொடர்ந்தெதிர்வழக்கிடவுநின்றதெது
வெங்கணும்பெருவழக்கா
யாதினும்வல்லவொருசித்தாகி யின்பமா
யென்றைக்கு முள்ளதெதுமேற்
கங்குல்பகலறநின்ற வெல்லையுளதெதுவது
கருத்திற் கிசைந்ததுவே
கண்டனவெலாமோன வுருவெளியதாகவுங்
கருதியஞ்சலிசெய்குவாம். [க]

ஆரனந்தம்பெற்றபேரனந்தஞ்சுற்று
முறவனந்தம்வினையினு
லுடலனந்தஞ்செயும் வினையனந்தங்கருத்
தோவனந்தம்பெற்றபேர்
சீரனந்தஞ்சொர்க்க நரகமுமனந்தநற்
றெய்வமுமனந்தபேதந்
திகழ்கின்றசமயமு மனந்தமதனாலஞான
சித்தியாலுணர்ந்து
காரணத்தொடு வருவித்த தெனவைய

பார்க்குமிடமெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூரணானந்தமே (௮)

ஆழாழிகரையின்றி நிற்கவிலையோ கொடிய
வாலமமுதாகவிலையோ
வக்கடலின்மீது வடவனனிற்க வில்லையோ
வந்தரத்தகில கோடி
தாழாம னிலைநிற்கவிலலையோ மேருவுந்
தனுவாகவளைய விலையோ
சப்தமேகங்களும் வச்ரதரனாணையிற்
சஞ்சரித்திட விலலையோ
வாழாதுவாழவே யிராமனடியாற் சிலையு
மடமங்கை யாகவிலையோ
மணிமந்த்ரமாதியால வேண்டுசித்தி யுலக
மாகத்தில்வைக்க விலையோ
பழாகிய வெனமனங் குவியவொருதந்திரம்
பண்ணுவ துனக்கருமையோ
பார்க்குமிடமெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரிபூரணானந்தமே. (௯)

ஆசைக்கோரளவில்லை யகிலமெல்லாங்கட்டி
யாளினுங் கடன் மீதிலே
யாணைசெல வேநினைவ ரளகேச னிகராக
வம்பொன்மிக வைத்தபேரு
நேசித்து ரசவாதவித்தைக்கலைந்திடுவர்
நெடுநா ளிருந்தபேரு
நிலையாகவேயினுங் காயகற்பந்தேடி
நெஞ்சுபுண்ணாவரெல்லாம
யோசிக்கும் வேளையிற் பசிதீரவுண்பது
முறங்குவதுமாகமுடியு
முள்ளதேபோதுநா னானெனக்குளறியே
யொன்றைவிட்டொன்று பற்றிப்
பாசக்கடற்குளே வீழாமன் மனதற்ற
பரிசுத்தநிலையையருள்வாய்
பார்க்குமிட மெங்குமொருநீக்கமற நிறைகின்ற
பரிபூரணானந்தமே. (௰)

பரிபூரணானந்தம்-முற்றியது ஆக ௰௫

— ௨௯௨ —



௨

# பொருள்வணக்கம்

நித்தியமாய் நிர்மலமாய் நிட்களமாய்
நிராமயமாய் நிறைவாய நீங்காச்
சுத்தமுமாய்த் தூரமுமாய்ச் சமீபமுமாய்த்
துரியநிறை சுடராயெல்லாம்
வைத்திருந்த தாரகமாயானந்த
மயமாகி மனவாக்கெட்டாச்
சித்துருவாய்நின்றவொன்றைச் சுகாரம்பப்
பெருவெளியைச் சிந்தைசெய்வாம், (க)

யாதுமனுநினையுமந்த நினைவுக்கு
நினைவாகி யாதின்பாலும்
பேதமற நின்றுயிர்க்குயிராகி
யன்பருக்கே பேரானந்தக்
கோதிலமுதூற் றரும்பிக்குணங்குறியொன்
றறத்தனனைக் கொடுத்துக் காட்டு
நீதிபரா பரமானநிருதாந்தப்
பேரொளியைச் சிந்தைசெய்வாம். [௨]

பெருவெளியா யைம்பூதம்பிறப்பிடமாய்ப்
பேசாதபெரியமோனம்
வருமிடமாய மனமாதிகெட்டாத
பேரின்பமயமாய் ஞானக்
குருவருளாற் காட்டிடவு மன்பரைக்கோத்
தறவிழுங்கக்கொண்டப் பாலுந்
தெரிவரிதாயக் கலந்தந்தப்பொருளந்தப்
பொருளினையாஞ்சிந்தை செய்வாம். [௩]

இகபரமுமுயிர்க்குயிரை யானெனதற்
றவ ரவையெந்தராளுஞ்
சகபரி பூரணமானநிராலம்ப
கோசரத்தைத் துரியவாழ்வை
யகமகிழ வமுந்தேனை முக்கனியைக்
கற்கண்டை யமிர்தைநாடி
மொகுமொகென விருவிழிநீர் முத்திறைப்பக்
கரமலர்கண் முகிழ்த்துநிற்பாம் [௪]

சாதிகுலம் பிறப்பிறப்புப்பந்தமுத்தி
யருவுருவத் தன்மைநாம
மேதுமின்றி யெப்பொருட்குமெவ்விடத்தும்
பிரிவறநின் றியக்கஞ் செய்யும்

சோதியாய்த் தூவெளியாய் மனாதீத
நிறைவான துரியவாழ்வைத்
தீதில்பரமாம்பொருளைத் திருவருளை
நினைவாகச் சிந்தைசெய்வாம் (௫)

இந்திரசாலங்கனவு கானலினீ
ரெனவுலக மெமக்குத்தோன்றச்
சந்ததமுஞ்சிற்பரத்தா லழியாத
தற்பரத்தைச் சார்ந்துவாழ்க
புந்திமகிழுறஅறிஞர் தடையறவா
னந்தவெள்ளம் பொலிகவென்றே
வந்தருளுங்குருமௌனி மலர்த்தாளை
யனுதினமும் வழுத்தல்செய்வாம் (௬)

பொருளாகக்கண்டபொரு ளெவைக்குமுதற்
பொருளாகிப் போதமாகித்
தெருளாகிக்கருதுமன்பர் மிடிதீரப்
பருகவந்த செழுந்தேனாகி
யருளானோர்க் ககம்புறமென் றுன்னாத
பூரணவா னந்தமாகி
இருடராவிளங்குபொரு ளியாதந்தப்
பொருளினையா மிறைஞ்சிநிற்பாம் (௭)

அருமறையின் சிரப்பொருளாய்விண்ணவர்மா
முனிவர்சித்த ராதியானோர்
தெரிவரியபூரணமாய்க் காரணங்கற்
பனைகடந்த செல்வமாகிக்
கருதசுயமலரின்மண மௌனியிலெண்ணெ
யுடலுயிர்போற் கலந்தெந்நாளும
துரியநடுவூடிருந்த பெரியபொரு
ளியாததனைத் தொழுதல்செய்வாம் (௮)

விண்ணாதிபூதமெல்லாந் தன்னகத்தி
லடக்கிவெறு வெளியாயஞ்ஞானக்
கண்ணாரக்கண்டவன்பர் கண்ணூடே
யானந்தக் கடலாய்வேறொன்
றெண்ணாதபடிக்கிரங்கித் தானாகச்
செய்தருளு மிறையேயுக்கண்
ணண்ணாருஞ்சாந்தவரு டனையினைந்து
கரமலர்க்கடலைமேற் கொள்வாம் (௯)

விண்ணிறைந்தவெளியாயென் மனவெளியிற்
கலந்தறிவாம் வெளியினூடே
தண்ணிறைந்த பேரமுதாய்ச் சதானந்த

மானபொருந்தகையேயின்னா
துன்னிறைந்தி போன்யா னுன்றருளி
மொழிகுன்றி யுவ்வகையாகிக்
கண்ணிறைந்தபுனலுகுப்பக்கரமுகிழ்ப்ப
மின்னருளைக்கருத்தில்வைப்பாம்- (௯)

வேறு.

ஆதியந் தங்காட்டாதமுதலாயெம்மை
யடிமைக்கா வளர்த்தெடுத்தவன்னைபோல
நீதியெறுங்குருவாகிமனவாக்கெட்டா
நிச்சயமாய்ச்சொச்சமதாய்நிமலமாகி
வாதமிடுஞ்சமயநெறிக்கரியதாகி
மௌனத்தோர் பால்வெளியாய்வயங்காநின்ற
சோதியையென்னுயிர்த்துணையைநாடிக்கண்ணீர்
சொரியவிருகரங்குவித்துத்தொழுதல்செய்வாம் (௰௧)
அகரவுயிரெழுத்தனைத்துமாகிவேறு
யமர்ந்ததெனவகிலாண்டமனைத்துமாகிப்
பகர்வனவெல்லாமாகியல்லதாகிப்
பரமாகிச்சொலலரிய பான்மையாகித்
துகளறுசங்கற்ப விகற்பங்களெல்லாந்
தோயாதவறிவாகிச் சுத்தமாகி
நிகரில்பசுபதியானபொருளைநாடி
நெட்டுயிர்த்துப்பேரன்பா னினைதல்செய்வாம் (௰௨)

பொருள்வணக்கம் முற்றியது ஆ-உ௩.



## சின்மயானந்தகுரு

அங்கைகொடுமலர்தூவியங்கமது புளகிப்ப
வன்பினா லுருகிவிழிநீ
ராறாகவாராத முத்தியினதாவேச
வாசைக்கடற்கண்மூழ்கிச்
சங்கரசயம்புவே சம்புவேயென்றுமொழி
தழுதழுத்திடவணங்குஞ்
சன்மார்க்கநெறியிலாத் துன்மார்க்கனேனையுந்
தண்ணருள் கொடுத்தாள்வையோ

சிரகிரிவிளங்கவரு தட்சிணாமூர்த்தியே
 சின்மயானந்தகுருவே. (௩)

ஐவகையெனும்பூதமாதியை வகுத்தது
 ளசராசரபேதமான
யாவையும்வகுத்துநல் வறிவையுமவகுத்துமறை
 யாதிநூலையும்வகுத்துச
சைவமுதலாவளவில் சமயமும்வகுத்துற்மே
 சமயங்கடந்தமோன
சமரசம்வகுத்துநீயுன்னைநானறுகவுந்
 தண்ணருள் வகுக்கவிலையோ
பொய்வளருநெஞ்சினர்களை காணாதகாட்சியே
 பொய்யிலார் மெய்யறிவிற்
போதபரிபூரணவகண்டிதா காரமாய்ப்
 போக்குவரவற்ற பொருளே
தெய்வமறைமுடிவானபிரணவசொரூபியே
 சித்தாந்தமுத்திமுதலே
சிரகிரிவிளங்கவரு தட்சிணாமூர்த்தியே
 சின்மயானந்தகுருவே (௪)

ஐந்துவகையாகின்றபூதபேதத்தினா
 லாகின்ற வாகைகைநீர்மே
லமிர்கின்றகுமிழியெனநிற்கின்றதென்னநா
 னறியாதகாலமெல்லாம்
புத்திமகிழுறவுண்டுடுத்தின்ப மாவதே
 போந்தநெறியென்றிருந்தேன
பூராயமாகநின தருளவந்துணர்ந்தவிலை
 போனவழி தெரியவில்லை
யெந்தநிலையேசிறு மிணங்கவிலைபல்லா
 விறப்பொடுபிறப்பையுள்ளே
வெண்ணினனெஞ்சதுபகீரெனுந்துயிலுரு
 திருவிழியுமிரவுபகலாயுச
செந்தழலின்மெழுகாளதங்கமிலைவென்கோலோ
 சித்தாந்த முத்தி முதலே
சிரகிரிவிளங்கவருதட்சிணாமூர்த்தியே
 சின்மயானந்தகுருவே (௫)

காரிட்டவாணவக கருவறையிலறிவற்ற
 கணணிலாககுழவியைப்போற்
கண்டுணடிருநதவெமை வெளியில்விட்டிலலாங்
 காப்பிட்டதறகிசைந்த

பேரிட்டுமெய்யென்று போபாழ்ப்பொய்யுடல்
பிலக்கவிளையமுதமூட்டிப்
பெரியபுவனத்தினிடை போக்குவரவுறுகின்ற
பெரியவிளையாட்டமைத்திட்
பேரிட்டதன்கருதிமொழிதப்பின்னைவிட்
டிடருறவுருக்கியுடர்தீர்த்
திரவுபகலில்லாதபேரின்பவீட்டினி
லிணைந்துதுயில்கொண்மினென்று
சீரிட்டவுலகன்னை வடிவானவெந்தையே
சித்தாந்தமுத்திமுதலே
சிரகிரிவிளங்கவருதக்ஷணாமூர்த்தியே
சின்மயானந்தகுருவே. (௬)

கருமருவுகுகையனையகாயத்தினடுவுட்
களிம்புதோய்மெம்மனையயான்
காண்டகவிருக்குஞானவனலூட்டியே
கனிவுபெறவுள்ளுருக்கிப்
பருவமதறிந்தின்னருளானகுளிகைகொடு
பரிசித்துவேதிசெய்து
பத்துமாற்றுத்தங்கமாக்கியேபணிகொண்ட
பக்ஷத்தையென்சொல்லுவே
னருமைபெறுபுகழ்பெற்ற வேதாந்தசித்தாந்த
மாதியாமந்தமீது
மத்துவிதநிலையராயென்னையாண்டென்னடிமை
யானவர்களறிவினூடுந்
திருமருவுகல்லாலடிக்கீழும்வளர்கின்ற
சித்தாந்தமுத்திமுதலே
சிரகிரிவிளங்கவருதக்ஷணாமூர்த்தியே
சின்மயானந்தகுருவே (௭)

கூடுதலுடன்பிரித லற்றுயிர்த்தொந்தமாய்க்
குவிதலுடன்விரிதலற்றுக்
குணமற்றுவிரவினொடியோக்கற்றுநிலையான
குறியற்றுமலமுமற்று
நாடுதலுமற்றுமேல்கீழ்நடுப்பக்கமெனு
நணுவுதலுமற்றுவிந்து
நாதமற்றைவகைப்பூதபேதமுமற்று
ஞாதுருவின்ஞானமற்று
வாடுதலுமற்றுமேலொன்றறவிரண்டற்று
வாக்கற்றுமனமுமற்று

மன்னுபரிபூரணைச் அகவாசிதன்னிலே
வாய்மடுத்துண்டவசமாய்த்
தேடுதலுமற்றவிடமில்லையென்றமௌனியே
சித்தாந்தமுத்திமுதலே
சிரகிரிவிளங்கவரு தட்சிணாமூர்த்தியே
சின்மயானந்தகுருவே (அ)

தாராதவருளெலாந் தந்தருளமௌனியாய்த்
தாயனையகருணைகாட்டித்
தாளிணையென்முடிசூட்டியருளிற்சாமாதியே
சாசுவிதசம்பரதாய
மோராமன்மந்திரமுமூன்றுமன்முதனிலை
யொன்றோடிரண்டெனும
லொளியெனவும்வெளியெனவுமுருவெனவு
மொலியெனவுமுணர்வுருமத்
பாராதுபார்ப்பதேயேதுசாதனமற்ற
பரமவனுபூதிவாய்க்கும்
பண்பென்றுணர்த்தியதுபாராமலந்நிலை
பதிந்தவின்பழவடியர்தஞ்
சீராயிருக்கவின தருள்வேண்டு மையனே
சித்தாந்தமுத்திமுதலே
சிரகிரிவிளங்கவரு தட்சிணாமூர்த்தியே
சின்மையானந்தகுருவே (கூ)

பேதமாயாதிகடுவந்தமுமிலாததாய்ப்
புனிதமாய்விகாரமாய்ப்
போக்குவரவில்லாதவின்பமாய்நிறைவின்
பூரணப்புகலிடமதா
வாதரவுவையாமல் றிவினைமறைப்பதுநி
னருள்பின்றுமருவின்மைதீர்த்
தறிவித்துநிற்பதுநினருளாகிலொளியனேற்
கறிவாவதேறிவிலா
வேதம்வருவகையேது வினையேதுவினைதனக்
கிடானகாயமேதென்
னிசசரசுதந்தரஞ் சிறிதுமிலையிசபர
மிரண்டினுண்மலைவுதீரத்
தீதிலருள்கொண்டினியுணர்த்தியெனையாள்வையோ
சித்தாந்தமுத்திமுதலே
சிரகிரிவிளங்கவரு தட்சிணாமூர்த்தியே
சின்மையானந்தகுருவே (ய)

பத்திநெறியிலேநின்று நவகண்டபூமிப்
பரப்பை வலமாகவந்து
பாவையிடைமூழ்கியு நதிகளிடைமூழ்கியும்
பசிதாக மின்றியெழுநா
மத்திடைநின்றுமுதிர் சருகுபுனல்வாயுவினை
வன்பசி தனக் கடைத்து
மௌனத்திருந்துமுயிர் மலேநுழைவுபுக்கியு
மன்றுதச நாடிமுற்றுஞ்
சுத்திசெய்துமூலப்ராணனோ டங்கியைச
சோமவட்டத் தடைத்துஞ்
சொல்லரியவமுதுண்டு மற்பவுடல்கற்பங்க
டோறுநிலை நிற்கவீறு
சித்திசெய்துஞான மலதுகதிகூடுமோ
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரிவிளங்கவரு தட்சிணாமூர்த்தியே
சின்மையா னந்த குருவே. (௰௧)

சின்மயானந்தகுரு-முற்றியது - ஆ - ௧௧



# மௌனகுருவணக்கம்



ஆசைநிகளத்தினை நிர்தூளிபடவுதறி
யங்காரமுனையை யெறறி
யனாதுவிதமதமாகி மதமாறுமாறுக
வங்கையினவிலாழி யாகவிப
பாசவிருடன்னிழ லெனசசுளித்தார்த்துமேற்
பார்த்துப் பரந்தமனதைப்
பாரித்தகவளமாய்ப் பூரிககவுண்டுமுக
படாமன்ன மாயையூறித்
தேசுபெறநீவைத்த சினமுதாரஙகுசச
செங்கைக்குளே யடஙகிச
சின்மயானந்தசுக வெள்ளபபடிந்துநின
திருவருட் பூர்த்தியான
வாசமுறுசநசார மீதெனனேயொருஞான
மத்தகெச மௌனவாரததாய்
மந்த்ரகுருவேயோக தந்ரகுருவேமூலன
மாபிலவரு மௌனகுருவே (௧)

ஐநதுவகையாகின்ற பூதமுதனாதமுழு
மடஙகவெளியாக வெளிசெய

த்ரியாமையழிவாகி நிறைவாகவறிவார்க
ளறிவாக நின்றநிலையிற்
சிந்தையடங்கிடலென்று சும்மாவிருத்திமேற்
சின்மயமானந்த வெள்ளந்
தேக்கிதனிளைத்துகா நுதுவாயிருக்கநீ
செய்சித்ர மிகநன்றுகா
ளெந்தைவடவாசற்ப்ரம குருவாழ்கவாழ்வரு
ளியநந்த மரபுவாழ்க
வென்றடியாமனமகிழ வேதாகமத்துணி
பிரண்டில்லை யென்றென்னவே
வந்தகுருவேவீறு சிவஞானசித்திநெறி
மௌனோப தேசகுருவே
மந்த்ரகுருவேயோக தந்த்ரகுருவேமூலன்
மரபில்வரு மௌனகுருவே (௨)

ஆதிக்கங்கிளவ ரசிந்தமாயைக்கெ
ணறிவன்றி யிடமில்லையோ
வந்தாப்புஷ்பமுங் கசளவின்னிருமோ
ரவசரத் துபயோகமோ
யோதிதநிலையையு மயக்குதேயபயநான்
புகலவரு டோற்றிடாமற்
பொய்யானவுலகத்தை மெய்யாகிறுத்தியெம்
புத்திக்கு ளிந்திரசாலஞ்
சாதிக்குதேயிதனை வெல்லவுமுபாயநீ
தந்தருள்வ தென்றுபுகல்வாய்
சன்மதஸ்தாபனமும் வேதாந்தசித்தாந்த
சமரசநிரவாக நிலையு
மாதிக்கொண்டபரப்பெலாமறியவே
வந்தருளு ஞானகுருவே
மந்த்ரகுருவேயோக தந்த்ரகுருவேமூலன்
மரபில்வரு மௌன குருவே (௩)

மின்னனையபொய்யுடலை நிலையென்றுமையிலகு
விழிகொண்டு மையல்பூட்டு
மின்னார்களின்பமே மெய்யென்றுவளர்மாட
மேல்வீடுசொர்க்க மென்றும்
பொன்னையழியாதுவளர்பொருளென்று போற்றியிப்
பொய்வேஷ மிகுதிகாட்டிப்
பொறையறிவுதுறவீதலாதிநற்குணமெல்லாம்
போக்கிலே போகவிட்டுத்

தன்னிகரி லோபாதி பாழும்போய் பிடித்திட
    தரணிமிசை லோகாயுதன்
சமையநடை சாராமல் வேதாந்த சித்தாந்த
    சமரச சிவானுபூதி
மன்னவொரு சொற்கொண்டெனைத்தடுத்தாண்ட
    பின் வாழ்வித்த ஞான குருவே
மந்த்ரகுரு வேயோகதந்த்ரகுருவேமூலன்
    மரபில்வரு மௌனகுருவே (௪)

போனகமிருக்கின்றசாலையிடவேண்டில
    புசித்தபிற்கிருக்குமதுபோற்
புருஷர்பெறு தர்மாதிவேதமுடனாகமம்
    புகலுமதினாலாம்பயன்
ஞானநெறிமுக்யநெறி காட்சியனுமானமுத
    காணுவிதங்கடோர்ந்து
காணுனெனக்குளறுபடையுடைபெயர்த்திடவு
    நான்குசாதனமு மோர்ந்திட்
டானநெறியாஞ்சரியையாதிசோ பானமுற்
    றணுப்பக்ஷ சம்புபக்ஷ
மாமிருவிகற்பமுமாயாதி சோவையு
    மறிந்திரண்டொன்றென்றுமோர்
மானதவிகற்பமற வென்றுநிற்பதுநமது
    மரபென்றபரம குருவே
மந்த்ரகுருவேயோகதந்த்ரகுருவேமூலன்
    மரபில்வரு மௌனகுருவே (௫)

கல்லாதவறிவுமேற் கேளாதகேள்வியுங்
    கருணைசிறிதேதுமில்லாக்
காட்சியுங் கொலைகளவுகட்காமமாட்சியாக்
    காதலித்திடுநெஞ்சமும்
பொல்லாத பொய்மொழியுமல்லாதுநன்மைகள்
    பொருந்துகுண மேதுமறியேன்
புருஷர்வடி வானதேயல்லாதுகனவிலும்
    புருஷார்த்த மேதுமில்லை
னெல்லாமறிந்தநீயறியாததன்றெனக்
    கெவ்வண்ண முய்வண்ணமோ
விருளையிருளென்றவர்க்கொளிதாரகம்பெறு
    மெனக்குநின்னருடாகாம்
வல்லானெனும்பெய ருனக்குள்ளதேயிந்த
    வஞ்சகனையாளவிலையாய்

மந்த்ரகுருவேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌன குருவே [௬]

கானகமிலங்குபுலி பசுவொடுகுலாவுநின்
கண்காண மத்யானநீ
கைகாட்டவுங்கையா னொடிக் கெனப்பெரிய
காட்டைமிக வேந்தி வருமே
போனகமமைந்ததென வக்காமதேனுவின்
பொன்னடியி னின்றுசொலுமே
புலிராசர்கவிராசர் தவராசனென்றுனைப்
போற்றிசய போற்றியென்பார்
ஞானகருணாகர முகங்கண்ட போதிலே
நவநாத சித்தர்களுமுன்
னட்பினைவிரும்புவார் சுகர்வாம தேவர்முதன்
ஞானிகளு முனைமெச்சுவார்
வானமுமண்ணகமும் வந்தெதிர் வணங்கிடுமுன்
மகிமையது சொல்ல வெளிதோ
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌன குருவே (௭)

சுருருபலபக்ஷணிகளொருகோடியல்லாற்
சகோரபட்சிகள் போலவே
தவளநிலவொழுகமிர்த தாரையுண்டறியாத
தன்மையரனந்தகோடி
யிருவினைகளற்றிரவுபகலென்பதறியாத
வெதாந்த மோன ஞான
வின்பநிஷ்டையர்கோடி மணிமந்த்ரசித்திநிலை
யெய்தினர்கள் கோடிசூழக்
குருமணியிழைத்திட்ட சிங்கா தனத்தினமிசை
கொலுவீற்றிருக்குநின்னைக்
கும்பிட்டனந்தமுறைதெண்டனிட்டென்மனக்
குறையெலாந் திரும்வண்ண
மருமலரொடுத்துணிரு தாளையர்ச்சிக்கவெனை
வாவென்றழைப்பதெந்நாண
மந்தரகுவுவேயோகதந்தரகுருவேமூலன்
மரபில்வருமௌனகுருவே (அ)

ஆங்கார மானகுல வேடவெம்பேய்பாழுதத
வானவத்தினிம்வலிதுகா
ணறிவினை மயக்கிடு நடுவறியுவொட்டாதி
யாதொன்றுதொடினுமதுவாய்த்

தங்காதுமொழிபேசு மரிகரப்பிரமாதி
தம்மொடு சமானமென்னுந்
தடையற்றதேரிலஞ்சுருவாணிபோலவே
தன்னிலசையாதுநிற்கு
மீங்காரெனக்குறிகரென்னப்பிரதாபித்
திராவணு காரமாகி
மிதியவெளி யெஙகணுந்தன்னரசு நாடுசெய்
திருககுமிதனொடேநேரமும்
வாங்காவி லாவடிமை போராட முடியுமோ
மௌனோபதேச குருவே
மந்த்ரகுருவேயோகதந்த்ரகுருவேமூலன
மரபில்வரு மௌன குருவே (௯)

பற்றுவெகுவிதமாகியொன்றைவிட்டொன்றனைப்
பற்றியுழலகிருமிபோலப்
பாழ்ஞ்சிந்தைபெறறநான் வெளியாக நின்னருள்
பகர்ந்துமறியென்றுவிதமோ
சிறறறிவதனறியூமெவரேனுமொருமொழி
திடுக்கென் றுரைத்தபோது
சிந்தைசெவியாகவேபறையுறைய வுதரவெங
தீநெஞ்சமளவளாவ
வுற்றுணாவுணர்வற்றுன் மததவெறி யினர்போல
வுளறுவேன்முத்திமார்கக
முணர்வதெப்படியினபதுனபஞ் சமானமாக
யுறுவதெப்படியாயினு
மற்றெனக்கைநீ சொனனவொரு வார்த்தையினை
மலையிலக கெணநம் பினேன
மந்த்ரகுருவேயோகதந்தரகுருவேமூலன்
பரபிலவருமௌனகுருவே (௰)

மௌனகுருவணக்கம்-முற்றியது ஆக-௪௬



## கருணாகரக்கடவுள்.

நிர்க்குணநிராமயநிரஞ்சனநிராலம்ப
நிர்விஷய கைவல்யமா
நிஷகளவசஙகசஞ்சலரகிதநிர்வசன
நிர்த்ததொந்தநித்தமுத்த
தற்பரவிஸ்வாதீதவ்யோமபரிபூரண
சாதானந்த ஞானபகவ

சமபுசிவசங்கரசர்வேச வென்றுநான்
சர்வகாலமுநினைவனோ
வறபுதவகோசர நிவர்த்திபெறுமன்பருக
கானந்தபூர்த்தியான
வத்துவிதநிச்சயசொரூபசக்ஷாத்கார
வனுபூதியனுரூதமும்
கற்பனையறககாணமுககணுடன்வடநிழற்
கண்ணூடிருந்தகுருவே
கருதரியசிறசபையிலானந்தநிர்த்தமிடு
கருணாகரககடவுளே [க]

மணாணுதியைந்தொடுபுறத்திலுளகருவியும்
வாக்காதி சுரோத்ராதியும
வளர்கின்றசப்தாதி மனமாதிகலையாதி
மனனுசுததாதியுடனே
தொணணூறறொடாறுமற் றுள்ளனவுமெளனியாயச்
சொனனவொருசொறகொண்டதே
தூவெளிய தாயகண்டானந்தசுகவாரி
தோறறுமதை யென்சொல்லுகேனா
பண்ணுருமிசையினொடு பாடிப்படித்தருட்
பானமெநெறி நினறுதவருப
மக்குவவிசேஷராய்நெக்குநெககுருகிப
பணிநதெழுந் திருகைகூப்பிக
கண்ணுறுகளைபுரளநின்றவனபரையெலாங
கைவிடாக்காட்சியுறவே
கருதரிய சிறசபையிலானந்தநிர்த்தமிடு
கருணா கரக் கடவுளே [உ]

எல்லாமுனடிமையேயெல்லாமுனுடைமையே
யெல்லாமு னுடைய செயலே
யெங்கணும்வியாபிநீயெனறுசொலுமியல்பென்
றிருககாதி வேதமெல்லாஞ்
சொலலொன் முறகியது மிககவுபகாரமாச
சொல்லிறந் தவருமவிண்டு
சொன்னவையுமிவைநலலகுருவானபேருந
தொகுத்தநெறிதானுமிவையே
யல்லாமலிலலையென்நன்றாவறிந்தே
நமிநதபடிநின்றுசுகநா
னுகாதவண்ணமேயிவ்வணணமாயினே
னதுவுநின தருளென்னவே

கல்லாதவறிஞனுக் குள்ளேயுணர்த்தினை
கதிக்குவகையேது புகலவாய்
கருதரியசிற்சபையி லானந்தநிர்த்தமிடு
கருணாகரக கடவுளே (௯)

பட்டப்பகற்பொழுதை யிருளென்றமருளாதம
பக்ஷமோ வெனது பக்ஷம்
பார்த்தவிடமெங்கணுங் கோத்தநிலைகுலையாது
பரமவெளியாக வொருசொற்
றிட்டமுடன்மௌனியா யருளசெயதிருகவுஞ்
சோாமலாரா கநான.
சிறுவீடுகட்டியதி னடிசேற்றையுண்டுண்டு
தேக்குசிறி யாாகள்போல
நட்டணையதாக்கற்ற கல்வியும்விவேகமு
நன்னிலய மாகவுன்னி
நானென்று நீயென் றிரண்டில்லையென்னவே
நடுவேமூளாதத மனைதக்
கட்டவறியாமலே வாடினேனெப்போது
கருணைக் குறித்தாவனே
கருதரியசிற்சபையி லானந்தநிர்த்தமிடு
கருணா கரக கடவுளே (௪)

மெய்விடாநாவுள்ள மெய்யருளிருந்துநீ
மெய்யான மெய்யை யெல்லா
மெயயெனவுணர்த்தியது மெய்யிதற்கையமிலே
மெயயேது மறியாவெறும்
பொயவிடாப்பொய்யினே னுள்ளத்திருந்துதான
பொய்யானபொய்யை யெல்லாம்
பொய்யெனுவண்ணமேபுகலவைத்தாயெனிற
புன்மையேனென்செய் குவேன
மைவிடாதெழுநீல கண்டகுருவேவிஞ்ஞு
வடிவான ஞானகுருவே
மலர்மேவிமறையோது நான்முகக்குருவே
மதங்கடொறு நின்றகுருவே
கைவிடாதேயெனற வன்பருககன்பாய்க
கருத்துா ணர்ந்து குருவே
கருதரியசிறசபையி லானந்தநிர்த்தமிடு
கருணா கரக்கடவுளே (௫)

பண்ணேனுனக்காக பூசையொருவடிவிலே
பாவித் திறைஞ்சு வாங்கே

பார்க்கின்ற மலரூடுநீயே யிருத்தியப்
　　பனிமலரெடுக்கமனமு
நண்ணேனலாமலிருகைதான் குவிக்கவெனி
　　னாணுமென்னுளநிற்றிநீ
நான்கும்பிடும்போ தரைக்கும்பிடாதலா
　　னான்பூசைசெயயன முறையோ
விண்ணெவி னாதியாம்பூதமேநாதமே
　　வேதமேவேதாந்தமே
மேதககேளவியே கேள்வியாம்பூமிக்குள்
　　வித்தேயவித்தினமுளையே
கணணேகருத்தேயெ னண்ணேயெழுத்தே
　　கதிககான மோனவடிவே
கருதரிய சிறசபையி லானந்தநிரத்தமிடு
　　கருணா கரக கடவுளே [௬]

சந்ததமும் வேதமொழி யாதொன்றுபற்றினது
　　தானவந்து முற்றுமெனலாற்
சகமீ திருந்தாலுமரணமுண்டெனபது
　　சதாநிஷடர்நினைவதிலலை
சிந்தையறி யார்க்கீது போதிப்பதல்லவே
　　செப்பினும் வெகுதாக்கமாந்
திவ்யகுண மார்க்கண்டர்சுகாதிமுனிவோர்கள்
　　சித்தாந்தநித்யரலவோ
விந்த்ராதிதேவதைகள பிரமாதிகடவுள
　　ரிருககாதி வேதமுனிவ
ரெண்ணரிய கணநாதா நவநாதசித்தர்கள்
　　விரவிமதியாதியோரகள
கந்தருவாகினராகள மற்றையர்களியாவருங
　　கைகுவித்திடுதெய்வமே
கருதரிய சிற்சபையிலானந்தநிர்த்தமிடு
　　கருணாகரககடவுளே (௭)

துள்ளுமறியாமனதுபலிகொடுத்தேன்கர்ம
　　துஷ்டதே வதைகளிலலை
துரியநிறை சாந்ததேவதையாமுனககே
　　தொழும்பனன வபிஷேகநீ
ருள்ளுறையி லென்னாவிநைவேதநியப்ராண
　　னோங்குமதிதூபதீப
மொருகாலமன்றிதுசதாகாலபூசையா
　　வொப்புவித் தேன்கருணைசுரா

தெள்ளிமறை வடியிட்ட வமுதப்பிழம்பே
தெளிந்ததேனே சீனியே
திவ்யரச மியாவுந்திரண்டொழுகுபாகே
தெவிட்டாதவனந்தமே
கள்ளமறிவூடுமெள்ளமெள வெளியாய்க்
கலக்கவரு நல்லுறவே
கருதரியசிற்சபையிலானந்தநிர்த்தமிடு
கருணாகரக்கடவுளே (அ)

உடல்குழையவெனபெலாநெக்குருக விழிநீரக
ளூற்றென வெதும்பியூற்ற
ஊசிகாந்தத்தினைக் கண்டணுகல்போலவே
யோருறவு முன்னியுன்னிய
படபடெனநெஞ்சம்பதைத்துணைணநெகுறப்
பாடியாடிக்குதித்துப்
பணிமதி முகத்திலேநிலவனையபுன்னகை
பரப்பியார்த்தார்த்தெழுந்து
மடலவிழுமலரனைய கைவிரித்துக்கூப்பி
வானேயமானிலமே
மழையேமழைத்தாரை வெள்ளமேநீடூழி
வாழியெனவாழ்த்தியேத்து
கடன்மடைதிறந்தனைய வன்பரனுபவகெளிமை
கண்டெனெஞ்சநாகெளிமையோ
கருதரியசிற்சபையிலானந்தநிர்த்தமிடு
கருணாகரக்கடவுளே (௯)

இங்கற்றபடியங்குமெனவறியுநல்லறிஞ
ரெக்காலமுமமுதவுவா
ரின்சொற்றவறாபொய்ம்மையாமிழுக குரையா
ரிரங்குவார் கொலைகள பயிலார்
சங்கற்பசித்தரவருள்ளக்கருத்திலிலுறை
சாட்சிநீ யிகபரத்துஞ
சந்தான கற்பகதெசிவாயிருந்தே
சமஸ்தவினைபமுழுதவுவாய்
சிவகத்தையொததனைப் பாயவருவினையினைச்
சேதிக்கவருசிம்புளே
சிந்தாகுலததிமிரமகலவருபானுவே
தீனனேன்கரையேறவே
கங்கற்றபேராசை வெள்ளத்தின்வளரருட்
கனவட்டக்கப்பலே

கருதரியசிற்சபையிலானந்தநிர்த்தமிடு
கருணாகரக்கடவுளே (௰)

கருணாகரக்கடவுள்-முற்றியது ஆக-௫௬.

# சித்தர்கணம்

திகைகொடுதிகந்தரமும் மனவேகமென்னவே
சென்றோடியாடிவருவீர்
செம்பொன்மகமேருவொடு குணமேருவென்னவே
திகழ்துருவனளவளாவி
யுகரமிகுசக்கரதரனென்னவளிநிர்ப்பீர் கையி
லுத்தமிழமாசமனமா
வோரேழுகடலையும் பருகவல்லீரிந்த
ரவலகுமயிராவதமுமே
கைக்கெளியபந்தா வெடுத்துவிளையாடுவீர்
ககனவட்டத்தையெல்லாங்
கடுகிடையிருத்தியே யஷ்டகுலவெற்பையுங்
காட்டுவீர் மேலுமேலு
மிகசித்திகளெலாம் வல்லீரடிமைமுன்
விளங்கவரி சித்தியிலையோ
வேதாந்த சித்தாந்த சமரசநன்னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே (க)

பாட்டளிதுதைந்துவளர் கற்பகநீழலைப்
பாரினிடைவரவழைப்பீர்
பத்மநிதி சங்கநிதியிருபாரிசத்திலும்
பணிசெயுந்தொழிலாளராப்
கேட்டதுகொடுத்துவரநிற்கவைப்பீர் பிச்சை
கேட்டுப் பிழைப்போரையும்
கிரீடபதியாகக்குவிராகதபாந்த
கேணியிடைமூழ்கவைப்பீ
ரோட்டினையெடுத்தாயிரத்தெட்டுமாற்றுக
வொளிவிடும் பொன்னாக்குவீ
ருரகனுமிளைப்பாறயோகதண்டத்திலே
யுலகுசுமையாகவருவான்
மீட்டிடவும்வல்லீர் மௌனமனக்கல்லையனல்
மெழுகாக்கிவைப்பதரிதோ
வேதாந்தசித்தாந்தசமரசநன்னிலைபெற்ற
வித்தகச்சித்தர்கணமே (உ)

பாரொடுநன் னீராதி யொன்றுடொன் றாகவே
பற்றிலய மாகு போது
பரவெளியின்மருவுவீர கற்பாந்தவெள்ளம்
பரந்திடினதற்குமீதே
நீரிலுறை வண்டாய்த்துவண்டுசிவயோகநிலை
நிற்பீர் விகற்ப மாகி
நெடியமுகிலேழும் பரந்துவருஷிக்கிலோ
நிலவுமதி மண்டலமதே
பூரண விளங்குவீர் பிரமாதிமுடிவிலவிடை
யூர்தியருளாலுலவுவீ
ருலபங்கள்கீழ்மேலதாகப் பெருங்காற்
றுலாவினற்.றுரணையினான்
மேருவென வசையாம னிற்கவல்லீருமது
மேதக்கசித்தியெளிதோ
வேதாந்த சித்தாந்த சமரசனன்னிலைபெற்ற
வித்தகச்சித்தர் கணமே [௫]

எண்ணரியபிறவிதனின் மானிடப் பிறவிதா
னியாதினும் மரிதரிதுகா
ணிப்பிறவி தப்பினாலெப்பிறவி வாய்க்குமோ
வேதுவருமோ வறிகிலேன்
கண்ணகனிலத்துநா னுள்ளபொழுதேயருட்
ககனவட்டத்தினின்று
காலூன்றிநின்றுபொழியானந்தமுகிலொடு
கலந்துமதியவச முறவே
பண்ணுவதுநன்மையிந்நிலைபதியுமட்டுமே
பதியாயிருந்ததேகப்
பவுரிகுலை யாமலேகௌரிகுண்டலியாயி
பண்ணவிதனருளினாலே
விண்ணிலவுமதியமுதமொழியாது பொழியவே
வேண்டுவேனுமதடிமைநான்
வேதாந்த சித்தாந்த சமரசநன்னிலைபெற்ற
வித்தகசித்தர்கணமே (௬)

பொய்திகழுமுலகநடை யென்சொல்கேனென்சொ
ல்கேன் பொழுதுபோக்கே தென்னிலோ
பொய்யுடனிமித்தம்புசிப்புக்கலந்திடல்
புசித்தபின்கண்ணுறங்கல்
கைதவமலாமலிது செய்தவமதல்லவே
கண்கெட்டபேர்கரும்வெளியாய்க்

# சித்தர் கணம்

கண்டதிலும் விண்டதைக் கண்டதுமின்றல்லக்
காலமோ வதையறிகிலேன்
மைதிகழு முகிலினங் குடைநிழற் றிடவட்ட
வரையினெடு செம்பொன்மேரு
மால்வரையினை முதுகூடும் யோகதண்டகோல்
வளைந்துசெய விருதுகாட்டி
மெய்திகழு மஷ்டாங்கயோக பூமிக்குள்வளர்
வேந்தரே குணசாந்தரே
வேதாந்த சித்தாந்த சமரசநன்னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே (௫)

கெசதுரகமுதலான சதுரங்கமனமாகி
கேள்வியி னிசைநதுநிறயக்
கெடிகொண்டதலமாறு முமமணடலத்திலுங்
கிள்ளாகருசெலலமிக்க
தெசவிதம தாயநின்றநாதங்க ளோவிடச
சிங்காசனாதிபர்களாய்த்
திகழுத்திகந்தமும்பூரண மதிக்குடை
திகழநிட வசந்தகால
மிசையமலா மீதுறை றமனம்போலவானந்த
மிதயமேறகொளளுமவண்ண
மென்றைகருமறியாத சிவராச யோகமா
மிந்த்ராதி தேவர்களெலாம்
விசயசய சயவென்ன வாசிசொலவேகொளு
விருககுறும பெருமையெளிதே
வேதாத்தசித்தாந்தசமரசநனனிலைபெற்ற
வித்தகச சிததாகணமே. (௬)

ஆணிலேபெணணிலேயென்போலவொருபேதை
யகிலத்தின மிசையுள்ளதோ
வாடியகறங்குபோலோடியுழல் சிந்தையை
யடக்கியொரு கணமேனும்யான்
காணிலேன் றிருவருளையல்லாதுமௌனியாய்க்
கண்மூடியோடு மூசசைக்
கட்டிக்கலமாதிலய முட்டவே மூலவெங்
கனலினை யெழுப்பநினைவும்
பூணிலேனித்தைநாட் கற்றதுங்கேட்டதும்
போக்கிலேபோகவிட்டுப்
பொய்யுலகநடையினேனுயினுங்கடையான
புன்மையே னின்னமின்னம்

வீணிலேயலையாமன் மலையிலக்காகநீ
வெளிப்படத் தோற்றல்வேண்டும்
வேதாந்தசித்தாந்த சமரசநன்னிலைபெற்ற
வித்தகச்சித்தர்கணமே. [எ]

கன்னலமு தெனவுமுக்கனியெனவும்வாயூறு
கண்டெனவுமடியெடுத்துக்
கடவுளர் கடந்ததலவழுதமுதுபேய்போற்
கருத்திலெழு கினறவெல்லா
மென்னதறி யாமையறிவென்றுமிருபகுதியா
வீடுதமிழென்றமிழினுக
கின்னல்பகராதுலகமாராமைமேலிட்
டிருத்தலாவித்தமிழையே
சொனனவணியாவனவன் முதநிசித்திகளெலாந்
தோயந்தநெறி யேயபடித்தீா
சொலலுமென வவர்நீங்கள்சொன்னவலையிற்சிறிது
தோயந்தகுணசாந்தனெனவே
மின்னல்பெறவேசொலலவசசொல்கேட்டடினமமனம்
விகசிப்ப வெந்தநாளோ
வேதாந்தசித்தாந்தசமரசநன்னிலைபெற்ற
வித்தகசசித்தர்கணமே. [அ]

பொற்பினெடுகைகாவில வன்ளுகிர்படைத்தலாற்
போந்திடையொடுககமுறலாற்
பொலிவான வெண்ணீறுபூசியேயருள்கொண்டு
பூரித்த வெண்ணீரமையா
லெற்படவிளங்குககனத்திலிமையாவிழி
யிசைந்துமேனேககமுறலா
லிரவுபகலிருளான கனதந்திபடறாறி
யிதயங்களித்திடுதலாற
பற்பல விதங்கொண்ட புலிகலையினுரியது
படைத்துப்ரதாபமுறலாற்
பனிவெயில்கள்புகுதாமனெடியவரன்றொடர்நெடிய
பருமரவனங்களாறும்
வெற்பினிடையுறைதலாறறவராஜசிங்கமென
மிக்கோருமைப்புகழ்வார்கண்
வேதாந்தசித்தாந்தசமரசநன்னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே. [௯]

கல்லாதயோர்களோநல்லவர்க ணல்லவர்கள்
கற்றுமறிவிலலாதவென்

கன்மத்தையென்சொல்வன் மதியையென்சொல்லு
வேன்கைவல்ய ஞானநீதி
நல்லோருரைக்கிலோ கன்மமுக்கியமென்று
நாட்டுவேன் கர்மமொருவ
னட்டிடினலோபழைய ஞானமுக்கியமென்று
நவிலுவேன் வடமொழியிலே
வல்லானொருத்தன் வரவுந்த்ராவிடத்திலே
வந்ததா விவகரிப்பேன்
வல்லதமிழறிஞர்வரி னங்ஙனேவடமொழியின்
வசனங்கள் சிறிதுபுகல்வேன்
வெல்லாமலெவரையு மருட்டிவிடவகைவந்த
வித்தையென் முத்திதருமோ
வேதாந்தசித்தாந்த சமரசநன்னிலைபெற்ற
வித்தகச்சித்தர் கணமே [௰]

சித்தர்கணமுற்றுப்பெற்றது ஆ. ௬௬

# ஆனந்தமானபரம்.



கொல்லாமையெத்தனை குணக்கேட்டைநீக்குமக்
குணமொன்று மொன்றிலேன்பால்
கோரமெத்தனைபக்ஷ பாதமெத்தனையவம்
குணங்களெத்தனை கொடியபாழ்ங்
கல்லாமையெத் தனையகந்தையெத்தனைமனக்
கள்ளமெத்தனை யுள்ளசற்
காரியஞ்சொலிடினு மறியாமையெத்தனை
கதிக்கென் றமைத்தவருளிற்
செல்லாமையெத்தனைவிர் தாகோஷ்டியென்னிலோ
செலவதெத் தனைமுயற்சி
சிந்தையெத்தனைசலன மிந்த்ரசாலம்போன்ற
தேகத்தில் வாஞ்சைமுதலா
யல்லாமையெத்தனை யமைத்தனையுனக்கடிமை
யானே னிவைக்குமாளோ
வண்டபகிரண்டமு மடங்கவொருநிறைவாகி
யானந்த மானபரமே [க]

பொருளாகிமருளாகி யுழலுமனமாயமனஞ்
சோர்ந்துவளர் சித்தாகியச்
சித்தெலாஞ்சூழ்ந்தசிவ சித்தாய்விசித்ரமாய்த்
திரமாகி நானாவிதப்

பொருளாகியப்பொருளை யறிபொறியுமாகியைம்
புலனுமா யைம்பூதமாய்ப்
புறமுமா யகமுமாய்த் தூரமுஞ்சமீபமாய்ப்
போக்கொடு வரத்துமாகி
யிருளாகியொளியாகி நன்மைதீமையுமாகி
யின்றாகி நாளையாகி
யென்றுமாயொன்றுமாய்ப் பலவுமாயாவுமா
யிவையல்ல வாயநின்னை
யருளாகிநின்றவர்க ளறிவதல்லாலொருவ
ரறிதற் கெளிதாகுமோ
வண்டபகிரண்டமுமடங்க வொருநிறைவாகி
யானந்த மானபரமே. [௨]

மாறுபடுதர்க்கந் தொடுக்கவறிவார்சாண்
வயிற்றின பொருட்டதாக
மண்டலமும்விண்டலமு மொன்றாகி மனதுமுல
மாலாகிநிற்கவறிவார்
வேறுபடுவேடங்கள்கொள்ளவறி வாரொன்றை
மெணமெணன் றகம்வேறதாம்
வித்தையறிவாரெமைப் போலவே சந்தைபோன்
மெய்ந்நூல் விரிக்க வறிவார்
சீறுபுலிபோற்சீறி மூச்சைப்பிடித்துவிழி
செக்கச் சிவக்கவறிவார்
திறமென்று தந்தம் மதத்தையேதாமத
செய்கைகொடு முளறவறிவா
ராறுசமயங்கடோறும வேறுவேறாகிவிளை
யாடுமுனை யாவரறிவா
ரண்டபகிரண்டமு மடங்கவொரு நிறைவாகி
யானந்த மானபரமே [௩]

காயிலையுதிர்ந்தகனி சருகுபுனன்மண்டிய
கடும்பசிதனைக்கடைத்துங்
கால்வயிறுமுழையிற் கருங்கலபோலசையாது
கண்மூடி நெடிதிருந்தும
தீயினிடைவைகியுந் தோயமதி மூழ்கியுந்
தேகங்களென் பெலும்பாய்த
தெரியநின்றுமொன்னிமயாகக்கூடாகக்குருவி
தெற்றவெயி லூடிருந்தும்
வாயுவையடக்கியுமனதினையடக்கியு
மௌனத்திலே யிருந்து

மதிமண்டலத்திலே கனல்செல்லவமுதுண்டு
        வானமூடிரிந்துவறிந்
ராயுமறைமுடிவான வருளுடி னாடிமை
        யகிலத்தைநாடன் முறையோ
வண்டபகி ரணடமுமடங்கவொருநிறைவாகி
        யானந்தமானபரமே. [ச]

சுத்தமுமசுத்தமுந் துக்கசுக பேதமுந்
        தொந்தமுட னிரத்தொந்தமும்
ஸ்தூலமொடுசூக்ஷமமு மாசையுநிராசையுஞ்
        சொல்லுமொருசொலலினமுடிவும்
பெத்தமொடு முத்தியும் பாவமொடுபாவமும்
        பேதமொடபேதநிலையும்
பெருமையொடுசிறுமையுமருமையுட னெளிமையும்
        பெண்ணினுடனாணுமற்று
நித்தமு மனித்தமுமஞ்சனநிரஞ்சனமு
        நிஷ்களமு நிகழ்சகளமு
நீதியுமனீதியு மாதியொடனாதியு
        நிர்விஷய விஷயவடிவு
முத்தனையுநீயல தௌத்தனையுமில்லையெனின்
        யாங்களுனையனறியுண்டோ
வண்டபகிரண்டமு மடங்கவொருநிறைவாகி
        யானந்தமானபரமே (௫)

காராருமாணவக்காட்டைக்களைந்தறக்
        கண்டகங் காரமென்றும
கலையபிளந்துநெஞ்சகமானபூமிவெளி
        காணதிருத்திமேன்மேற
பாராதியறியாத மோனமாம்வித்தைப்
        பதிததன்புநீராகவே
பாச்சியதுபயிராகு மட்டுமோமாயைவன
        பறவையணு காதவண்ண
நேராகநின்றுவிளை போகம்புசித்துண்ட
        நின்னன்பர் கூட்டமெய்த
நினைவினபடிக்குநீ முன்னின்றுகாப்பதே
        நின்னருட் பாரமென்று
மாராறுமறியாத சூதானவெளியில்வெளி
        யாகினற துரியமயமே
யண்டபகிரண்டமு மடங்கவொருநிறைவாகி
        யானந்த மானபரமே (கூ)

வானாதிபூதமா யகிலாண்டகோடியாய்
மலையாகி வளைகடலுமாய்
மதியாகியிரவியாய மறுளவெலாமாகி
வான்கருணை .வெள்ளமாகி
நானாகிநின்றவனு நீயாகிநின்றிடவு
நானென்ப தறிந்திடாதே
நானெனக்குளறி நானாவிகாரியாய்
நானறிந் தறியாமையாய்ப்
போனாலதிட்டவழி வெல்லவெளிதோயகற
பொழுதுபுகு முன்கண்மூடிப்
பொயததுயிலகொள்வானறனை யெழுப்பவசமோவினிப்
போதிப்ப தெந்தநெறியை
யானாலுமெனைகொடுமை யனியாயமனியாய
மாராபாலெடுத்து மொழிவே
னண்டபகிரண்டமு மடஙகவொருநிறைவாகி
யானநத மானபரனே (௭)

பொய்யினேன்புலையினேன் கொலையினேனின்னருள்
புலப்படவறிந்து நிலையாப்
புன்மையேனகலாத நன்மையேனன்மைபோற்
பொருளலாப் பொருளைநாடும்
வெய்யனேன்வெகுளியேன் வெறியனேன்சிறியனேன்
வினையினே னென்றெனைநீ
விட்டுவிடநினைவையேற நட்டழிவதல்லாது
வேறுகதி யேதுபுகலாய்
துய்யனேமெய்யனே யுயிரினுக்குயிரான
துணைவனே யிணையொன்றிலாத்
துரியனேதுரியமுங் காணாவதிதனே
சுருதிமுடி மீதிருந்த
வையனேயப்பனே யெனுமறிஞரறிவைவிட்
டகலாத கருணைவடிவே
யண்டபகிரண்டமு மடஙகவொருநிறைவாகி
யானநத மானபரனே (௮)

எத்தனைவிதங்கடான் கற்கினுங்கேட்கினுமென்
னிதயமு மொடுங்கவில்லை
யானெனுமகந்தைதா னென்னளவுமாறவிலை
யாதினும் மபிமானமென்
சித்தமிசைகுடிகொண்ட தீமையோடிரக்கமென்
சென்மத்து நானறிகிலேன

சிலமொடுதவவிரதமொருகனவி லாயினுந்
தெரிசனங்கண்டறியேன்
பொய்த்தமொழி யல்லான் மருந்துக்குமெய்ம்மொழி
புகன்றிடேனபிறாகேட்கவே
போதிப்பதல்லாது சுமமாவிருந்தருள்
பொருந்திடாப்பேதைநானே
யந்தனைகுணகேடர்கண்டதாக் கேட்டதா
வவனிமிசையுண்டோசொலா
யண்டபகிரண்டமு மடங்கவொரு நிறைவாகி
யானந்தமானபரமே. [௯]

எககாலமுநதனக கென்னவொருசெயலிலா
வேழைநீயென்றிருந்திட்
டெனதாவியுடலபொருளுமௌனியாய்வந்துகை
யேற்றுநம தென்றவென்னே
பொயககால தேசமும்பொய்ப்பொருளில்வாஞ்சையும்
பொய்யுடலைமெய்யென்னலும்
பொயயுறவுபற்றலும் பொய்யாகு நானென்னல்
பொய்யினும்பொய்யாகையான்
மைக்காவிருட்டனையவிருளில்லையிருவினைகள்
வந்தேறவழியு மில்லை
மனமில்லையமமனத்தினமில்லைவேறுமொரு
வரவில்லைபோக்குமில்லை
யக்காலமிககால மென்பதிலையெல்லா
மதீதமயமானதன்றோ
வண்டபகிரண்டமுமடங்கவொருநிறைவாகி
யானந்தமானபரமே. [௰]

ஆனந்தமானபர முற்றுப்பெற்றது ஆ-எக

## சுகவாரி

இனனமிதுகனிபாருகறகண்டுசீனிதே
னெனருசித்திடவலியவங்
கின்பஙகொடுத்தநினை யெங்ஙனமின்னன்ப
ரிடையறு துருகினாடி
புன்னியகருத்தவிழவுரைகுளறியுடபுலெங்கு
மோய்ந்தயர்ந்தவசமாகி
யுணர்வரியபேரின்பவனுபூதியுணர்விலே
யுணர்வார்க் குள்ளபடிகாண்

கன்னிகையொருத்திசிற் றின்பமவேம்பென் றும்
கைக்கொள்வள் பக்குவத்திற்
கணவனருள் பெறின்றுனே சொன்னவாறென்னென்க்
கருதி நகையாவளதுபோற்
சொன்னபடி கேட்குமிப்பேதைக்குநின் கருணை
தோற்றிற்சுகாரம்பமாஞ்
சுத்தநிர்க்குணமான பரதெய்வமேபராஞ்
சோதியே சுகவாரியே (க)

அன்பின்வழியறியாத மௌனதவதொடர்ந்தென்னை
யறியாதபக்குவத்தே
யாசைப்பெருக்கைப்பெருக்கொடுத்துநா
னற்றேனைலநதேனென
வென்புலமயங்கவே புத்தேற்றிவிட்டா
யிரங்கியொருவழியாயினு
மின்பவெள்ளமாகவந்துள்ளங்களிக்கவே
யெனைநீகலந்ததுண்டோ
தனபருவ மலருக்கு மணமுண்டுவண்டுண்டு
தண்முகைதனக்குமுண்டோ
தமியனேற்கிவ்வணந்திருவுளமிரங்காத
தன்மையாற றனியிருந்து
துனபமுறி னெங்ஙனேயறியாதவின்னன்பர்
சுகம்வந்து வாய்க்குமுரையாய
சுத்தநிர்க்குணமான பரதெய்வமேபராஞ்
சோதியே சுகவாரியே (உ)

கலலேனுமையவொரு காலத்திலுருகுமென்
கன்னெஞ்ச முருகவிலையோ
கருணைக்கிணங்காத வன்மையையுநான்முக
கற்பிக்கவோ நகடவுளோ
வல்லான்வகுத்ததேவாய்க்காலெனும்பொரு
வழக்குககிழக்கு முண்டோ
வானமாய் நின்றின்ப மவையாயிரங்கியெனை
வாழ்விப்பதுன்பாரங்காண்
பொல்லாதசேயெனிற்றுய்தள்ளனீதமோ
புகலிடம்பிறிது முண்டோ
பொய்வார்த்தை சொல்விலேயிருவருட்கயுநுமாய்ப்
புன்மையேனுவணங்தோ
சொல்லான் முழக்கிலோ சுகமில்லைமௌனியாய்ச்
சும்மா விருக்க வருளாய்

சுத்தநிர்க்குணமான பரதெய்வமேபரஞ்
    சோதியேசுகவாரியே. (௩)

என்பெலா நெக்குடைய ரோமஞ் சிலிர்ப்பவுட
    லிளகமனதழலின்மெழுகா
யிடையறாதுருகவருமழைபோலிரங்கியே
    யிருவிழிக ணீரிறைப்ப
வன்பினான் மூர்ச்சித்தவன்பருக்கங்களே
    யமிர்தசஞ்சீவி போல்வந்
தானந்தமழைபொழிவையுள்ளன்பிலாதவெனை
    யார்க்காகவடிமைகொண்டாய்
புன்புலான் மயிர்தோ னரம்பென்புமொய்த்திடு
    புலைக்குடிலி லருவருப்புப்
பொய்யல்ல வேயிதனை மெய்யெனறநமபியென்
    புந்திசொலுமோபாழிலே
துன்பமாயையோவா வுலகநடையைப்பவொரு
    சொற்பனத்திலும்வேண்டிலேன்
சுத்தநிர்க்குணமான பரதெய்வமேபரஞ்
    சோதியேசுக வாரியே. (௪)

வெந்நீர்பொருதெனுடல் காலின்முட்டைக்கவும்
    வெடுக்கெனறசைத்தெடுத்தால
விழியிமைதஙஙனே தண்ணருளைநாடுவேன்
    வேறொன்றையொருவர்சொல்லி
னக்நேரமையோவென முகம்வாடிநிற்பதுவு
    மையரின்னருளறியுமே
யானாலுமெத்தப் பயநதவனி யாயெனனை
    யாண்டநீகைவிடாதே
யிந்நேரமென்றிலையுடறசுமையதாகவு
    மெடுத்தாலிறக்கவென்றே
யெங்கெங்குமொருகோவையாயமுண்டாயினு
    மிறைஞசுசுகராதியான
தொன்னீர்மை யாளர்க்குமாளிடம்வகுத்தவரு
    டுணையெனறுநம்புகின்றேன்
சுத்தநிர்க்குணமான பரதெய்வமேபரஞ்
    சோதியேசுகவாரியே. (௫)

பறறுவனவறறிடு நிராசையென்றொருபூமி
    பற்றிப்பிடிக்கு மியோகப்
பரக்கிறபிராணலய மென்னுமொருபூமியினை
    பற்றின்மன மறுமென்னவே.

கற்றையஞ் சடைமௌனிதானேகனிந்தகனி
கனிவிக்கவுந்தகனிபோற்
கண்டதிங்கெறியெனத்திருவுளக்கனிவினொடு
கனிவாய்திறந்து மொன்றைப்
பெற்றவனுமல்லேன பெருதவனுமல்லேன்
பெருக்கத்த தவித்து ளறியே
பெண்ணீர்மையென்னவிரு கண்ணீரிறைத்துநான்
பேயபோ லிருககவுலகண்
சுற்றிநகைசெயயவே யுலையவிட்டாயெனிற்
சொலலவினி வாயுமுண்டோ
சுத்தநிர்கருணமான பரதெய்வமேபரஞ்
சோதியே சுகவாரியே (சு)

அரும்பொனே மணியே யெனன்பேயெனன்பான
வறிவே யெனறிவி னூறு
மானந்தவெள்ளமே யென்றென்றுபாடினே
னாடினே னாடினாடி
விரும்பியே கூவினே னுலறினேனலறினேன்
மெய்சிலிர்த் திருகை கூப்பி
விண்மாரியென்வெனிருகண்மாரிபெய்யவே
வேசற்றயர்ந்தே னியா
னிருமபுநேர்நெஞ்சககள்வனா னாலுமுனை
யிடைவிட்டு நின்ற துண்டோ
வென்றுநீயன்றுநா னுனனடிமை யல்லவோ
யாதேனுமறியா வெறுந்
துரும்பனே னென்னினுங கைவிடுதனீதியோ
தொண்டரொடு கூட்டுகண்டாய்
சுத்தநிர்க்குணமான பரதெயவமேபரஞ்
சோதியே சுகவாரியே (எ)

பாராதியண்டங்க ளத்தனையுமவைக்கின்ற
பரவெளியினுண்மை காட்டிப்
பறறுமனவெளிகாட்டி மனவெளியினிற்றோய்ந்த
பாவியேன்பரிசு காட்டித்
தாராளமாய்நிற்கநிசசிந்தைகாட்டிச்
சதாகாலநிட்டையெனவே
சகசநிலைகாட்டினை சுகாதீதநிலயந்
தனைக்காட்டநான் செல்லுமோ
காராரவெண்ணரு மனந்தகோ டிகணின்று
காலூன்றிமழைபொழிதல்போற்

கால்வீசி மின்னிப்படர்ந்துபரவெளியெலாங்
கம்மியானந்த வெள்ளஞ்
சோராதுபொழியவே கருணையினமுழங்கியே
தொண்டரைககூவுமுகிலே
சுத்தநிரகுணமான பரதெய்வமேபரஞ்
சோதியேசுக வாரியே. (௮)

பேதித்தசமயமோவொன்றுசொனபடியொன்று
பேசாதுதுற வாகியே
பேசாதபெரியோர்க ளிருவிகற்பத்தினாற்
பேசாகள்பரம குருவாய்ப்
போதிகரு மூக்கணிறைநோமையரய்க்கைக்கொண்டு
போதிபபதாச்சரியிலே
போககுவரவறவினைப நீககமறவசனமாய்ப
போதிப்பதெவரையனே
சாதித்தசாதனமு மியோகாகணமதென்று
சஙகிப்பராதலாலே
தானிலேதாளுயயாந்துவிடுவோமெனத்
தனியிருநதிடினங்ஙனே
சோதிகசமனமாஉயயதனையேவிளுலடிமை
சுகமாவதெப்படிசொலாய
சுத்தநிரகுணமானபரதெயவமேபரஞ
சோதியேசுகவாரியே. (௯)

அண்டமுடிதனனிலோ பகிரணடமதனிலோ
வலரிமணடல நடுவிலோ
வனனடுவிலோவமிர்தமதிநடுவிலோவன்ப
ரகமுருகிமலர்கடுவித
தெண்டமிடவருமூர்த்திநிலையிலோதிக்குந்
திகந்ததிலோவெளியிலோ
திகழவிந்துநாதநிலை தன்னிலோவேதாந்த
சித்தாந்தநிலைதனனிலோ
கண்டபலபொருளிலோ காரணநிலையெனக
கணடசூனியமதனிலோ
காலமொருமூன்றிலோ பிறவிநிலைதனனிலோ
கருவிகரணங்களோய்ந்த
தொண்டர்களிடததிலோநீவீற்றிருப்பது
தொழும்பனேற்குளவுபுகலாய
சுததநிரகுணமானபரதெய்வமேபரஞ
சோதியேசுகவாரியே. (௰)

ஆராலமகண்டிங் கருட்குருவாய் நீயொருகால்
வாராயோவந்து வருத்தமெல்லாந் தீராயோ
பூராயமாகவருட் பூரணத்தி லண்டமுதற்
பாராதிவைத்த பதியே பராபரமே. (௨)

வாழாதுவாழவுனை வந்தடைந்தோ ரெல்லாரு
மாழாழியென்ன வருளானாரழுககாறறே
டேழாயெனவுலக மேசுமினிநானொருவன்
பாழாகாவாருமுகம் பாரநீபராபரமே, (௩)

உள்ளத்தினுள்ளே யொளித்தென்னையாட்டுகின்ற
கள்ளககருணையையான காணுந்தரமாமோ
வெள்ளத்தைமாற்றி விடககுணபார்நஞ்சூட்டும்
பள்ளத்தினம்ன்போற பதைத்தேனபராபரமே. [௪]

வாவிக்கமலமலர் வண்டாய்த்துவண்டுவண்
டாவிககுணியாறவுனககன்புவைத்தாககஞ்சலெனபாய்
பூவிறகும்வான்கடையிற புல்விறபோராபோலவொன்றைப்
பாவிககமாட்டேன் பதியேபராபரமே (௫)

விண்ணாறுவெறபின் விழுந்தாங்கெனமார்பிற்
கண்ணாறுபாயசிடுமென காதலவெள்ளங்கண்டிலையோ
தண்ணாறுசாந்தபதத் தற்பரமேநால்வேதப்
பண்ணாறுமின்பப் பதியேபராபரமே. (௬)

கூடியநின்சீரடியார கூட்டமென்றோவாய்க்குமென
வாடியவென்னெஞ்சமுக வாட்டமுநீகண்டிலையோ
தேடியநின்சீரருளைத் திக்கனைத்துங்கைகுவித்து
பாடியநான்கண்டாய் பதியேபராபரமே. (௭)

நெஞ்சத்தினூடே நினைவாய்நினைவூடி
மஞ்சலெனவாழுமென தாவித்துணைநீயே
சஞ்சலமாற்றினையினிமேற றுயககுபசாரம்புகன்று
பஞ்சரிக்கநானார் பதியேபராபரமே. (௮)

புத்திநெறியாகவுனைப் போற்றிப்பலகாலு
முத்திநெறிவேண்டாத மூடனேனோகெடுவேன்
சித்திநெறிக்கென்கடவேன சீரடியார்க்கேவல்செய்யும்
பத்திநெறிக்கேனுமுகம் பார்நீபராமரமே. (௯)

கண்டறியேன்கேட டறியேன் காட்டுநினையேயிதயங்
கொண்டறியேன்முத்தி குறிக்குந்தரமுமுண்டோ
தொண்டறியாப்பேதைமையேன சொலலேனினியொன்மைஎல்லாம்
பண்டறிவாய்நீயே பகராய்பராபரமே. (௰)

இடமுறவே-முற்றுப்பெற்றது-ஆகூ ருகூஅ.
யகூ



## தன்வினை

கொச்சகக்கலிப்பா.

தன்னையறியத்தனதருளாற் றானுணர்ந்து
மன்னைப்பொருளெனவே வாழாமறபாழ்நெஞ்சே
பொன்னைப்புவியைமடப் பூவையரைமெய்யெனவே
யென்னைக்கவர்ந்திழுத்திட் டெனனபலன்கண்டாயே. (க)

தன்னை-முற்றுப்பெற்றது-ஆ-ருசுசு

## ஆக்குவை

ஆக்குவைமாயையாவு நொடியினிலதனைமாள
நீக்குவைநீக்கமிலலா நினைப்பொடுமறப்புமாற்றிய
போக்கொடுவரமின்றிப் புனிதநல்லருளானந்தம்
தாக்கவுஞ்செய்வாயன்றோ சச்சிதானந்தவாழ்வே. (க)

ஆக்குவை-முற்றுப்பெற்றது-ஆ-ருஎஎ

---

## கற்புறுசிந்தை

கற்புறுசிந்தைமாதர் கணவரையன்றிவேறோ
ரிற்புறத்தவரைநாடார் யாங்களுமின்பவாழ்வுந்
தற்பொறியாகநல்குந் தலைவநின்னலதோர்தெய்வம
பொற்புறக்கருதோங்கண்டாய் பூரணானந்தவாழ்வே. (க)

முருந்திளநகையார்பார முலைமுகந்தழுவிச்செவ்வாய
விருந்தமிர்தெனவருந்தி வெறியாட்டுகாளாய்நாளு
மிருந்தலோகாயுதப்பே ரினத்தனையிருந்தவேழை
பொருந்தவுங்கதிமேலுண்டோ பூரணானந்தவாழ்வே (உ)

தீதெலாமொன்றும்வன்மை செறிந்திருட்படலம்போர்த்த
பாதகசிந்தைபெறற பதகனுன்பாதநீழ
லாதரவடையவுள்ளன் பருள்கிலையாயின்மற்றியார்
போதனைசெய்யவலலார் பூரணானந்தவாழ்வே. (௩)

நாதனைநாதாதீத நண்பனைநடுவாய்நின்ற
நீதனைககலந்துநிற்க நெஞ்சமேநீவாவென்றால்
வாதனைபெருககியென்னை வசனுசெய்துமனந்துன்மார்க்க
போதனைசெய்தனன்றோ பூரணானந்தவாழ்வே (௪)

எண்ணியவெண்ணமெல்லா மிறப்புமேற்பிறப்புக்காசை
பண்ணியென்னறிவையெல்லாம் பாழாககியெனைப்பாழாக்குந்
திண்ணியவினையைக்கொன்று சிறியனையுய்யக்கொண்டார்
புண்ணியநினககேயன்றோ பூரணானந்தவாழ்வே (ரு)

பதிநீபத்திக்கான பலனுநீபலவாச்சொல்லுந்
சித்திநீசித்தர்சித்தித் திறமுநீதிறமார்மோன
முத்திநீமுத்திக்கான முதலுநீமுதன்மையான
புத்திநீயெனக்கொன்றுண்டோபூரணானந்தவாழ்வே
தாயினுமினியநின்னைச் சரணமடைந்தநாயேன்
பேயினுங்கடையனாகிப் பிதற்றுதல்செய்தனன்றோ
தீயிடைமெழுகாய்நொந்தேன் றெளிவிலேன்வினை
போயினதாற்றுகிலலேன்பூரணாநந்தவாழ்வே[காலம்

கற்புறுசிந்தை-முற்றுப்பெற்றது-ஆக-௱௭௭



## மலைவளர்காதலி

பதியுண்டுநிதியுண்டு புத்திரர்கண்மித்திரர்கள்
　　பக்கமுண்டெக்காலமும்
பவுசுண்டுதவிசுண்டு திட்டாந்தமாகயம
　　படரொருநிமிஷமணுகாக
கதியுண்டுஞானமாங் கதிருண்டுசதுருண்டு
　　காயசித்திகளு முண்டு
கறையுண்டகண்டர்பா லம்மைநின்னருளிற்
　　கருத்தொன்று முண்டாகுமே
நதியுண்டகடலெனச் சமயத்தையுண்டபர
　　ஞானவானந்த வொளியே
நாதாந்தரூபமே வேதாந்தமோனமே
　　நானென்னுமகந்தை தீர்த்தேன்
மதியுண்டமதியான மதிவதனவல்லியே
　　மதுசூதனன தங்கையே
வரைராஜனுக்கிருகண் மணியாயுதித்தமலை
　　வளர்காதலிப்பெண்ணுமையே. (க)

தெட்டிலேவலியமட மாதர்வாய்வெட்டிலே
　　சிற்றிடையிலே நடையிலே
சேலொத்தவிழியிலே பாலொத்தமொழியிலே
　　சிறுபிறைநுதற்கீற்றிலே
பொட்டிலேயவர்கட்டு பட்டிலேபுனைகந்த
　　பொடியிலே யடியிலேமேற்
பூரித்தமுலையிலே நிறமினுக்கிலேயிலே
　　புந்திதனை நுழையவிட்டு
நெட்டிலேயலையாம லறிவிலேபொறையிலே
　　நின்னடியார் கூட்டத்திலே

நிலைபெற்றவன்பிலே மலைவற்றமெய்ஞ்ஞான
ஞேயத்திலே யுனிருதாண்
மட்டிலேமனதுசெல நினதருளுமருளவையோ
வளமருவு தேவையரசே
வரைராஜனுக்கிருகண் மணியாயுதித்தமலை
வளர்காதலிப் பெணுமையே. (உ)

பூதமுதலாகவே நாதபரியந்தமும
பொய்யென் றெனைககாட்டியெங்
போதத்தினடுவாகி யடியீறுமிலலாத
போதபூரண வெளிகரு
ளேதுமறநிலலெனறுபாயமாவைத்துநினை
வெலலாஞ்செய வலலசித்தா
மின்பவுருவைத்தந்த வன்னையேநின்னையே
யெளியேன் மறந்துயவனே
வேதமுதலானநல் லாகமததனமையய
விளக்குமுட்கண்ணிலாரகரு
மிகநின்மகிமையைக கேளாதசெவிடர்கரும்
வீறுவாதம புகலும்வாயு
வாதநோயாளர்கரு மெடடாதமுககனுடை
மாமருந் துக்கமிாதமே
வரைராஜனுககிருகண் மணியாயுதிததமலை
வளாகாதலிப பெணுமையே (௩)

மிடியிட்டவாழகையா லுப்பிட்டகலமெனவு
மெயயெலா முள்ளுடைநது
வீறிட்டசெல்வாதந் தலைவாயிலவாசமாய
வேதனைகளுறவேதனுந்
துடியிட்டவெவ்வினையை யேவினனபாவிநான
றுடரிட்டதொழில்களெலலாந
துணடிட்டசாண்கும்பி யினபொருடடாயதுனை
தொண்டர்பணி செய்வதெனறோ
வடியிட்டசெந்தமிழி னருமையிடடாருரி
லரிவையோர் பரவைவாயி
லம்மட்டுமடியிட்டு நடைநடந்தருளடிக
ளடியீது முடியீதென
வுடியிடடமறையேசு பச்சிளங்கிள்ளையே
வளமருவு தேவையரசே

வரைராஜனுக்கிருகண் மணியாயுதித்தமலை
வளர்காதலிப் பெணுமையே (௪)

பூரணிபுராதனி சுமங்கலைசுதந்தரி
புராந்தகி திரியம்பகியெழிறு
புங்கவிவிளங்குசிவ சங்கரிசகஸ்ரதள
புஷ்பமிசை வீற்றிருக்கு
நாரணிமனாதீத நாயகிகுணாதீத
நாதாந்த சத்தியென்றுன்
னாமமேயுச்சரித் திடுமடியர்நாமமே
நானுச்சரிக்கவசமோ
வாரணிசடைக்கடவு ளாரணியெனப்புகழ
வகிலாண்ட கோடியீன்ற
வன்னையேயின்னையுங் கன்னியெனமறைபேசு
மானந்த ரூபமயிலே
வாரணியுமிருகொங்கை மாதர்மகிழ்கங்கைபுகழ்
வளர்மருவுதேவையரசே
வரைராஜனுக்கிருகண் மணியாயுதித்தமலை
வளர்காதலிப்பெணுமையே (௫)

பாகமோபெறவுனைப் பாடவறியேன்மலப்
பரிபாகம் வரவுமில்லை
பண்புமோசற்றுமிலை நியமமோசெய்திடப்
பாவியேன் பாபரூப
தேகமோதிடமில்லை ஞானமோகனவிலுஞ்
சிந்தியேன் பேரின்பமோ
சேரவென்றாற்களவு மனதுமோமெத்தவுஞ்
சிந்திக்கு தென்செய்குவேன்
மோகமோமதமோ குரோதமோலோபமோ
முற்றுமாச் சரியமோதான்
முறியிடடெனைக்கொள்ளு நிதியமோதேடவெனினோ
மூசுவரி வண்டுபோல்
மாகமோடவுமவல்லனெனையாளவல்லையோ
வளமருவு தேவையரசே
வரைராஜனுக்கிருகண் மணியாயுதித்தமலை
வளர்காதலிப் பெணுமையே (௬)

தூளேறுதூசிபோல் வினையேறுமெய்யெனுந்
தொகதினுடசிக்கிநாளுஞ்

கழலேறுகாற்றினிடை பழலேறுபஞ்செனச
சூறையிட் டறிவையெல்லா
நாளேறநாளேற வார்த்திகமெனுங்கூற்றி
னட்பேற வுள்ளுடைந்து
நயனங்களற்றதோ ரூரேதுபோலவே
நானிலந் தனிலலையவோ
வேளேறுதந்தியைக கனதந்தியுடன்வென்று
விறையேறு மாலைசூடி
விண்ணேருமேகங்கள வெந்பேறிமறைவுற
வெட்டிய கருங்கூந்தலாய
வாளேறுகண்ணியே விடையேறுமெம்பிரான்
மனதுக் கிசைந்தமயிலே
வரைராஜனுககிருண் மணியாயுதித்தமலை
வளர்காத லிப்பெணுமையே (எ)

பூதமொடுபழகிவள ரிந்திரியமாமயேய்கள்
புந்திமுத லானபேயகள்
போராடுகோபாதி ராக்ஷசப்பேய்களென்
போததைதை யூடழித்து
வாதனைவளாததிடச சதுரானவேதவஞ்சன்
வுதித்தானி வல்லவெலலாம்
வீழும்படிக்குனது மௌனமந்த்ராதிக்ய
விதைதயை வியந்தருள்வையோ
நாதவடிவாகிய மகாமந்த்ரரூபியே
நாதாந்த வெட்டவெளியே
நறசமயமானபயிர் தழையவருமேகமே
ஞானவானந்தமயிலே
வாதமிடுபரசமயம யாவுக்குமுணர்வரிய
மகிமைபெறு பெரியபொருளே
வரைராஜனுககிருகண் மணியாயுதித்தமலை
வளர்காதலிபபெணுமையே. (அ)

மலைவளர்காதலி-முற்றுப்பெற்றது-ஆக-௫அ௫

# அகிலாண்டநயாகி சந்தவிருத்தம்.

வட்டமிட்டடொளிர் பிராணவாயுவெனு
திகளமோடுகம னஞ்செய்யு
மனவெனுமபெரிய மத்தயானையையென்
வசமடக்கிடின்மூ மண்டலத்

திடடமுற்றவள ராஜயோகமிவன்
யோகமென்றறிஞர் புகழவே
யேழையேறுலகி னீடுவாழவனினி
யிங்கிதற்குமநு மானமோர்
பட்டவர்த்தனர் பராவுசகரதர
பாசயமான சுபயோகமும்
பாரகாவிய கவிதவநான்மறை
பராயணஞ்செய் மதியூகமு
மட்டசித்தியுந லண்பருககருள
விருதுகட்டியபொ னன்னமே
யண்டகோடிபுகழ் காவைவாழுமகி
லாண்டநாயகியெனமலைமயே (க)

அகிலாண்டநாயகி-சந்தவிருத்தம்-முற்றுப்பெற்றது-ஆடுஅசு

## பெரியநாயகி-விருத்தம்

காற்றைப்பிடித்து மட்கரகத்தடைத்தபடி
கனமப் புனற்குளூறுங்
கடைகெட்டநவவாயில பெற்றபசுமட்கலக
காயத்து ளேயிருத்திச
சோற்றைசசுமத்திநீ பந்தித்துவைககத்
துருத்திககுண் மதுவென்னவே
துள்ளித்துடித்தென்ன பேறுபெற்றேனருட்
டோயநீ பாய்சசல்செய்து
நாற்றைப்பதித்தென ஞானமாம்பயிரதனே
நாட்டிப் புலப்பட்டியு
நமனைதீப்பூடு மனுகாமன்முன்னின்று
நாடுசிவபோகமான
பேற்றைப்பகுத்தருளி யெனையாளவல்லையோ
பெரியவகி லாண்டகோடி
பெறறநாயகிபெரிய கயிலைமாநகர்மருவு
பெரியநாயகி யம்மையே' (க)

பெரியநாயகி-விருத்தம்-முற்றுப்பெற்றது-ஆடுஅள.

## தந்தைதாய்.

தந்தைதாய்மகவுமனை வாழ்க்கையாக்கை
சகமனைத்துமெளனியருடைமைத்தபோதே
யிந்திரசாலங்கனவு கானனீரா
யிருந்ததுவேயிவ்வியற்கை யென்னேயென்னே' (க)

என்னைநான் கொடுக்கவொருப்பட்டகால
மியாதிருந்தென் னெவைபோயென் னென்னைநீங்கா
வன்னைபோலருள்பொழியுங் கருணைவாரி
யானந்தப்பெருமுகிலே யரசேசொல்லாய் (உ)

அரசேநின்றிருக்கருணை யல்லாதொன்றை
யறியாதசிறியேனுனதினுன் முத்திக்
கரைசேரும்படிக்குனருட் புணையைக்கூட்டுங்
கைப்பிடியேகடைப்பிடியாக் கருத்துட்கொண்டேன் (ந)

கண்டேனிங்கென்னையுமென் றனையுநீங்காக்
கருணையுநின் றன்னையுநான் கண்டேன்கண்டேன்
விண்டேனென்றெனைப்புறம்பாத் தள்ளவேண்டாம்
விண்டதுநின் னருட்களிப்பின்வியப்பபாலன்றோ (ச)

ஓவென்றசுத்தவெளி யொன்றேநின்றிங்
குயிரையெல்லாம்வம்மினெனவுவட்டாவின்பத்
தேவென்றநீகலந்து கலந்துமுத்தி
சேர்த்தனையேற் குறைவாமோசெகவிலாசம் (ரு)

செகத்தையெல்லா மனுவளவுஞ் சிதறவண்ணஞ்
சேர்த்தணுவில் வைப்பையணுத்திரளையெல்லா
மகத்துவமாம்பிரமாண்டமாகசசெய்யும்
வல்வாநீநினைந்த வாறேயெல்லாம் (சு)

சொல்லாலே வாய்துடிப்பதல்லாநெஞ்சந்
துடித்திருகணீரருவிசொரியத்தேம்பிக்
கலலாலேயிருந்தநெஞ்சுங் கல்லான்முக்கட்
கனியேநெக்குருகிடவுங்காண்பேன்கொல்லோ (எ)

தந்தைதாய்-முற்றுப்பெற்றது-ஆகூ-ருகூச



# பெறறவட்கே

பெறறவட்கே தெரியுமந்தவருத்தம்பிள்ளை
பெறாப்பேதை யறிவாளோபேரானந்த
முற்றவர்க்கே கண்ணீர்கம் பலையுண்டாகு
முறாதவரே கன்னெஞ்சமுடையாராவர் (க)

ஆவாவென்றழுதுதொழுங் கையராகி
யப்பனே யானந்த வடிகளேநீ
வாவாவென் றவர்க்கருளுங்கருணையெந்தாய்
வன்னெஞ்சர்க் கிரங்குவதெவவாறுநீயே (உ)

நீயேயிங் கெளியேற்குந் தாகமோக
கினையூடே நின்றுணர்த்தி நிகழ்த்தலாலே

பேயேற்குந் தனக்கெனவோரன்புமுண்டோ
பெம்மானே யினனமன்பு பெருகப்பாராய் (௩)

பாராயோவென்றுயா மெல்லாமைய
பகருமுன்னே தெரியாதோ பாவியேன்முன்
வாராயோ வின்னமொரு காலானுலு
மலர்க்காலென் சென்னிமிசை வைத்திடாயோ. (௪)

வைத்திடுங்காலைப் பிடித்துக்கண்ணின் மார்பில்
வைத்தணைத்துக கொண்டு கையால்வளைத்துக்கட்டிச்
சித்தமிசைபபுக விருத்திப்பிடித்துக்கொண்டு
தியககமற வினபசுகஞ் சேர்வதனறோ. ௫

சேராமற சிறறினதனைப் பிரித்தெந்நாளுந்
திருவடிப்பே ரினததுடனேசேராவண்ண
மாராக நானலைந்தே னரசேநீதா
னறிந்திருந்து மாயையிலே னழுந்தவைததாய் ௬

வைத்தபொருளுடலாவி மூன்றுநின்கை
வசமெனவே யானகொடுக்க வாங்கிககொண்டு
சித்தமிசைப் புகுந்ததுதான் மெயயோபொயயோ
சிறியேற்கிங் குளவுரையாய திகையாவண்ணம் ௭

திகையாதோ வெந்நாளும் பேரானந்தத்
தெள்ளமுக முதவாமற் றிவலைகாட்டி
வகையாக வலககழிததா யுணடுடுதது
வாழந்தேனு னிரணடுதான மாடுபோலே ௮

மாடுமக்கள் சிற்றிடையார் சேமபொருளை
வைத்தகன தனமேடை மாடகூடம
விடுமெனபாற் றொடர்சசியோர் விடைவிடாமன்
மிக்ககதிவிட்டனறோ விளங்கலவேண்டும். ௯

விளங்கவெனக்குளளே விளங்காநின்ற
வேதகமே போதகமே விமலவாழவே
களங்கரகி தப்பொருளே யென்னை நீங்காக
கண்ணுதலே நாதாந்தக் காடசிப்பேறே ௰

நாதமேநாதாந்த வெளியேசுத்த
ஞாதுருவே ஞானமே ஞேயமேநல
வேதமே வேதமுடி வானமோன
வித்தேயிங் கென்னையினி விட்டிடாதே. ௰௧

பெற்றவட்கே-முற்றுப்பெற்றது ஆ-சுாசு

---

# கல்லாலின்.

---

கல்லாலினீழறனி லொருநால்வர்க்குங்
கடவுணியுணர்த்துவதுங் கைகாட்டென்றாற்
சொல்லாலே சொலப்படுமோ சொல்லுந்தன்மை
அரும்புபற்றிக கடல்கடக்குந் துணிபேயன்றோ ௧

அன்றேயாமோ வெனவுஞ் சமயகோடி
யத்தனையும்வெவ்வேறா யாற்றநேரே
நின்றேயே நினைபபெறுமா றெவ்வாறங்கே
நின்னருள்கொண் டறிவதல்லானெறிவேறுண்டோ. ௨

நெறிபார்க்கி னின்னையன்றியகிலம்வேறோ
நிலநீர்தீககால்வானுநீயலாத
குறியாது மிலலையென்றால் யாங்கள்வேறோ
கோதையொருகூறுடையாய் கூறாய்கூறாய் ௩

கூறாயவைம்பூதச் சுமையைத்தாங்கிக்
குணமிலாமனமெனும் பேய்க்குரங்கின்பின்னே
மாறாதகவலையுடன் சுழலவென்னை
வைத்தனையேபரமேநின் மகிமைநன்றே ௪

நன்றெனவுந்தீதெனவு மெனக்கிங்குண்டோ
நானாகிநீயிருந்த நியாயஞ்சற்றே
யின்றெனக்குவெளியானா லெல்லாம்வல்ல
விறைவாநின்னடியருட னிருந்துவாழவேன் ௫

வாழ்வெனவுந்தாழ்வெனவு மிரண்டாப்பேசும்
வையகத்தா கற்பனையாம் மயக்கமான
பாழ்வலையைக்கிழித்துதறிச் செயலபோய்வாழப்
பரமேநினானந்தப் பார்வையெங்கே ௬

எங்கேயெங் கேயருளென் றைமையிரந்தா
னேழையிவனெனவுமென் னிசைகூறு
மங்கேயெங்கேயெளிவந் தென்னையாண்ட
வாரமுதேயுனைக்காண்பா னலந்துபோனேன் ௭

போனநாட் கிரங்குவதே தொழிலாயிங்ஙன்
யொருந்து நாளத்தனையும் போக்கினேனென்
ஞானநாயகனேநின் மோனஞான
நாட்டமுற்று வாழ்ந்திருக்கு நாளெந்நாளோ ௮

நாட்பட்டகமலமென்ன விதயமேவு
நறுந்தேனேதுன்மார்க்க நாரிமார்கண்
வாட்பட்டகாயமிந்தக் காயமென்றோ
வன்கூற்றுமுயிர்பிடிக்க வருமந்நீதி ௯

நீதியெங்கே மறையெங்கே மண்விண்ணெங்கே
நித்தியா மவர்களெங்கே நெறிதப்பாத
சாதியெங்கே யொழுக்கமெங்கே யாங்களெங்கே
தற்பரநீ பின்னுமொன்றைச சமைப்பாதானல். (ய)

ஆனலும் யானெனதிங் கற்றவெல்லை
யதுபோது மதுகதிதா னல்லவென்று
போனலுங யாண்போவ னல்லான் மோனப்
புண்ணியனே வேறுமொரு பொருளைநாடேன், (யக

பொருளேநின் பூரணமே விட்டகாலம்
போகருவா வுண்டோதற போதமுண்டோ
விருடானுண் டோவலலால் வெளிதானுண்டோ
வினபமுண்டோ துன்பமுண்டோ யாமநகுண்டோ யஉ

உண்டோநீ படைத்தவுயிர்த் திரளிலென்போ
லொருபாவி தேகாதி யுலகம்பொய்யாக
கண்டேயுமெள்ளவுத் துறவுமின்றிக்
காசுனிககு ளலைந்தவராா காட்டாய்தேவே யங

தேவரெல்லாந்தொழுசசிவந்தசெந்தாண்முக்கட
செஙகரும்பேமொழிககுமொழிதிதிப்பாக
மூவர்சொலுந் தமிழ்கேட்குந்திருசசெவிக்கே
மூடனேனபுலம்பியசொன் முற்றுமோதான். யச

முற்றுமோவெனக்கினியா னந்தவாழவு
மூதறிவுக்கினியாயநின் முளரித்தாளிற
பற்றுமோ சறறுமில்லை யையோவையோ
பாவிபடுங கடகலககம பார்ததிலாயோ. யரு

பார்த்தனவெல் லாமழியு மதனைச்சுட்டிப
பாராதே பார்த்திருககப ரமேமோனமூர்த்திவடி வாயுணர்த்துங் கைககாட்டுணமை
முற்றுயென தல்லலவினைமுடிவதெனறோ யசு

என்றுனைநீயனறுளம்யா மென்பதென்னை
யிதுநிற்கவெலலந்தா மில்லையென்றோ
பொனறிடசசெய் வல்லவனியெமைபபடைக்கும்
பொற்புடையாயென்னினதுபொருந்திடாதே. யஎ

பொருந்துசகமனைத்திணையும்பொய்பொய்யெனறு
புகனறபடிமெய்யென்றே போதநபத்
திருந்தபடியெனறிருப்ப தன்றேயன்றே
தெமபெருமான் யான்கவலை யொய்தாக்காலம். யஅ

காலமே காலமொரு மூன்றுங்காட்டுங்
காரணமே காரணகாரியங்களில்லாக
கோலமேயெனைவாவாவென்றுகூவிக
குறைவறநின்னருள்கொடுத்தாற் குறைவோசொல்லாய்

சொல்லாய தகுதியெல்லாங்கடந்துநின்ற
சொரூபானந்தச்சுடரே தொண்டனேனைக
கல்லாகப்படைத்தாலு மெத்தநன்றே
கரணமுட னுறவுகலக்கமாட்டேன் ௨௰

கலங்காதநெஞ்சுடைய ஞானதீரர்
கடவுளுனைக் காணவேகாயமாதி
புலங்காணாநானொருவன் ஞானம்பேசி
பொய்க்கூடு காத்ததென்னபுதுமைகண்டாய். ௨௧

கண்டிலையோ யான்படும்பாடெல்லாமூன்று
கண்ணிருந்துந்தெரியாதோ கசிந்துள்ளன்பார
தொண்டாடித்தொண்டனன்றோகருணைநீங்காச
சுத்தபரிபூரணமாஞ்சோதிநாதா. ௨௨

சோதியாயிருட்பிழம்பைச சூறையாடுந்
தூவெளியேமௌனதொடர்து தொடர்நதெந்நாளும
வாதியாநினறவினைப்பகையைவென்ற
வாழ்வேயிங்குனைப்பிரிந்து மயங்குகின்றேன். ௨௩

மயககுறுமென் மனமணுகாம்பதைகாட்டி
வலவினையைப்பறித்தனையே வாழ்வேநானென்
செயககடவேன்செயலெல்லாநினதேயென்று
செங்கைகுவிப் பேனல்லாற் செயல்வேறில்லை. ௨௪

வேறுபடுஞ்சமயமெல்லாம் புகுநதுபாாககின்
விளங்குபரம்பொருளேநின்விளையாடடல்லால்
மாறுபடுங்கருததில்லைமுடிவின்மோன
வாரிதியினதிரைபோலவயங்கிறறம்மா ௨௫

அம்மாவித்தி ததிசயந்தானன்றோவன்றோ
வகண்டநிலை யாககியென்னையறிவாமவண்ணஞ
சுமமாவேயிருக்கவைத்தையையாவாங்கே
சுகமயமாயிருபபதலலாற் சொலவானென்னே ௨௬

என்னேநானபிறந்துழலவந்தவாறிங்
கென்னகென்னவோசெயவிலையேயேழையெனபான்
முன்சேசெயவினையெனவும பினனேவந்து
[illegible] ௨எ

தாயான தண்ணருளை நிரம்பவைத்துத்
    தமியேனைப்புரவாமற் றள்ளித்தள்ளிப்
போயானதென்கொலையா வேகதேசம்
    பூரணத்துக்குண்டோதான் புகலல்வேண்டும் ௨௮

புகலரியவின்விளையாட் டென்னையெந்தாய்
    புன்மையறிவுடையவென்னைப்பொருளாப்பண்ணி
யிகலவினைக்குமலமாயை கன்மத்தூடே
    யிடருறவுஞ்செய்தனையேயிரக்கமீதோ ௨௯

இரக்கமொடுபொறையிதவறிவாசார
    மிலலேனுனல்லோர்களீட்டங்கண்டாற்
கரக்குமியல்புடையேனைபாழ் நெஞ்சமெந்தாய்
    கருந்தாதோவலவுருக்கோகரியகல்லோ (௩௰)

கலலாவின்-முற்றுப்பெற்றது-ஆ-௬௨௪

---

## பராபரக்கண்ணி

சீருறுதெய்வத் திருவருளாம்பூமிமுதற்
    பாராதியாண்ட பதியேபராபரமே

கண்ணாரக்கண்டோர் கருப்பொருள்காணாமலருள்
    விண்ணூடிருந்தவிளைவேபராபரமே ௨

சிந்தித்தவெல்லாமென சிந்தையறிந்தேயுதவ
    வந்தகருணை மழையேபராபரமே ௩

ஆராவமுதேயரசேயானந்தவெள்ளப்
    பேராறேமோனப் பெருக்கேபராபரமே ௪

ஆரறிவாரென்ன வனந்தமறையோலமிடும்
    பேரறிவேயின்ப பெருக்கேபராபரமே ௫

உரையிறந்தவன்பருளத்தோங்கொளியாயோங்கிக்
    கரையிறந்தவின்பக்கடலேபராபரமே ௬

எத்திக்குந்தானாகி யென்னிதயத்தேயூறித்
    தித்திக்குமானந்தத் தேனேபராபரமே ௭

திக்கொடுகீழ்மேலுந் திருவருளாம்பொற்பறிந்தோர்
    கைக்குள்வளர்நெல்லிக்கனியேபராபரமே ௮

முத்தேபவளமேமொய்த்தபசும்பொற்சுடரே
    சித்தேயெனதுள்ளத்தெளிவேபராபரமே ௯

கண்ணேகருத்தேயென்கற்பகமேகண்ணிறைந்த
    விண்ணேயானந்த வியப்பேபராபரமே ௰

வாக்காயமனதாய்மனவாக்கிறந்தவாபாற்
    றுக்காதேதாகந்தணியேபராபரமே ௰௧

பார்த்தவிடமெல்லாம் பரவெளியாய்த்தோன்றவொரு
வார்த்தைசொல்லவந்த மௌனவேபராபரமே. (௰௨)

வானந்தமன்னினந்தம் மவலத்துவைத்துப்பார்க்கவெனக்
கானந்தந்தந்த வரசேபராபரமே, (௰௩)

அன்பைப்பெருக்கியெனை யாருயிரைக்காக்கவந்த
வின்பப்பெருக்கே யிறையேபராபரமே. (௰௪)

வானமெல்லாங்கொண்ட மௌனமணிப்பெட்டகத்துக்
கானபணியான வணியேபராபரமே. (௰௫)

ஓடுமிருநிதியு மொன்றாகக்கண்டவர்க
ணாடும்பொருளான நட்பேபராபரமே, (௰௬)

சித்தநினைவுஞ் செயுஞ்செயலுநீயெனவா
மூதத்தமுடனான வுறவேபராபரமே (௧௭)

போதாந்தப்புண்ணியர்கள் போற்றிஜயபோற்றியெனும்
வேதாந்தவீட்டில விளக்கேபராபரமே. (௧௮)

முத்தாந்தவீதி முளைத்தெழுமன்பருக்கே
சித்தாந்தவீதிவருந்தேவ பராபரமே. (௧௯)

ஊனந்தருமுடல மென்னதியானென்பதற
வானந்தம்வேண்டி யலைந்தேன்பராபரமே. (௨௰)

என்புருகிநெஞ்ச மிளகிக்கரைந்துகரைந்
தன்புருவாய்நிற்க வலந்தேன்பராபரமே. (௨௧)

சுத்தவறிவாய்ச் சுகம்பொருந்தினல்லாலென்
சித்தந்தெளியாதென செய்வேன்பராபரமே. (௨௨)

மாறுவனுபூதி வாக்கினல்லாலென்மயக்கந்
தேறாதெனசெய்வேன் சிவமேபராபரமே· (௨௩)

தாகமறிந்தின்பநிட்டை தாராதேலாகெடுவேன்
றேகம்விழுந்திடினென் செய்வேன்பராபரமே. (௨௪)

அப்பாவென்னையப்பிலவைப்பேயாற்றுகிலேன் போற்றியென்று
செப்புவதல்லாலவேறென் செய்வேன்பராபரமே , (௨௫)

உற்றறியுமென்னறிவு முட்கருவிபோற்சவிமாண்
டற்றவின்பந்தங்கிலையே யையாபராபரமே. (௨௬)

சொல்லாலடங்காச் சுகக்கடலில்வாய்மடுக்கி
னல்லாலென்றாகமறுமோபராபரமே. (௨௭)

பாராயோவென்னைமுகம் பார்த்தொருகாலென்கவலை
தீராயோவாய்திறந்து செப்பாயபராபரமே. (௨௮)

ஓயாதோவென்கவலை யுள்ளேயானந்தவெள்ளம்
பாயாதோவையா பகராயபராபரமே. (௨௯)

ஓகோவுனைப்பிரிந்தா ருளவங்கனவிலு நைவுத
பாகோமெழுகோ பகராய்பராபரமே (கூ0)

கூர்த்தவறிவத்தனையுங்கொள்ளைகொடுத்துன்னருளைப்
பார்த்தவன்னெனைமுகம் பார்நீபராபரமே கூக]

கடலமுதேதேனேயென்கண்ணேகவலைப்
படமுடியாதெனமுகம் பார்நீ பராபரமே (கூஉ)

உள்ளமறிவாயுழைப்பறிவாய் நானேழை
தள்ளிவிடினமெத்தத் தவிப்பேனை பராபரமே கூங)

கன்றிறுக்குசசேதாகனிந்திரங்கல்போலவெனக்
கென்றிரங்குவாய்கருணை யெந்தாய்பராபரமே கூச)

எண்ணாதவெண்ணமெலாமெண்ணியெண்ணியேழைநெஞ்சம்
புண்ணாகசெய்ததினிப் போதும்பராபரமே (கூரு)

ஆழிததுரும்பெனவே யங்குமிங்குமுன் டிமை
பாழிறறிரிவதென்ன பாவம்பராபரமே கூசு)

கற்றவறிவாலுனைநான் கண்டவன்போறகூத்தாடிற்
குற்றமெனறெனைநெஞ்சே கொதிக்கும்பராபரமே(கூஎ)

ஐயோவுனைககாண்பா ஞசைகொண்டத்தனையும்
பொயயோவெளியாயப் புகலாய்பராபரமே (கூஅ)

துன்பககண்ணீரிற் றுளைந்தேற்குனஞனந்த
வின்பக்கணணீர்வருவ ளெந்நாளபராபரமே கூகூ)

வஞ்சனையும்பொயயுமுள்ளே வைத்தழுக்காறுயுளறு
நெஞ்சனுககுமுண்டோ நெறிதானபராபரமே (ச0)

பாசம்போய்கின்றவர்போற் பாராட்டியாறுது
மோசம்போனேனை முறையோபராபரமே (சக]

நன்றறியேன்றீதறியே னென்றுநின்றவனு
றென்றறியேனனேழை யெனனைபராபரமே [சஉ]

இன்றுபுதிதன்றே யெளியேனபடுந்துயர
மொன்றுமறியாயோ வுரையாய்பராபரமே [சங)

எத்தனைதான்சன்மமெடுத் தெத்தனைநான்பட்டதுய
ரத்தனையுநீயறிந்த தன்றோபராபரமே [சச]

இந்தநாட்சற்று மிரங்கிலையேற்காலன்வரு
மந்தநாட்காக்கவல்லா ரார்காண்பராபரமே [சரு]

உற்றுற்றுநாடியுளமருண்ட பாவியைநீ
சற்றிரங்கியாளத் தகாதோபராபரமே (சசு)

எள்ளளவுநின்னைவிடவில்லா வெனைமயக்கிற்
றள்ளுதலாலென்னபலன் சாற்றாய்பராபரமே சஎ)

பாடிப்படித்துலகிற்பாராட்டிநிற்பதற்கோ
தேடியெனையடிமை சேர்த்தாய்பராபரமே. (சஅ)

சொன்னத்தைச்சொல்வதல்லாற்சொல்லறவென்சொல்லுருநிக்
கென்னத்தைச்சொல்வே னெளியேன்பராபரமே (௪௯)

சொல்லும்பொருளுமற்றுச் சும்மாவிருப்பதற்கே
யல்லும்பகலுமெனக் காசைபராபரமே (௫0)

நேசநிருவிகற்பநிட்டையல்லா லுன்னடிமைச்
காசையுண்டோநீயறியா தன்றேபராபரமே (௫௧)

துச்சனெனவேண்டாமித் தொல்லுலகிலல்லல்கண்டா
லச்சமிகவுடையே னையாபராபரமே (௫௨)

கண்ணுவாரேனுமுனைக்கைகுவியாராயினந்த
மண்ணுவாாகட்டைமதியேன்பராபரமே (௫௩)

கொல்லாவிரதங் குவலயமெல்லாமோங்க
வெல்லார்க்குஞ்சொல்லுவதென் னிச்சைபராபரமே(௫௪)

எத்தாற்பிழைப்பேனோ வெந்தையேநின்னருட்கே
பித்தானேன்மெத்தவுநான் பேதைபராபரமே (௫௫)

வாயினாற்பேசா மௌனத்தைவைத்திருந்துந்
தாயிலார்போலானே னானேன்பராபரமே (௫௬)

அன்னையிலாசசேய்போ லலக்கணுற்றேன்கண்ணா
வென்னகத்திற்றாய்போ லிருக்குமபராபரமே (௫௭)

உற்றுநினைக்கிற்றுயரமுள்ளுள்ளே செந்தீயாய்ப்
பற்றநொந்தேனென்னைமுகம் பார்நீபராபரமே. (௫௮)

பொய்யனிவனென்றுமெள்ளப்போதிப்பார்சொற்கேட்டுக்
கைவிடவும்வேண்டாமென்கண்ணேபராபரமே (௫௯)

எண்ணமறிந்தேதவிளப்பறிந்தே யேழையுய்யும்
வண்ணந்திருக்கருணை வையாய்பராபரமே. (௬0)

காட்டாதே யென்னையொன்றி னாட்டியிதமகிதங்
காட்டாதேயெல்லாநீ கண்டாய்பராபரமே (௬௧)

உன்னைநினைந்துன்னிறைவி லுள்ளேயுலாவுமென்னை
யன்னைவயிற்றின்ன மடைக்காதேபராபரமே. (௬௨)

பாருனக்கென்னெண்ணும் பழக்கமேமாறா
வரமெனக்குத்தந்தருளென் வாழ்வேபராபரமே. (௬௩)

வந்தித்துநின்னை மறவாக்கடனாகச்
சிந்திக்கநின்னருள் செய்யாய்பராபரமே (௬௪)

எவ்வுயிருமென்னுயிர்போலெண்ணியிரங்கவுநின்
றெய்வவருட்கருணை செய்யாய்பராபரமே (௬௫)

வெட்டவெளிப்பேதையன் யான் வேறுகபடொன்றறியேன்
சிட்டருடன்சேரனந்த தெண்டன்பராபரமே (௬௬)

இரவுபகலற்றவிடத் தேகாந்தயோகம்
வரவுந்திருக்கருணை வைப்பாய்பராபரமே ௬௭

மால்காட்டிச்சிந்தை மயங்காமனின்றுசுகக்
கால்காட்டிலாங்காதே கண்டாய்பராபரமே. (சுஅ)

எப்பொருளுநீயெனவே யெண்ணுநான்றேன்றுந
வைப்பையறியா நிலையாலையாய்பராபரமே, (சுகூ)

சும்மாவிருப்பதுவே சுட்டற்றபூரணமென்
றெம்மாலறிதற் கெளிதோபராபரமே. (எ0)

முன்னொடுபின்பக்க முடியடிகாப்பண்ணறநின்
றன்னொடுகாணிற்பதென்றோ சாற்றாய்பராபரமே. (எக)

மைவண்ணந்தீர்ந்த மௌனிசொன்னதெவ்வண்ண
மவ்வண்ணநிட்டை யருளாய்பராபரமே. (எஉ)

வித்தன்றியாதும் விளைவதுண்டோநின்னருளாஞ்
சித்தன்றியாங்களுண்டோ செப்பாய்பராபரமே. (எங)

ஆங்காரமற்றுன் னறிவாவன்பருக்கே
தூங்காததூக்கமது தூக்கும்பராபரமே. (எச)

சிந்தையவிழ்ந்தவிழ்ந்து சின்மயமாநின்னடிக்கே
வந்தவர்க்கேயின்பநிலை வாய்க்கும்பராபரமே. (எரு)

சொல்லடாவூமரைப்போற் சொல்லிறந்துநீயாகி
னல்லாலெனக்குமுத்தி யாமோபராபரமே. (எசு)

பேச்சாகாமோனம் பிறவாமுளைத்தென்றற்
காச்சாசசுமேற்பயனுண் டாமோபராபரமே. (எஎ)

கெட்டியென்றுன்னன்பர் மலங்கெட்டயர்ந்தோர் பூரணமாந்
தொட்டிலுக்குட்சேய்போற் றுயின்றார்பராபரமே. (எஅ)

காட்டவருளிருக்கக் காணுதிருண்மலத்து
நாட்டாமெனக்குவர னன்றோபராபரமே. (எகூ)

எத்தன்மைக்குற்ற மியற்றிடினுந்தாய்பொறுக்கு
மத்தன்மைநின்னருளு மன்றோபராபரமே. (அ0)

எத்தனையோதேர்ந்தாலு மென்னுநிலையின்பமுண்டோ
சித்துருவேயின்பச் சிவமேபராபரமே (அக)

மண்ணொடுவிண்காட்டி மறைந்துமறையாவுருவைக்
கண்ணொடுகண்ணாகவென்றுகாண்பேன்பராபரமே (அஉ)

பஞ்சரித்துநின்னைப் பலநாளிரந்ததெல்லா
மஞ்சலெனும்பொருட்டே யன்றோபராபரமே (அங)

எங்கெங்கேபார்த்தாலு மெவ்வுயிர்க்குமவ்வுயிரா
யங்கங்கிருப்பதுநீ யன்றோபராபரமே. (அச)

அனைத்துமாய்நின்றவே யான்வேறோநின்னை
நினைக்குமாறெங்கே நிகழ்த்தாய்பராபரமே (அரு)

நின்போதத்தாலே நினைப்புமறப்புமின்றா
லென்போதமெங்கே யியம்பாய்பராபரமே (அசு)

ஒன்றைநினைந்தொன்றைமறந் தோடுமனமெல்லாநீ
யென்றறிந்தாலெங்கே யியங்கும்பராபரமே [௮௭]

கொழுந்திலுயிரெனக் கோதறவுள்ளவ்வழி
லழுந்துமவர்க்கேசுகமுண் டாகும்பராபரமே (௮௮)

பற்றும்பயிர்க்குப் படர்கொழுந்துபோற்பாவம்
பெற்றவர்க்கேநின்னருடான் பேறும்பராபரமே (௮௯)

யோகியர்க்கேஞான மொழுங்காம்போன்பான
தாகியரும்யோகமுன்னே சாரந்தோபராபரமே [௯௰]

அல்லும்பகலுமறிவாகி நின்றவர்க்கே
சொல்லும்பொருளுஞ் சுவைகாண்பராபரமே [௯௧]

எச்சிலென்றுபூவை யிகழ்ந்தோர்க்குனைப்போற்றப்
பச்சிலையுங்கிள்ளப் படுமோபராபரமே [௯௨]

அந்தகரணமடங்கத் துறப்பதுவே
யெந்தத்துறவினுநன் றெந்தாய்பராபரமே [௯௩]

தன்னையறிந்தாற்றலைவன்மேற்பற்றலறு
பின்னையொருபற்றுமுண்டோ பேசாய்பராபரமே (௯௪

அன்பாற்கரைந்துகண்ணீ ராறுகண்டபுண்ணியருக்
குன்பால்வரவழிதா னுண்டேபராபரமே (௯௫]

தன்னையறிந்தருளே தாரகமாநிற்பதுவே
யுன்னையறிதற் குபாயம்பராபரமே [௯௬]

கற்றகலையாணிலைதான் காணுமோகாண்பதெல்லா
மற்றவித்தேவெளியாமன்றோபராபரமே [௯௭]

கண்மூடிக்கண்விழித்துக் காண்பதுண்டோநின்னருளாம்
விண்மூடினெல்லாம் வெளியாம்பராபரமே [௯௮]

நேரேநினதருளென் னெஞ்சைக்கவரினென்றும்
பாரேன்சுகமும்படைப்பேன்பராபரமே (௯௯]

வான்காணவேண்டின் மலையேறலொக்குமுன்னை
நான்காணப்பாவனைசெய் நாட்டம்பராபரமே (௱)

வாதனைவிட்டென்னருளின் மன்னினல்லால்வேறுமொரு
சாதனைதானுண்டோநீ சாற்றாய்பராபரமே [௱௧]

பாரகமும்விண்ணகமும் பற்றுகளிபதருட்
டாரகத்தைப்பற்றியன்றோ சாற்றாய்பராபரமே (௱௨

விளக்குந்தகளியையும் வேறென்றார்நின்னைத்
துளக்கமறநீவேறென் றுசொல்வார்பராபரமே (௱௩

பாராதிநீயாப் [illegible]
மாராயுஞ்சீவனுநீ [illegible]பராபரமே (௱௪

பொய்யைப்பொய்யென்பறியும் போதத்துக்காதாவுன்
மெய்யருளென்றோ விளம்பாய்பராபரமே (௱௫

வருவான்வந்தேனெனல்போன் மன்னியழியுஞ்சகத்தைத்
தெரிவாதவில்லையென்ற திறம்பராபரமே (௯௬)

மாயாசகமில்லையேன் மற்றெனக்கோர்பற்றுமில்லை
நீயேநானென்றுவந்து நிற்பேன்பராபரமே (௯௭)

வாறுதிநீகயனவே வைத்தமறையென்னையுநீ
தானாகச்சொல்லாதே சாற்றும்பராபரமே (௯௮)

வெள்ளக்கருணைமத வேழவாநின்னருட்கென்
கள்ளக்கருத்தே கவளம்பராபரமே (௯௯)

வண்டாய்த்துவண்டு மௌனமலரணைமேற்
கொண்டாற்கோவின்பங் கொடுப்பாய்பராபரமே (௱)

மாயைமுதலாம்வினை நீமன்னுயிர்தேர்ந்
தாயுமறிவானது நீயன்றோபராபரமே (௱௧)

என்னறிவுமயானுமென வென்பதுவுமாமிவைக
ணின்னவையேயன்றோ நிகழ்த்தாய்பராபரமே (௱௨)

பாரறியாதண்டப் பரப்பறியாதுன்பெருமை
யாரறிவார்நானோ வறியேன்பராபரமே (௱௩)

அண்டமனைத்திலுமா யப்பாலுக்கப்பாலுங்
கொண்டநின்னையாரறிந்து கொள்வார்பராபரமே (௱௪)

ஒப்புயர்வொன்றின்றி யொளிபுகாமோனவட்டக்
கப்பனுக்காம்வான்பொருளீ கண்டாயபராபரமே (௱௫)

என்போலெளியவரு மெங்கெங்கும்பார்த்தாலு
முன்போலவலியவரு முண்டோபராபரமே (௱௬)

பார்கவினண்டபிண்டப் பரப்பனைத்துநின்செயலே
யார்க்குசெயலில்லையே யையாபராபரமே (௱௭)

ஒன்றேபலவே யுருவேயுருவேயே
வென்றேயழைப்பதுன்னை யென்றுபராபரமே (௱௮)

செப்புவதெல்லாஞ் செபநான் சிந்திப்பதெல்லாநின்
றொப்பியானமென வோர்ந்தேன்பராபரமே (௱௯)

ஆரிருந்தென்னார்போயென் னாரமுதாநின்னருளின்
சீரிருந்தாலுய்வேனே சிவமேபராபரமே (௱௰)

வஞ்சநமனவாதனைக்கும் வன்பிறவிவேதனைக்கு
மஞ்சியுனையடைந் தேனையாபராபரமே (௱௰௧)

எந்தப்படியுன் னிதயமிருந்ததெமக்
கந்தப்படிவருவ தன்றோபராபரமே (௱௰௨)

எந்தெந்நாளுமெனைப் பிரியாதென்னுயிராயச்
சிந்தைகுடிகொண்டவவுட் டேலேபராபரமே (௱௰௩)

அஞ்சலஞ்சலென் றடிமைக கப்போதைக்கப்போதே
நெஞ்சிலுணர்ந்து நிறைவேபராபரமே (௱௰௪

என்னையுன்றன்கைக்களித்தார் யாவரென்னையான்கொடுத்துப்
பின்னையுன்றற்பெறநலம்பேசேன்பராபரமே (௧௨௫)

வாய்பேசாவூமையென வைக்கவென்றோ நீமௌனத்
தாயாகவந்தருளைத் தந்தாய்பராபரமே (௧௨௭)

தன்னைத்தந்தென்னைத் தடுத்தாண்டநின்கருணைக்
கென்னைக்கொண்டென்னபல னெந்தாய்பராபரமே (௧௨௭)

மார்க்கண்டர்க்காக மறலிபட்டபாட்டையுன்னிப்
பார்க்கினன்பர்க்கென்ன பயங்காண்பராபரமே (௧௨௮)

சுட்டியுணராமற் சூரியனிலையாய்வெளியில்
விட்டிடின்னையாளே வியம்பேன்பராபரமே (௧௨௯)

சூதொன்றுமின்றியெனைச் சும்மாவிருக்கவைத்தா
யீதொன்றும்போதாதோ வின்பமபராபரமே (௱௩௰)

வாயொன்றும்பேசாமொனியாய்வந்தாண்ட
தேயொன்றும்போதாதோ வின்பம்பராபரமே (௱௩௧)

என்றுமிருந்தப்படிக் கென்னையெனக்களித்த
தொன்றும்போதாதோ வுரையாய்பராபரமே (௧௩௨)

எண்டிசைகீழ்மேலான வெல்லாபெருவெளியாக்
கண்டவிடத்தென்னையுனை கண்டேன்பராபரமே (௧௩௩)

பித்தனையேதுமறியாப் பேதையெனையாண்டவுனக்
கெத்தனைதானதெண்ட னிடுவேன்பராபரமே [௧௩௪]

தாயார்கருப்பத்தூடனமுந் தண்ணீருந்தருளு
நேயவுனையாரே நினையார்பராபரமே (௧௩௫)

விரிந்தமனமொடுக்கும் வேளையினுனைகப்
பரந்தவருள்வாழி பதியேபராபரமே [௧௩௬]

சிந்தனைபோய்நானெனல்போய்த் தேககவின்பமாமழையை
வந்துபொழிந்தனைநீ வாழிபராபரமே [௧௩௭]

தந்தேனேயோர்வசனந் தந்தபடிக்கின்பமுமாய்
வந்தேனேயெந்தனைநீ வாழிபராபரமே [௧௩௮]

மண்ணும்விண்ணும்வந்துவணங்காவோநின்னருளைக்
கண்ணுறவுட்கண்டவரைக் கண்டசர்பராபரமே [௧௩௯]

என்றுங்கருணைபெற்ற வின்பத்தபோதனர்செயல்
சென்றசென்றதிக்கனைத்துஞ்சொல்லும்பராபரமே [௧௪௰

ஆடுவதும்பாடுவது மானந்தமாகநின்னைத்
தேடுவதுநின்னடியார் செய்கைபராபரமே [௧௪௧]

பொங்கியநின்றண்ணருளைப் புட்கலமாய்பெற்றவர்கட்
கெங்கெழுந்தெளுயிறி யம்பாபராபரமே [௧௪௨]

பாலரொடுபேயர்பித்தர் பான்மையென்னிற்பதுவே
சீலமிகுஞானியர்தஞ் செய்கைபராபரமே [௧௪௩]

உண்டுடுத்துப்பூண்டிங் குலகத்தார்போற்றிரியுந்
தொண்டர்விளையாட்டே சுகங்காண்பராபரமே (௱௪௪)

கங்குல்பகலற்றதிருக் காட்சியர்கள்கண்டவழி
யெங்குமொருவழியே யெந்தாய்பராபரமே (௱௪௫)

காயநிலையல்லவென்று காண்பாருங்குவரோ
தூயவருட்பற்றுத்தொடரவாபராபரமே (௱௪௬)

அப்புமுப்பும்போன்ற வயிக்கியபரானந்தர்தமக்
கொப்புவமைசொல்லவும்வா யுண்டோபராபரமே (௱௪௭)

சித்தந்தெளிந்துசிவமானோரெல்லோர்க்குங்
கொத்தடிமையான குடிகாண்பராபரமே. (௱௪௮)

தம்முயிர்போலெவ்வுயிருந் தாமென்றுதண்ணருள்கூர்
செம்மையருக்கேவலென்றுசெய்வேன்பராபரமே (௱௪௯)

விண்ணுக்குமவிண்ணாகி மேவுமுனக்கியான்பூசை
பண்ணவிருக்குமாறு பகராய்பராபரமே (௱௫௰)

நெஞ்சகமேகோயி னினைவேசுகந்தமன்பே
மஞ்சனநீர்பூசைகொள்ள வாராய்பராபரமே (௱௫௧)

கெட்டவழியாணவப்பேய் கீழாகமேலான
சிட்டருனைபூசை செய்வார்பராபரமே (௱௫௨)

கால்பிடித்துமூலக்கனலைமதிமண்டலத்தின்
மேலெழுப்பிற்றேகம் விழுமோபராபரமே (௱௫௩)

பஞ்சசுத்திசெய்துன்னைப் பாவித்துப்பூசைசெய்தால்
விஞ்சியஞானம் விளங்கும்பராபரமே (௱௫௪)

அன்பர்பணிசெய்யவெனையாளாக்கிவிட்டுவிட்டா
லின்பநிலைதானேவந் தெய்தும்பராபரமே (௱௫௫)

மூர்த்திதலந்தீர்த்த முறையாற்றொடங்கினர்க்கோர்
வார்த்தைசொலச்சற்குருவும் வாய்க்கும்பராபரமே ௱௫௬

விரும்புஞ்சரியைமுதன் மெய்ஞ்ஞானநான்கு
மரும்புமலர்காய்கனிபோ லன்றோபராபரமே (௱௫௭)

தானந்தவந்தருமஞ் சந்ததமுஞ்செய்வர்சிவ
ஞானந்தனையணைய நல்லோர்பராபரமே (௱௫௮)

சொன்னதைச்சொல்லித் துடிக்கின்றவாணவப்பேய்க்
கின்னல்வருவதெங்ஙா னெந்தாய்பராபரமே (௱௫௯)

இன்றோவிருவினைவந் தேறியதுநானென்றே
வன்றேவிளைந்ததன்றோவாற்றேன்பராபரமே ௱௬௰)

எண்ணமுந்தானின்னவிட வில்லையென்றுமியான்முனமே
பண்ணவினையேது பகராய்பராபரமே (௱௬௧)

என்னையின்னதென்றறியா வேழைக்குமாகெடுவேன்
முன்னவினைகூடன் முறையோபராபரமே (௱௬௨)

அறியாநான்செய்வினையை யையாநீகூட்டுங்
குறியேதெனக்குணர்வு கூறாய்பராபரமே (௱௬௩)

என்னைக்கெடுக்க விசைந்தவிருவினைநோய்
தன்னைக்கெடுக்கத் தகாதோபராபரமே (௧௬௪)

வல்லமையேகாட்டுகின்ற மாமாயைநாளொருவ
னில்லையெனிலெங்கே யிருக்கும்பராபரமே (௧௬௫)

முக்குணத்தாலெல்லா மூலக்கப்பிரகிருதிக்
கிக்குணத்தைநல்கியதாரெந்தாய்பராபரமே (௧௬௬

ஆற்றப்படாதுன்பி மையவென்றலென்மனது
தேற்றப்படாதினியென் செய்வேன்பராபரமே [௧௬௭]

பூராயமாம்மனதைப் போக்கவறியாமலையோ
பிராயலைந்தே னரசேபராபரமே (௧௬௮)

சினமிறக்கக்கற்றாலுஞ் சித்தியெல்லாம்பெற்றாலு
மனமிறக்கக்கல்லார்க்கு வாயேன்பராபரமே ௧௬௯)

வாதுக்குவந்தெதிர்த்த மல்லரைப்போற்பாழ்த்தமன
மேதுக்குக்கூத்தாடுதெந்தாயபராபரமே (௧௭௰)

சூதாடுவார்போற் றுவண்டுதுவண்டுமனம்
வாதாடினென்னபலன் வாய்க்கும்பராபரமே (௧௭௧)

கொள்ளித்தேள்கொட்டிக் குதிக்கின்றமெய்க்குறங்காய்க்
கள்ளமனத்துள்ளுவதென் கண்டாய்பராபரமே ௧௭௨)

வந்ததையும்போனதையும் வைத்துவைத்துப்பார்த்திருந்தாற்
சிந்தையிதமகிழ்ந்தன்றுசேரும்பராபரமே ௧௭௩)

ஏறுமயிர்பாலமுணர் விந்தவிடயங்கநெருப்
பூறலுநன்று வறிந்தேன்பராபரமே ௧௭௪)

பொறிவழியேபோமை பொறியாயுழல்வதுநின்
னறிவின்விதித்த விதியாமோபராபரமே ௧௭௫)

பாசசாலங்களெல்லாம்பறறுவிட ஞானவைவாள்
வீசகாளெந்நாள் விளம்பாயபராபரமே ௧௭௬)

எந்தவுடலேனு மெடுத்தவிடநல்லதென்று
சிந்தைசெயவந்தநிறைஞ் செப்பாய்பராபரமே ௧௭௭)

பொய்யெல்லாமொன்றாப் பொருந்திவைத்தபொய்யுடலை
மெய்யெனநான்மெய்யாய விடுமோபராபரமே ௧௭௮

மின்னனையபொய்யுடலை மெய்யென்றுநம்பியையோ
நின்னைமறக்கை நெறியோபராபரமே ௧௭௯)

நித்தியமொன்றிலவாத நீர்க்குமிழிபோன்றவுடற்
கித்தனைத்தான்றுன்பமுண்டோவென்னேபராபரமே

தேகமிருக்கின்றுசடர் தேமபுவதெள்ளித்திரையி
னாகமதிந்தாறுயந்த்ர ஞணரேபராபரமே (௧௮௧)

ஏதச்சுமையா யெடுப்பாரெடுத்தவுடற்
சேதமுறின்யாதுபின்னே செல்லும்பராபரமே [க௮௨]

தோர்பாவைநாலாட் சுமையாகுஞ்சிவனென்றிங்
கார்பாலெடுத்ததெவ ராலேபராபரமே [க௮௩]

ஞாலத்தைமெய்யெனவே நம்பிநம்பிநாளுமென்றன்
காலத்தைப்போக்கியென்ன கண்டேன்பராபரமே [க௮௪]

பொய்யுலகவாழ்க்கைப் புலைசேரிவாதனைநின்
மெய்யருளின்மூழ்கின் விடுங்காண்பராபரமே [க௮௫]

நூலேணிவிண்ணேற நூற்குப்பவித்திவைப்பார்
போலேகருவிநன்றூற் போதம்பராபரமே [க௮௬]

சின்னஞ்சிறியார்கள் செய்தமணற்சோற்றையொக்கு
மன்றுங்கலைஞான மாகமம்பராபரமே [க௮௭]

வாசகஞானத்தால் வருமோசுகம்பாழ்த்த
பூசலென்றுபோமோ புகலாய்பராபரமே [க௮௮]

கேட்டதையேசொல்லுங் கிளிபோலநின்னருளி
னாட்டமின்றிவாய்பேச லன்றோபராபரமே [க௮௯]

வெளியாயருளில் விரவுமன்பர்தேக
மொளியாய்ப்பிறங்கியது முண்டோபராபரமே [க௯௰]

காலமொருமூன்றுங் கருத்திலுணர்ந்தாலுமதை
ஞாலந்தனக்குரையார் நல்லோர்பராபரமே [க௯க]

கொல்லாவிரதமொன்று கொண்டவரேநல்லோர்மற்
றல்லாதார்யாரோ வறியேன்பராபரமே [க௯௨]

இல்லாதகாரியத்தை யிச்சித்துச்சிந்தைவழி
செல்லாமைநல்லோர் திறங்காண்பராபரமே (க௯௩)

ஏதுவந்துமேதொழிந்து மென்னதியானென்னார்கள்
போதநிலைகண்ட புலத்தோர்பராபரமே

ஆயிரஞ்சொன்னாலு மறியாதவஞ்சநெஞ்சப்
பேயரொடுகூடிற் பிழைகாண்பராபரமே (க௯௫)

மாயமயக்கொழிந்தாற் மற்றொன்றைநாடுவரோ
நேயவருணிலையி னிற்பார்பராபரமே (க௯௬)

சித்திரையிற்செத்தபிண நேருமுடற்கிச்சைவையாச்
சுத்தர்களோநல்ல துறவோர்பராபரமே (க௯௭)

என்நெஞ்சமேனு மிரங்குமோநின்னருட்குக்
கன்னெஞ்சருமுளரோ காட்டாய்பராபரமே (க௯௮)

மந்தவறிவாகியின்பம் வாயாதிருந்தலைந்தாற்
சிந்தைமயங்காதோவென் செய்வேன்பராபரமே [க௯௯]

தேடினேனிக்கலைத்துந் தெண்டனிட்டேன்சிந்தைநைந்து
வாடினேனென்மயக்க மாற்றாய்பராபரமே (௨௱)

மடிமையெனுமொன்றை மறந்தன்றோவென்னை
பிடிக்கொள்ளல்வேண்டு மரசேபராபரமே ௨௱௧

காலர்பயந்தீரவின்பக் காந்தபயமென்றெழுந்த
மாலைவளர்த்தனையே வாழிபராபரமே ௨௧௨

நீர்ப்புற்புதமாய் நினைவருட்கேநின்றழியப்
பார்ப்பதல்லால்வேறுமொன்றைப் பாரேன்பராபரமே

நீர்க்குமிழிபோலென் னினைவுவெளியாய்க்கரையப்
பார்க்குமிடமெல்லாமென் பார்வைபராபரமே ௨௧௪

ஆடியோய்ப்பம்பரம்போ லாசையுடனெங்குமுனைத்
தேடியோய்கின்றேனென் செய்வேன்பராபரமே ௨௧௫

வேதாந்தஞ்சித்தாந்தம் வேறென்னார்கண்களிக்கு
நாதாந்தமோனநலமோ பராபரமே ௨௧௬

ஆனந்தமானநின்னை யன்றியொன்றையுன்னாத
மோனந்தமியேற்கு முத்திபராபரமே ௨௧௭

ஏதுக்குமுன்னைவிட வில்லையென்றுமென்கருத்தைச்
சோதிக்கவேண்டாநான் சொன்னேன்பராபரமே ௨௧௮

முத்தியிலுந்தேகமிசை மூவிதமாஞ்சித்திபெற்றோ
ரத்தனைபேரென்றுரைப்ப தெந்தாய்பராபரமே ௨௧௯

நீயன்றிநானார் நினைவாரென்னெஞ்சகமார்
தாயன்றிசூலுமுண்டோ சாற்றாய்பராபரமே ௨௱௨

அங்கமேநின்னவடிவ மானசுகர்கூடப்பிடநீ
யெங்குமேனேனென்ற தென்னேபராபரமே ௨௨௧

கொள்ளைவெள்ளத்தண்ணருண் மேற்கொண்டெழுந்தார்கிழித்தா
கள்ளமனக்கப்பலெங்கே காணும்பராபரமே [ற்

எக்கலையுங்கற்றுணர்ந்தோ ரென்றவர்க்குஞ்சம்மதஞ்சொல்
வக்கணையாவின்பம் வருமோபராபரமே ௨௨௩

தூல்லெலறியப்பாசி தலைக்குந்நன்னீர்காணுநல்லோர்
சொல்லுணரின்ஞானம்வந்து தோன்றும்பராபரமே

நின்னையுணர்ந்தோர்கடமை நிந்தித்தபேயறிஞ்
ரென்னகதிபெறுவா ரெந்தாய்பராபரமே ௨௨௫

என்னறியாவென்னலற்றோ ரெங்கிருந்தும்பார்க்கினுநின்
சன்னிதியாநீபெரிய சாமிபராபரமே ௨௨௬

சோற்றுத்துருத்திச் சுமைசுமப்பக்கண்டிதுங்கத
காற்றைப்பிடித்தலேந்தேன் கண்டாய்பராபரமே ௨௨௭

உள்ளபடியொன்றை யுரைக்கின்வார்க்கவர்க்குநல்லாய்க்
கள்ளமின்றியன்பாய்க் களிப்பேன்பராபரமே ௨௨௮

அடுத்தவியல்பாகவொன்றை யான்பகர்வதல்லாற்
றொடுத்ததொன்றையான்வேண்டிச் சொல்லேனைப்பராபரா

உள்ளம்பறியாதொருவ ரொன்றையுன்னிப்பேசிலேயோ
துன்னியிலங்கன்றுயுத துடிப்பேன்பராபரமே (௨௨௰)

எல்லாருமின்புற் றிருக்கநினைப்பதுவே
யல்லாமல்வேறொன் றறியேன்பராபரமே (௨௨௧)

முன்னாண்மெய்ஞ்ஞான முனிவர்தவமீட்டதெல்லா
மிங்காணிற்காணவெனக் கிச்சைபராபரமே (௨௨௨)

கன்மமென்பதெல்லாங் கரிசறவேமெய்ஞ்ஞான
தன்மநிலைசார்ந்ததன்பர் தன்மைபராபரமே (௨௨௩)

கண்டபிரானென்னறிவின் கண்ணூடேகாட்சிபெற
மண்டியபேரொளிநீ வாழிபராபரமே (௨௨௪)

காணாதன்மையென்று நாடாமனுடவின்ப
வாணாகிநின்றனைநீ வாழிபராபரமே (௨௨௫)

அணுத்தானுமணுவா யண்டமெல்லாந்தானும்
மகத்தானைநின்றனைநீ வாழிபராபரமே (௨௨௬)

காரகமாங்கர்ப்பவறைக் கண்ணூடுமென்கண்ணே
வாரம்வைத்துக்காத்தனைநீ வாழிபராபரமே (௨௨௭)

புரந்தோர்தந்தேசமென்பார் பூமியையோராடி
யிரந்தோருந்தம்மதென்பா ரென்னேபராபரமே (௨௨௮)

மூர்த்தியெல்லாம்வாழியெங்கண் மோனகுருவாழியருள்
வார்த்தையென்றும்வாழியன்பர் வாழிபராபரமே (௨௨௯)

சொல்லும்பொருளுந் தொடராவருணிறைவிற்
செல்லும்படிக்கருணீ செய்தாய்பராபரமே (௨௩௰)

இற்றையவரைக்குள்ளாக வெண்ணரியசித்திமுத்தி
பெற்றவர்களெத்தனைபேர் பேசாய்பராபரமே (௨௩௧)

நாடுநகருநிசா ளூட்டியபாளையமு
மீடுசெயுமோமுடிவி லெந்தாய்பராபரமே (௨௩௨)

தேடுந்திரவியமுஞ் சேர்ந்தமணிப்பெட்டகமுங்
கூடவருந்துணையோ கூறாய்பராபரமே (௨௩௩)

தேடாததேட்டினரே செங்கைத்துலாக்கோல்போல்
வாடாச்சமநிலையில் வாழ்வார்பராபரமே (௨௩௪)

நீராய்க்கசிந்துருகி நெட்டுயிர்த்துநின்றேனென்
பாராததென்னே பகராய்பராபரமே (௨௩௫)

உள்ளபொருளாவியுடன் [illegible]
கொள்ளை [illegible] பராபரமே (௨௩௬)

ஆழ்ந்தாயே [illegible]
[illegible] (௨௩௭)

தாராவருளையெல்லாந் [illegible]
வாராயோ [illegible] (௨௩௮)

ஆசையுனைமீதல்லா லருளறியவேறுமொாறிற்
பாசம்வையேனின்கருணைப் பாங்காறப்பராபரமே (உநகூ)

ஆதியந்தநீகுருவா யாண்டதல்லானின்னையன்றிப்
போதனையுமுண்டோ புகலாய்பராபரமே (உசய)

தானாகவந்து தடுத்தாண்டெனையின்ப
வானாகச்செய்தவின்ப வானேபராபரமே (உசக)

பற்றற்றிருக்குநெறி பற்றிக்கடன்மலையுஞ்
சுற்றமினைக்குமனஞ் சொன்னேன்பராபரமே (உசஉ)

படிப்பற்றுக்கேள்வியற்றுப் பற்றற்றுச்சிந்தைத்
துடிப்பற்றார்க்கன்றோ சுகங்காண்பராபரமே (உசந)

சத்தாகிநின்றோ சடங்களிலிங்கமெனை
வைத்தாருமுண்டேயென் வாழ்வேபராபரமே (உசச)

சித்தமிருவிகற்பஞ் சேர்ந்தாருடற்றீபம்
வைத்தகர்ப்பூரம்போல் வயங்கும்பராபரமே (உசரு)

ஆதிகாலத்திலெனை யண்டனையேயிப்பானி
போதியெனினெங்கோன் போவேன்பராபரமே (உசசு)

நாவழுத்துஞ்சொன்மலரோ நாலுதிக்கும்பொன்மலரோ
தேவையுனக்கினனதென்று செப்பாய்பராபரமே (உசஎ)

கன்னற்கரும்பாகாய்க் கருப்புவட்டாய்க்கற்கண்டா
யின்னமுதாயென்று மிருந்தாய்பராபரமே (உசஅ)

சிற்பரமேதற்பரமே தெய்வசுருதிசொன்ன
வற்புதமேயன்பே யறிவேபராபரமே (உசகூ)

அறிவிப்பாநீயென்றாலைம் புலன்கடந்தங்
நெறிநிற்பாரியாரே நிகழ்த்தாய்பராபரமே (உருய)

அந்தக்கரணமெனு மாகாதபேய்களெனை
வந்துபிடித்தாட்ட வழக்கோபராபரமே (உருக)

ஐவரொடுங்கூடாம லந்தரங்கசேவைதந்த
தெய்வவறிவே சிவமேபராபரமே (உருஉ)

அருளாகிநின்ற சுகமாகாமலேயோ
விருளாகிநிற்க வியல்போபராபரமே (உருந

அன்பரெல்லாமின்ப மருந்திடவுமியானொருவ
றன்புறுதன்றோநீ சொல்லாய்பராபரமே (உருச)

சந்ததமுநின்கருணை சாற்றுவதல்லால்வேறு
சிந்தையறியேனுன் சித்தம்பராபரமே (உருரு)

நானுனெனக்குளது நாட்டத்தாலென்னைவிட்டுப்
போனாலுமுன்னைவிட்டுப் போகேன்பராபரமே (உருசு)

இக்காயம்பொய்யென்றே ரீட்டத்துனக்கபயம்
புக்காருண்டோ புகலாய்பராபரமே (உருஎ)

தானுதல்பூரணமே சாருமிடமுண்டிரும்
வானுதியுமெ மாழுங்காய் மன்னும்பராபரமே (௨௫௮)

உன்னுமனங்கர்ப்பூர வுண்டைபோலகரைய
மின்னுமானந்த விளக்கேபராபரமே (௨௫௯)

நாட்டிட்டலலேந்த நடுக்கமெல்லாந்தீரவுனக
காட்பட்டுந்துளபமெனக் காமோபராபரமே (௨௬௰)

பாவிபடுங்கண்கலக்கம் பார்த்துமிரங்காதிருந்தா
லாவிகருறுதுணையா ரையாபராபரமே (௨௬௧)

நின்றைறவேதாரகமாய் நின்றுககமெய்தாம
லெனனிறைவேபாவித்தே னெனனேபராபரமே (௨௬௨)

நின்னைச்சரண்புகுந்தா லீகாககல்வேண்டுமெல்லா
லெனனைபபுரமவிடுத லெனனேபராபரமே (௨௬௩)

மாறுதுன்பமெல்லாம் வந்துரைத்தானின்செவியி
லேறுதவாறே றியம்பாய்பராபரமே (௨௬௪)

விஞ்சுபுலப்பாடனைத்தும் வீறுதுன்பஞ்செய்யவந்த
வஞ்சுபுயிவேடருககு மாறறேன்பராபரமே (௨௬௫)

கள்ளநகரியதிறக காமாதிராக்ஷசப்பேய்க்
கெனனைபிலககாகவைத்த தென்னேபராபரமே (௨௬௬)

சித்திநெறிகேட்டல செகமயக்கஞ்சென்மமற
முத்திநெறிகேட்டன முறைகாண்பராபரமே (௨௬௭)

சிந்தைசிதயச சிதையாதவானந்த
மெந்தவகையாலேவந் தெய்தும்பராபரமே (௨௬௮)

கூர்த்தவறிவாலறியக் கூடாதெனக்குவரன்
றோர்த்தபடிதானே திரிந்தேனபராபரமே (௨௬௯)

பத்தருந்தும் பரமசுகம்யானருந்த
வெத்தனைநாள்செல்லு மியம்பாயபராபரமே (௨௭௰)

தீரத்திறற்றுறவு சோர்மலிவ்வுலகிற்
பாரத்தனபேசல பண்போபராபரமே (௨௭௧)

யிந்தவெளியினையுண் டேப்பமிடப்பேரறிவாத
தந்தவெளிககேவெளியாச சார்ந்தேனபராபரமே (௨௭௨)

உணர்த்துமுனைநாடா துணர்ந்தவையேநாடி
யிணக்குருமெனனேழமைதா னெனனேபராபரமே (௨௭௩)

உண்டுபோலின்று முலகைத்திரமெனவுட்
கொண்டுகொன்பெற்றபலன கூறாய்பராபரமே (௨௭௪)

உள்ளபடியாதுமெள உற்றுணர்ந்தேனக்கணமே
கள்ளமனம்போனவழி காணேன்பராபரமே (௨௭௫)

சித்தமவனன் செயலவாகவெலாமவனன்

கண்ணில்பலகோடியுயி ரெத்தனையோவத்தனைக்குங்
கண்ணிற்கலந்தவருட் கண்ணேபராபரமே (உஎஎ)

எனக்கினியாருனைப்போலு மில்லையென்றால்யானு
முனக்கினியனாகா வுளவேனோபராபரமே (உஎஅ)

அண்டபிண்டங்காணே னகமும்புறமுமொன்றாக்
கண்டவெனை நீகலந்த காலம்பராபரமே (உஎகூ)

எத்தனையோகோடி யெடுத்தெடுத்துச்சொன்னாலுஞ்
சித்தமிரங்கலையென் செயவேனபராபரமே (உஅ௰)

அன்றந்தகாலவருக்கு மற்புதமாநீயுரைத்த
தொன்றந்தவார்த்தையெனக் குண்டோபராபரமே (உஅக)

அப்பனென்றுமன்னையென்று மாரியனென்றும்முனையே
செப்புவதுமுன்னிலையின் சீர்காண்பராபரமே (உஅஉ)

கட்டுங்கனமுமந்தக் காலர்வரும்போதெதிர்த்து
வெட்டுந்தளமோ விளம்பாயபராபரமே (உஅங)

பேசாதமோனநிலை பெற்றோரென்றோநின்னருளாம
வாசமகோசரந்தான் வாய்க்கும்பராபரமே (உஅச)

கற்றாலுங்கேட்டாலுங் கயமழியாதசித்தி
பெற்றாலுமின்பமுண்டோ பேசாய்பராபரமே (உஅரு)

கண்டவடிவெலாங் கரைக்கின்றவஞ்சனம்போ
லண்டமெல்லாநின்னருளே யன்றோபராபரமே (உஅசா)

தற்செயலாலொன்றுமில்லை தானென்றுனைபாவி
நினசெயலாய்நில்லா நினைவேனபராபரமே (உஅஎ)

கொலைகளவுகட்காமங் கோபம்விட்டாலன்றோ
மலையிலக்காநின்னருடான் வாய்க்கும்பராபரமே (உஅஅ)

தன்னையறியாதுசகந் தானாயிருந்துவிட்டா
லுன்னையறியவரு ளுண்டோபராபரமே (உஅகூ)

ஒன்றிரண்டொன்றன்று வுணர்வுகொடுத்துள்ளபடி
யென்றுமெனைவையா யிறையேபராபரமே (உகூ௰)

ஓதுமடியார்களுளங் காணவெளியாகுந்
துரியநிறைவான சுகமேபராபரமே (உகூக)

...ப்குவித்தநெஞ்சனருட்பொறைபறிந்துதிக்கனைத்துங்
கைகுவித்துநிற்பதெந்தக் காலம்பராபரமே (உகூஉ)

அத்துவிதமான வயிக்கியவநுபவமே
சுத்தநிலையந்நிலையா சொலவார்பராபரமே (உகூங)

...த்தசுரவலாபின மனைபோமோமாயையினோர்க்
கெத்தனைபோதித்துமென்ன மெய்ந்தாயபராபரமே (உகூச)

பட்டறத்தேகமறப் போகுமுனேநின்னருளைப்
காட்டாததகாதோவென கண்ணேபராபரமே (உகூரு)

சொல்லிப்பதர்களெந்து சொன்முடிவுகாணுதார்
நெல்லிறபதாபோல நிற்பாரபாரபரமே (௧௬௯)

அழுக்கா றறுநெஞ்ச மழுவம்யபுனமாக்க
விழுககாறறுவின்பநல மெய்தார்பராபரமே (௧௬௭)

தேகாதிபொயயெனவேதோந்தவுபசாந்தருக்கு
மோகாதியுணடோ மொழியாய்பராமரமே (௧௬௮)

சாதனையெலலாமவிழத்தறபோதங்காட்டாதோர்
போதனைநிலகுவதெப் போதேபராபரமே (௧௬௯)

மூனறுமறியாவிறளா முன்ளம்படைத்தவெனக்
கெனறுகதியருவ தெந்தாய்பராபரமே (௧௭0)

சிந்திக்குந்தோறுமென்னுட் சிற்சுகமாயூற்றறிப்
புநதிக்குணின்றவருட் பொறபேபராபரமே (௧௭௧)

என்றுமடைந்தோர்கட் கிரங்காகுறிப்பனைத்துங
கனறையுதைகாவி கதைகாண்பராபரமே (௧௭௨)

குறறங்குறையைக குணமெனவிடவருளை
யுறறவரேயாவிக குறவாம்பராபரமே [௧௭௩]

ஓருரையாலவாயகருமணமைக கோரனந்தநூல்கோடிப்
பேருரையாறபேசிலென்ன பேறும்பராபரமே (௧௭௪)

சொலலுஞசமயநெறிச் சுற்றுக்குளேசுழனு
மலலலொழிவதென்றைக கையாபராபரமே [௧௭௫]

பிடித்ததையேஸ்தாபிக்கும பேராணவத்தை
யடித்துததுரத்தவலலா ராகாண்பராபரமே (௧௭௬)

நேசத்தாணினனை நினைககுநினைவுடையா
ராசைககடலிலழுநதாபராபரமே [௧௭௭]

கள்ளாதுகடடுணைவுங் காரியமோநானொருசொற்
கொளளாததோஷமனறோ கூறுயபராபரமே [௧௭௮

சென்றவிடமெல்லாந் திருவருளேதாரகமா
நினறவாககேயானநத நிடைபராபரமே [௧௭௯]

நீட்சிகுறுகலிலலா நிதயசுகாரமபசக
சாடசியாமுனனைவநது சாரநதெனபராபரமே [௧௮0]

வானுதிததுவமாய மனனிநிலைறகாரணநீ
நானுகிநிறபதெநத நாளோபராபரமே [௧௮௧]

காட்டதிலஙகிகடையவந்தானெனனவுன்று
நாட்டத்திறுநிவநத நடபேபராபரமே ௧௮௨

சித்திரையாயநதாலே நினைவயாநதாணிநதனித்தனு
செதததிறைபபானெதெஙகளா செயலைகபராபரமே [௧௮௩]

இன்பநிடைடயெயதாமல யாமெனிறுஞசெனறுமனங
துன்புறுதல வன்பிறவித துககம்பராபரமே [௧௮௪]

பொய்யகலமெய்யான போதநிலைகண்டோர்க்கோ
ரையமில்லையையமில்லை யையாபராபரமே

மந்திரத்தையுன்னிமயங்காதெளக்கினியோர்
தந்திரத்தைவைக்கத் தகாதோபராபரமே ௱௧௬]

மின்கருணைபூத்ததென்ன மேவியுயிர்க்குயிராய்த்
தன்கருணைதோன்றவரு டாய்நீபராபரமே [௱௧௭]

தன்மயமாய்நின்றநிலை தானேதானாகிநின்று
னின்மயமாயெல்லா நிகழும்பராபரமே [௱௧௮]

பங்கயிடையுநெஞ்ச வேழையைநீவாவென்றே
பாங்குபெறசெய்வதுனமேற் பராம்பராபரமே (௱௧௯]

ஆண்டநின்னைநீங்கா வடிமைகள்யாமாணவத்தைப்
பூண்டதென்னனமம் புகலாய்பராபரமே (௱௨௰)

ஏங்கனுநீயென்று விருந்தபடியெய்தாம
லங்குமிங்குமெனறலைய லாமோபராபரமே [௱௨௧]

கற்குமதுவுண்டு களித்ததெல்லாநின்னருளி
னிற்குமதுதந்ததுண்டோநீதான்பராபரமே ௱௨௨

அண்டபகிரண்டமரியாதநின்வடிவைக்
கண்டவரைகண்டாற் கதியாம்பராபரமே [௱௨௩]

கலக்கமுறநெஞ்சக் கலக்கிததிரும்பத்
துலக்குபவனீயலையோ சொல்லாய்பராபரமே [௱௨௪]

சிந்தையுமென்போலச் செயலற்றடங்கிவிட்டால்
வந்ததெலாநின்செயலா வாழ்வேனபராபரமே [௱௨௫]

பந்தமெல்லாதீரப் பரஞ்சோதிநீகுருவாய்
வந்தவடிவை மறவேன்பராபரமே [௱௨௬)

தானந்தமான சகசநிருவிகற்ப
வானந்தனிட்டையருளையாபராபரமே ௱௨௭)

அலலலெல்லாந்தீரவெனக் கானந்தமாகவொரு
சொலலயென்பால்வைத்தத்தை யென்சொல்வேன்பராபரமே

சிந்தைமயக்கமறச சின்மயமாஙனின்றவுன்னைத்
தந்தவுனக்கெனனையுநான் றந்தேனபராபரமே ௱௨௯

மைகாட்டுமாயை மயககமறநீகுருவாயக
கைகாட்டவுங்கனவு கணடேனபராபரமே ௱௩௰

மால்வைத்தசிந்தை மயக்கறவென்சென்னிமிசைக்
கால்வைக்கவுங்கனவு கண்டேன்பராபரமே ௱௩௧

மண்ணானமாயையெல்லா மாண்டுவெளியாகவிரு
கண்ணாரவுங்கனவு கண்டேன்பராபரமே ௱௩௨

மண்ணீர்மையாலே மயங்காதுனகையாலென்
கண்ணீர்துடைககவுநான் கண்டேன்பராபரமே ௱௩௩

உள்ளதுணரா வுணர்வின்மாபாவியெனறோ
மெள்ளமெள்ளக்கைநெகிழ விட்டாயபராபரமே (௩௩௪)
எல்லாநினதுசெய லென்றெண்ணுமெண்ணமுநீ
யல்லாலெனக்குளதோ வையாபராபரமே ,(௩௩௫)
பந்தமயக்கிருக்கப் பறறொழிந்தேனென்றுளரு
மிந்தமயக்க மெனக்கேனபராபரமே (௩௩௬)
காட்சியெல்லாங்கண்ணைவிடக் கண்டதுண்டோயாதினுக்கு
மாட்சியுனதருளே யனறோபராபரமே
எட்டுத்திசையுமொன்று மின்பமாங்கனநவுண்னை
விட்டுப்பிரியவிட மவேறோபராபரமே [௩௩௭]
பிரியாதுயிர்க்குயிராயப்பின்னமறவோங்குஞ்
செறிவேயறிவே சிவமேபராபரமே (௩௩௮)
ஏதேதுசொன்னாலு மெள்ளளவுநீயிரங்காச
ருதேதெனக்குளவு சொல்லாய்பராபரமே (௩௩௯)
கற்பனையாப்பாடுகின்றேன் கண்ணீருங்கம்பலையுஞ்
சொற்பனத்துங்காணேனுனை சொலவேன்பராபரமே.
வன்பொன்றுநீங்கா மனதிறப்புமாறுப்பே
ரன்பொன்றுமபோது மெனக்கையாபராபரமே (௩௪௨)
ஏதுந்தெரியா வெளியேனைவாவெனநின்
போதநிலைகாட்டிற பொருறோபராபரமே (௩௪௩)
ஓராமலெல்லா மொழிந்தேறுதுன்றெய்வவரு
டாராதிருக்கத்தகுமோபராபரமே [௩௪௪]
மோனந்தருஞான மூட்டியெனக்குவட்டா
வானந்தவாழ்க்கை யருளாய்பராபரமே [௩௪௫]
வாடுமுகங்கண்டென்னை வாடாமலேகாத்த
நீடுங்கருணை நிறைவேபராபரமே [௩௪௬]
புந்திபினுநின்னடியைப் போற்றுகின்றமெய்யடியார்
சிந்தையிறப்போநின் றியானம்பராபரமே [௩௪௭]
உனக்குவமையாக்கருணை யுள்ளவருமன்மைக்
கெனக்குவமையானவரு மில்லைபராபரமே [௩௪௮]
தாயிருந்தும்பிள்ளை தளர்ந்தாற்போலெவ்விடதது
நீயிருந்துநான்றளர்ந்து நின்றேன்பராபரமே [௩௪௯]
வாயாற்கிணறுகெட்ட வாறேபோல்வாயபேசிப்
பேயானாக்கின்பமுண்டோ பேசாய்பராபரமே [௩௫௦]
பாவமென்றாலேதும் பயமின்றிசெய்யவிந்தச்
சீவனுக்கார்போதந் தெரிந்தார்பராபரமே [௩௫௧]
இன்பநிருவிகற்ப மின்றேதான்வன்றெனிலோ
துன்பம்பொறுப்பரிது சொன்னேன்பராபரமே [௩௫௨]

கற்குநிலைகற்றுங் கருவியவிழாதருளாய
நிற்குநிலைகறபதுவே நீதம்பராபரமே [௩௫௩]

காச்சுச்சுடர்விடும்போற கட்டிபோனின்மலமாய்
பேச்சறநவரே பிறவார்பராபரமே [௩௫௪]

பற்றொழிந்துசிந்தைப் பகைப்பொழிந்துதானேதா
னற்றிருப்பதென்றைக் கமைப்பாயபராபரமே [௩௫௫]

உருவெளிதான்வாதவூ உத்தமாக்கல்லாலினரூம்
குருவழிநினறொக்குறுண்டோ கூராய்பராபரமே [௩௫௬]

தேகமியாதேறுமொரு சித்திபெறசிவன்முத்தி
யாகுநெறிநல்லநெறியையாபராபரமே ௩௫௭

உலகநெறிபோறசடல மோயவுயிர்முத்தி
யிலகுமெனல்பந்த வியல்போபராபரமே ௩௫௮

பரமாய்பரவெளியாற் பார்ப்பதல்லான்மற்றெவர்க்கும்
திரமேதுமில்லைகன்றாய்த் தேர்ந்தேன்பராபரமே ௩௫௯

தேடுவேனின்னருளைத் தேடுமுன்னமேயெய்திட
மாடுவேனைந்த மாவேன்பராபரமே ௩௬௰

உள்ளங்குழைய வுடல்குழையவுள்ளிருந்த
கள்ளங்குழையவென்று காண்பேன்பராபரமே [௩௬௧]

பட்டப்பகற்போலப் பாழ்த்தசிந்தைமாளினெல்லாம்
வெட்டவெளியாக விளங்கும்பராபரமே [௩௬௨]

பார்கினனுப்போற்கிடந்த பாழ்சிந்தைமாளினென்னை
யார்க்குஞ்சரியிடலா மையாபராபரமே [௩௬௩

பாட்டுக்கோவன்பினுக்கோ பத்திக்கோவன்பர்தங்க
ளீட்டுக்கெல்லாங்குறுகி னின்றாய்பராபரமே ௩௬௪

முத்தாந்தவித்தே முளைக்குனிலமாயெழுந்த
சித்தாந்தமார்க்கச் சிறப்பேபராபரமே ௩௬௫

உன்னுவெளியாயுரக்காதபேருணர்வா
யென்னுவிக்குள்ளே யிருந்தாய்பராபரமே ௩௬௬

தத்துவமெல்லாமகன்ற தன்மயர்க்குச்சின்மயமா
னித்தமுத்தசுத்த னிறைவேபராபரமே ௩௬௭

உள்ளக்கொதிப்பகலவுள்ளுள்ளேயானந்த
வெள்ளமலர்க்கருணை வேண்டும்பராபரமே ௩௬௮

என்னைப்பிறப்பதருளின்கடனுமென்கடனு
னின்னிறபணியரவே னிற்கைபராபரமே ௩௬௯

தானேயானன்னிலையைத் தந்தவருளானந்த
மானேமனதீத வாழ்வேபராபரமே ௩௭௰

மண்ணாதிபூதமெல்லாம் வைத்திருந்தனின்னிறைவைக்
கண்ணாரக்கண்டு களித்தேனபராபரமே ௩௭௧

## பைங்கிளிக்கண்ணி



அந்தமுடனாதி யளவாமலென்னறிவிற்
சுந்தரவான்சோதி துலங்குமோபைங்கிளியே (௧)

அகமேவுமண்ணலுக்கென் னலலெல்லாஞ்சொல்லிச்
சுகமானநீபோய்ச் சுகங்கொடுவாபைங்கிளியே (௨)

ஆவிக்குள்ளாவியேனு மற்புதனார்சிற்சுகந்தான்
பாவிகளுக்கிட்டுமோ சொல்லாய்நீபைங்கிளியே (௩)

ஆருமறியாமலென்னை யந்தரங்கமாகவந்து
சேருமபடியிறைக்குச் செப்பிவாபைங்கிளியே (௪)

ஆறானகண்ணீர்கனே ளங்கபங்கமானதையுங்
கூறாததென்னேகுகலைமொழிப்பைங்கிளியே (௫)

இன்பருவவாடையழுக் கேறுமெமதகண்ணலசுத்த
மெய்பரமமாமாடை யளிப்பானோபைங்கிளியே (௬)

உண்மைமெலான்றிரண்டென் றோராமலவீட்டுநெறி
சொன்னவரவுவகை சொல்லாய்நீபைங்கிளியே (௭)

ஊருமிலாப்பேருமிலா நற்றூர்பொற்றூருடனே
யாருமிலாதெனனை யறிவாரோபைங்கிளியே (௮)

ஊரைப்பாராமலெனைக் குளளகத்துநாயகனை
சீரைப்பாராதார்க்கருணை செய்வாரோபைங்கிளியே (௯)

என்றுவிடியுமிறை வரவோவென்றென்று
நின்றநிலையெல்லா நிகழ்த்தாய்நீபைங்கிளியே (௰)

எந்தமடலூடு மெழுதாவிறைவடிவைச்
சிந்தைமடலாவெழுதிச் சேர்ப்பேனோபைங்கிளியே (௰௧)

கண்ணுண்மணிபோலிப் பங்காடடியெனைப்பிரிந்த
திண்ணியருமின்னம்வந்து சேர்வாரோபைங்கிளியே (௰௨)

ஏடாமலர்சூடே னெமபெருமான்பொன்னடியாம்
வாடாமலர்முடிக்கு வாய்க்குமோபைங்கிளியே (௰௩)

கல்லேன்மலரேன் களிந்தவனுக்கேபூசையென்ற
நல்லோர்பொல்லாவெனையு நாடுவரோபைங்கிளியே (௰௪)

கண்டதனைக்கண்டு கலக்கந்தவிரெனவே
விண்டபொருமானையுநான் மேவுவனோபைங்கிளியே (௰௫)

காணாதகாட்சி கருத்துவந்துகாணாமல்
வீணாள்கழித்துமெலிவேனோபைங்கிளியே (௰௬)

காந்தமிரும்பைக் கவர்ந்திழுத்தாலென்னவருள்
வேந்தனெனையிழுத்து மேவுவனோபைங்கிளியே (௰௭

காதலால்வாடினதுங் கண்டனையேயெம்மிறைவர்
போதரவாயின்பம் புசிப்பேனோபைங்கிளியே (௰௮)

கிட்டிக்கொண்டன்பருண்மை கேளாப்பலவடிகொள்
பட்டிக்குமின்பமுண்டோசொல்லாய்நீபைங்கிளியே ௰௯)

விட்டோர்நெஞ்சிற் கிளர்வார்தழுவவென்று
னெட்டோரரவரவா நேசமென்றோபைங்கிளியே

கூறுங்குணமுமில்லாக் கொள்கையினுரைகவலை
யாறும்படிக்கு மணைவாரோபைங்கிளியே (உக)

சின்னஞ்சிறியேனறன் சிந்தைகவர்ந்தாரிறைவா
தன்னந்தனியே தவிப்பேனோபைங்கிளியே (உஉ)

சிந்தைமருளாத தெளிவித்தென்னையாள
வந்தகுருநாதனருள்வாய்க்குமோபைங்கிளியே (உங)

சொல்லிறந்துநின்ற சுகரூபப்பெம்மானை
யல்லும்பகலுமணைவேனோபைங்கிளியே [உச)

தற்போதத்தாலே தலைகீழதாகவைய
னற்போதவின்புவைக்க நாட்செல்லுமோபைங்கிளியே (உரு

தன்னையறியுந் தருணந்தனிற்றலைவ
ரென்னையணையாதவணமெங்கொளித்தார்பைங்கிளியே(உசு)

தாயகாரியமையெல்லாந் தந்தனைவிட்டடிமாறருளாம்
பாங்கியைச்சேர்ந்தாரிதற்குப் பணபோசொல்பைங்கிளியே

தாவியதோர்மாககடமூர் தன்மைவிட்டேயண்ணவிடத்
தோவியம்போனிற்பினென்னை யுனாதுவரோபைங்கிளியே (உஅ)

தீராக்கருவழக்கைத் தீரவைவிட்டுவிகென்னைப்பினிப்
பாரேறுதாண்டானைப பற்றுவனோபைங்கிளியே (உகூ)

தூங்கிவிழிதென்னபலன் றூங்காமற்றூங்கிநிற்கும
பாக்குகண்டாலன்றோ பயனகாண்பேனபைங்கிளியே (ஙய)

தொலலைககவலை தொலைத்துக்கலையாத
வெலலையிலாவின்பமயமெயதுவனோபைங்கிளியே (ஙக)

நன்னெஞ்சத்தன்பரெல்லா நாதனைசசேர்ந்தினபுற்றார்
வன்னெஞ்சததாலேநான வாழவிழந்தேன்பைங்கிளியே (ஙஉ)

கானேகருதினவர நாடாராசும்மாவிருந்தாற்
றானேயணைவர்வா தனமையெனறோபைங்கிளியே (ஙங)

நீர்க்குமிழிபோனறவுடனிறகையிலேசாகுவதன்று
சோககவரியாமற மிகைப்பேனோபைங்கிளியே (ஙச)

நெஞ்சகத்தில்வாழ்வார் நினைக்கினவேறென்றனையார்
வஞ்சகததாரலலரவர் மார்ககமெனறோபைங்கிளியே (ஙரு)

பன்முத்திரைசசமயம் பாழபடககலலாலடிவாழ
சின்முத்திரையரசைச சேர்வேனோபைங்கிளியே (ஙசு)

பசசைகண்டநாட்டிற பறககுமுனைப்போறபறந்தே
னிசசையெலலாமண்ணாற மியமபிவாபைங்கிளியே (ஙஎ)

பாசப்பந்தஞ்செய்ந்துனபம பாராமலெம்பெருமாறவ
ராசைதநததுனபமதற காரறோபைங்கிளியே (ஙஅ)

(இ-ள்.) கிளையளவுகூடச் செந்தமிழ்த்தரிகிறம் இன்றி அதிகமதாம்பிறந்தகல்விவல்லவாகளும இலக்கணாசமேஅறியாத மூடாகளதுமிகுந்தஅறிவையுடைய கல்விப்பிரசங்கத்தின்முன்னனிற்கார்கள் கொலைலுந்தொழிலடைகின்ற நீலோத்பலம்போன்றகண்களையும் அனிச்சப்பூவொத்தஉடம்பினையுமுடைய பெண்கள் கருப்புவில்லைத்தரிக்கின்றமன்மதனாலே விடப்பட்ட புஷ்பபாணத்தைப் பொறுப்பாாகளேயல்லாமல்கொடிதாகியயுத்ததில்விடுகிற அம்பைப்பொறுக்கார்களது போல்-எ-று (௰௯)

(நூல்வரலாறு.)

கருத்துருகவிறைவனந்திக்கருள்புரியநந்திமார்க்கண்டற்கோத,விருத்திமறைவியாசமுனிக்கவனுரைக்கச் சூதனுக்கு வியாசன்சொல்லப்
பொருத்தமன விருடியருக்கருட்சூதன் மொழிந்தசிவ புராணங்கோடி,
யுருத்திரசங்கிதையுரைததவருணகிரிவளத்தினையா னுரைக்கலுற்றேன

(இ-ள்) மனதுருகப்பரமசிவன்-நந்திகேசுரருக்கு அருள்புரியநந்திகேசுரரும் மார்க்கண்டேயருக்கருள்செய்ய மாாககண்டேயாவேதங்களையொழுங்குசெய்த வியாசருக்கருள்செய்ய வியாசர் - சூதமுனிவருக்குச்சொல்ல சூதாஒருவழிப்பட்டமனத்தையுடைய சவுனகாதிரிஷிகளுக்கருள்செய்த சிவபுராணங்கோடியாகும-அவைகளில் முக்கியமாகியஸ்காந்தத்தில் உருத்திரசங்கிதையிற சொல்லிய அருணசலஸ்தலமகிமையைச்சொல்லத்தொடங்கினேன-எ-று. (உ௰)

அருணைநகர்வளமையுமாலயனகந்தைவிடவழல் வெற்பானவாறும்
பொருவில்மககமழித்ததுவும் அாணுமையை மணந்துங்கண்புதைத்தவாறும், வருமகிடற்கொலைத்ததுவுமிறைவியிடங்கலந்ததுவும்வயிரப்பூணனிருவினையையகற்றியதுவடகலைதென்கலைவிதியாலிசைக்கலுற்றேன.

(இ-ள்.) அருணசலஸ்தலமகிமையும் பிரமாவிஷ்ணுவினுடையகர்வமடங்க-அக்கினிமலையானதும்,ஒப்பில்லாததக்கனுடையயாகததை அழித்துப்போட்டதும், பரமசிவன-பார்வதியைக் கலியாணஞ்செயததும், அப்பார்வதி-சுவாமியினுடையகண்களை மூடியதும, மகிடாசுரனை-உமாதேவிகொன்றதும்; அப்பார்வதி-வாமபாகத்திற் சோந்ததும, வச்சிராங்கதபாண்டியனுடைய பாவத்தைநீக்கினதுமாகிய சரிததிரங்களைச் சொல்லுகின்ற கிரந்தத்தை தமிழ் மொழியினாலே சொல்லத்தொடங்கினேன் -எ-று. (உ௧)

பாயிர - முற்றிற்று.

ஆக-திருவிருத்தம்-உ௧.





சிவமயம்.

முதலாவது

# திருநகரச்சருக்கம்.



அறுசீரடி ஆசிரியவிருத்தம்.

துங்கமழுவுழைபிரம்பு சுரிகையகலாதகையான் றுகிர்க்குன்றுடே,
திங்களுமிழ்நிலவனைய வெண்பொடியான் சடைமுடியான் செறிமூ
சுகண்ணான், பொங்குதிருவரையகலாப் புலித்தோலான் புயநாலான்பு
ரிமுந்நூலான், கங்கைமதிதவழ்சடையான் றிருவாணை செலுத்தும்வெ
ள்ளிக்கயிலைகாப்பான்.

(இ-ள்.) உயர்வாகியமழுவும் மானும்பிரம்பும் உடைவாளும் நீங்
காதகையையுடையவர்-பவளமலையில் சந்திரன்பொழிகின்றநிலவுபோ
லத்தேகத்தில் அணிந்த விபூதியையுடையவர்- சடைமுடியையுடைய
வர், நெருப்பாகியமூன்றுகண்களையுடையவர், விளங்குகின்றஇடுப்பில்எந்நா
ளும்நீங்காதபுலித்தோலையுடையவர், நான்குபுசங்களையுமுடையவர் மூ
ன்றுபுரியாகிய பூணூலையுடையவர், கங்கையும் சந்திரனும் தவழாநி
ன்றசடையையுடைய பரமசிவனது கட்டளையைச்செலுத்திக்கொண்
டுகைலாசகிரியைக்காக்கிறவர்-எ-று. (௧)

கொய்வனசமலர்பிறத்தான்மைவளருந்திருமிடற்றோன் குலவேள்னே
ற்றான், சைவமெனும்பயிர்தழைக்கக் கருணைமழைபொழிமேகந் தன்
னையொப்பா, னவரையுமகத்தடக்குஞ் சிலாதார்க்குப்புறத்துலவுமணி
போல்வான், றெய்வமெல்லாந்தொழச்சிவந்த மலர்ப்பதத்தானந்தி
யெனுந்திருநாமத்தான்.

(இ-ள்.) கொய்யப்பட்டதாமரைமலரையொத்த நிறத்தையும் விளும்பொருந்திய கண்டத்தையும்நல்லவெண்மையாகிய ரிஷபவாகனத்தையுமுடைய பரமசிவனுக்கு சம்பந்தமாகிய சைவசமயமென்னும் பயிரானது தழைப்பக்கருணையாகிய மழையைப்பொழிகின்ற மேகம் போன்றவர் பஞ்சேந்திரியங்களையும்அகத்தில்நின்றும் புறத்தில்தீமையாகியபொருள்களிற் போகவொட்டாமல்அடக்கிய சிலாதாரிஷிக்குப் புத்திரற்சஞ்சரிக்கின்ற உயிர்போன்றவர் விஷ்ணுமுதலாகியதேவர்களெல்லாம்வணங்க அதனாற்சிவப்பேறிய தாமரைப்பூவொத்தபாதங்களையுடையவர் இப்படிப்பட்ட தன்மையையுடையநந்திகேசரென்கிற அழகியநாமத்தைப்பெற்றவர்-எ-று. (௨)

ஈசனணிகதிமதியுந் திருவுருவுந்திருவுருவி லிசைந்தநீறும்
தேசவெனவிளங்குமொரு கயிலாயச்சிலம்புளதச் சிலம்பின்மீதே
வாசவனேமுதலிமையோர்நெருங்குதலான் மகுடமொடு மகுடந்தாக்கி
யோசையுடன்கனகமணிப்பொடியுதிர்ந்துகனகமலைக்குவமையாகும்

(இ-ள்.) பரமசிவன் தரிக்கின்ற கங்கையுஞ்சந்திரனும் மேற்சொன்னசுவாமியினது வெண்மையாகிய திருவுருவமும் அவ்வுருவத்தில் அணிந்ததிருநீறுமாகிய இந்நான்கினுடைய காந்திபோலப்பிரகாசிக்குங் கைலாசமென்று ஒருதிருமலையுண்டு அந்த திருமலைமேல் வணங்குகின்றதற்காகத் தேவேந்திரன்முதலாகிய தேவர்கள் நெருங்குகிறபடியினாலே கிரீடத்தோடுகிரீடம் இடிபட்டுச் சப்தத்துடனே சொர்ணப்பொடிகளும் ரத்னப்பொடிகளும் உதிர்ந்துமகமேரு கிரிக்குச் சமானமாகக்குவியும்-எ-று. (௩)

இந்திரநீலச்சிலையா லிசைத்தகடந்தெரியாமலெழுதிச்சேர்த்து
மந்திரமாமெனவயிரத் தூணிறுத்திமாணிக்க மதலைகூட்டிச்
செந்துகிராற்போதிகையு மரகததாலுத்திரமுஞ் செறித்ததுமீதே
சந்திரகாந்தத்தகடு பரப்பியமண்டபமுளதச் சயிலமீதே.

(இ-ள்.) இந்திரநீலக்கல்லினாலேயொன்றோடொன்றுசேர்த்துசந்து தெரியாமல் சித்திரமெழுதிச்சுவரைவைத்து மந்திரகிரிபோல் வயிரத்தூண்களைநிறுத்தி மாணிக்கத்தினாற்செய்தகொடுங்கைசேர்த்துச் சிவப்பாகிய பவளத்தினாலேபோதிகையும் மரகதத்தினால் உத்திரமுஞ்சேர்த்து அதன்மேற்சந்திரகாந்தத் தகடுமேய்ந்த மண்டபம் ஒன்றுண்டு அந்தமலையின்மேல்-எ-று. (௪)

அருமருங்குத்தானமணி யிழைத்தவரியாசனத்தி லிருந்துநீலப்
பருமணியா லிழைத்ததொரு பாதபீடிகையின்மலர்ப் பதத்தையூன்றி
யிருவுபெருங்கயிலையின்மீதிருந் துமுயலகன்மூதுகில்வலதாளூன்றி
யருமறையைமுனிவருக் குரைக்குமிலமையெனவிருந்தா னந்தவேலை.

(இ-ள்.) அந்தமண்டபத்தில்இரண்டுபக்கமும் முத்துகளிழைத்தசிம்மாசனத்திலிருந்துபெரியநீலரத்தினத்தினாலே இழைக்கப்பட்டிருக்கிறபாதக்குறட்டின்மேலேமலர்போன்றபாதங்களை வைத்துக்கொ

ண்டெந்திகேஸ்வரர் சிவகணங்களாலே மருவுப்பட்ட பெருமைபெற்ற கைலாயகிரியிலெழுந்தருளியிருந்து முயலகன்மேல வலப்பாதத்தை வைத்து அரிதாகியவேதப்பொருளை முனிவர்களுக்குத்திருவாய்மலர்ந்தருளிய பரமசிவம்போல் இருந்தார் அந்தவேளையில்-எ-று. (௫)

குற்சனுரோமசன்குமுதன் குமுதாக்கன்சகடாயன்கும்பசாதன்
வற்சலவைசம்பாயனாக ஞெரிமுனிபுலிக்காலன் வாமதேவன்
நற்சனகன்சனக்குமரன் வாதராயணன்மதங்க னடனத்தாளை
யர்ச்சனைசெய்யனந்தமுனி முதலனந்தமுனிவர்தமருகிற்சூழ

(இ-ள்.) குற்சர்ரோமர் குமுதர் குமுதாட்சர் சகடாயர் அகத்தியர் வற்சாவைசம்பாயனர் ஞெரிவியாக்கிரபாதர் வாமதேவர்சனகர்சனற்குமாரர் வியாசர்மதங்கர்சுவாமியினது நடனமபொருந்திய திருவடிகளில் அர்ச்சனைசெய்கின்ற பதஞ்சலிமுதலாகிய அனந்த முனிவர்கள் தமமுடையபக்கத்திற்சூழ-எ-று. (௬)

மன்னியமார்க்கண்டமுனி யுடனெழுந்துபணிந்துயிர்கண் மழைமின்போல, வின்னிலத்திற்பிறப்பதுவு மிறப்பதுவுமிருவினையு மெமக்குத்தோன்றச, சொன்னவொருதனிமுதலேமுத்திபெறும் பரிசெமக்குச்சொல்வதென்று, னன்னவுரைசெவிப்புகலு நந்தியருள்சுரந்துமுனிக்கருளவதானான்.

(இ-ள்.) நிலைபெற்றவயதினையுடைய மார்க்கண்டேய முனியானவர்சீக்கிரத்திலெழுந்திருந்து நந்திகேசுரரை வந்தனஞ்செய்து சுவாமி மேகத்தில்தோன்றிஅதிசீக்கிரத்தில் அழியுமின்னல்போல உயிர்களானவைஇவ்வுலகத்தில்பிறக்கிறதும இறக்கிறதும் இவைகளுக்குக்காரணமாகிய நல்வினைதீவினைகளாகிய இரண்டும் எங்களுக்கு விளங்கும்படியாகஅருளிச்செய்தருளப்பற்றுகடவுளேநாங்கள்மோட்சத்தையடைகிறதற்குத் தக்கவழியைக் கிருபை செய்யவேண்டுமென்றுகேட்க அந்தவார்த்தையைக்கேட்டவுடனே மிகுந்தகிருபையுண்டானவராகி நந்திகேசுரர் மார்க்கண்டேயருக் கருளிச்செய்யத்தொடங்கினார்-எ-று. (௭)

கம்பநதிகும்பநதி காவிரிகோதாவேரி கன்னவேணி
பம்பைநதிவேகநதி வேதவதிசரயுநதி பாமாங்கங்கை
செம்புநதிபொன்முகிநல்யமுனாநதி நருமதைமேற் செப்புஞ்சோணை
யம்புவியின்மிகவுளவங்காடினர்தம் வினையகற்று மதுவல்லாமல்.

(இ-ள்) கம்பைநதி கும்பைநதி காவேரி-கோதாவரிகிருஷ்ணவேணி-பம்பைநதி-வேகவதி-வேதவதிசரயுநதி-எல்லாநதிகளுக்கு மேன்மையாகிய கங்காநதி-தாமிரபரணி பொன்முகி - யமுனாநதி -நர்மதாநதி-மேன்மையாகச்சொல்லப்பட்ட சோணைநதியென்று அழகுபொருந்திய பூவுலகத்தில் அனேகநதிகளுண்டு அவைகளாகிய தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்தவர்களுடைய பாவத்தைநீக்கும் அதுவல்லாமல்-எ-று.

காசியெனுமொருதலமிக் கயிலையெனுஞ்சிறப்புளது கங்கைநித்தம்
வீசுதிரைக்கொழுந்தோட்டிப்பாகதிக்கு வேறோட்டும்வியனுழுமின்
மாசிலுடலதிலிறந்தான் மாமேனும்விலங்கேனுமனிதரேனு
மீசனருளுபதேசஞ் செவிப்புகலா லிறைவனெனவிருக்கலாமே.

(இ-ள்.) காசிஎன்கிற ஒருதிவ்யத்தலமானது இந்தக் கைலாசத்தைப்பார்க்கிலும் சிறப்புள்ளது அக்காசியில்வருகின்ற கங்காப்பிரவாகமானது எறிகின்ற அலைகளைக்கொழுந்தாக ஓடச்செய்து தன்னிடத்தில் விரும்பிமுழுகினால் அவர்களுக்குமோட்சத்துக்குவழிகாட்டும் களங்கம்பொருந்தியதேகம் அவ்வூரில்விட்டால் மாமாவது மிருகமாவது மனிதராவது பரமசிவனதுதாரகப் பிரம்மோபதேசம் செவியிற்சோதலாலே சிவசாரூப்பியத்தை யடைந்திருக்கலாம்-எ-று. (௯)

போகியொருபுற்றிடங்கொண் டிருப்பதுகண்டிடுதலல்லாற்புனிதர்போற்றும், யோகியொருபுற்றிடங்கொண்டிருந்ததலங்கண்டதுண்டோ வுரைப்பக்கேளு நாகமிசைநடித்தவநுக்குயிர்வேண்டித் திருதவஞ்செய் கனினக்கோயில், சேருமனத்தவரான மறுவாரூர் தனையெரித்த திருவாரூரே.

(இ-ள்.) சர்ப்பமானதுபுற்றை யிடமாகக்கொண்டிருந்ததைப்பார்த்ததேயல்லாமல் ஞானிகள்போற்றுகின்ற யோகியானவர் புற்றினிடத்திலே யிருந்ததலததைப்பார்த்ததுண்டோ அதுயாதெனிற்சொல்லக்கேளுங்கள காளிங்கனென்னும்பாம்பினமேலேறி நடனஞ்செய்த விஷ்ணுவுக்குஉயிர்பிச்சைவேண்டி லட்சுமியானவள்பூசைசெய்துக்கொண்டிருந்த கமலாலயமென்னும் தலமாகிவஞ்சம்பொருந்திய மனதையுடைய திரிபுராதிகளையெரித்தசிவன்வாசஞ்செய்கின்ற தாகிய திருவாரூர் என்னுந் திவ்வியத்தலந்தான்-எ-று. (௰)

தக்கவிராட்புருடன்மனத்தலமெனுமோர் தலமுளதத் தலத்தின் மீதே
முக்கணனர்நடிப்பவர்மூர்த்தியிலாயிரத்திலொரு மூர்த்திதானே
யிக்கயிலையிடத்துறைவதன்னிலத்தின் பெருமைநம்மாலிசைக்கலாமே
யக்கனகசபைகண்டா ரரியயன்காணுதமுத்தியடைகுவாரே.]

(இ-ள். பெருமைபொருந்திய விராட்புருடனுடையஇருதயத்தலமாகிய சிதம்பரமென்று ஓர்தலமுண்டு அதிலுள்ளதாகிய கனகசபையில் மூன்றுகண்களையுடையபரமசிவன் ஆனந்தத்தாண்டவஞ் செய்வார் அவருடையமூர்த்திகரத்தில் ஆயிரத்திலொன்றுதான் இக்கைலாசபுதத்திலிருக்குமென்றால் அந்தஸ்தலத்தினது பெருமையை நம்மாற்சொல்லக்கூடுமோ அப்படிப்பட்ட அழகுபொருந்தியகனகசபையைக்கண்டவர்கள் விஷ்ணுவினாலும பிரமாவினாலுமகாணப்படாத மோட்சததையடைவார்கள்-எ-று. (௰௧))

தாங்காழியவன்சிவனை வழிபடுந்தொல்லையந்தத்தலத்தைப்பார்க்கி, லோகாரவடிவநிலேயுயிரிழுங்காலுடலழியாதொளிகெடாது-விளங்காதுநெகிழாதபிறவுயிரால்வருந்தாது வெடிதலிடாது-நீங்காமைமண்ணிருமி பிறவாதுகிடக்கும் வலச்செனிமேலாக.

(இ-ள்) சக்கரத்தைக்கையில்தரிக்கின்ற விஷ்ணுவானவர் பரமசிவனைப்பூசைபண்ணிய விர்ததாசலமென்று ஒருஸ்தலமுண்டு அந்தஸ்தலத்தைப்பார்க்குமிடத்தில் அதுபிரணவசொரூபமா யிருக்கும் அந்தஸ்தலத்தில் உயிர்விட்டால்தேகமழியாது நிறங்குன்றுதல்சம்மாட்டாதுகட்டுகுலையாது மற்றயபட்சிமிருகங்களால்பின்னமாகாதுவெடிப்படாது அமிலதுர்க்கந்தமும்புழுவும்உண்டாகாமல்வலதுகாது மேலாகக்கிடக்கும்-எ-று. (௰உ)

பொய்ம்மிடமுகனைவென்றவம்மையிடமகலாதபுனிதமூர்த்தி,செம்மையிடமென்றிருந்த கருமகிடமுகமாகச்செறிகேதார-மிம்மையிடர்மறுமையிடர்ஞானமில்லாச் சிறுமையிடரெலாந்தீர்க்கும், மும்மையிடம்பெறமூலகுக்கெளிதாகத் தனியிருந்தமூதநிபோலும்

(இ-ள்) மெய்ம்மையாகியஎருமை முகததினையுடையமகிடாசுரனை ஜயித்தபார்வதிவாமபாகததில் நீங்காதபரிசுத்தராகிய பரமசிவனானவர் செம்மையாகியயிடம இதுதானென்று எழுந்தருளியிருக்கிற கறுப்பாகிய எருமையினதுமுகம்போல் விளங்கியதிருக் கேதாரமென்னுமஸ்தலமானது இகதஜெனனத்தில்வருகிறதுக்கமும் மறுமையில்வருகிறதுக்கமும்ஞானமில்லாததினாலே உண்டாகிறதுக்கமுமாகிய எல்லாததுயரதனையுமதீர்க்கிறதற்குமூன்றுலகத்தாருக்கும்எளிதாகிய தனியேயிருந்த மூத்திஸ்தானம்போல்இருக்கின்றது-எ-று. (௰௩)

இருப்பனத்தன்பருப்பதத்திற் பிரமராம்பிகையுடனென்றிரண்டுபோதுமு-மிருப்பனத்தன் பணிந்திமையோருலகுமுதலனைத்துலகும் விதித்தான்மற்றைத்-திருப்பதிக்கேயிருப்பவனுந் தேவர்களுஞ்சராசரமாய்ச்செனித்தவ்வூரி-லிருப்பதற்குமுயல்வரென்றுரெத்தலமுமத்தலத்துக்கிணையதாமோ.

(இ-ள்) மல்லிகார்ச்சுனமென்கிற பர்வதத்தில் பிரமராம்பிகையுடனேபரமசிவனானவர் எழுந்தருளியிருக்கிறாரென்று அன்னவாகனத்தையுடையபிரமாவானவர்வந்துபதநியோடு இரண்டுவேளையும் வணங்கி அவருடையஅருள்பெற்றுத் தேவலோகமுதல் எல்லாலோகத்தையும படைத்தார்மற்றைதிருப்பதியிலிருக்கின்ற வெங்கடாசலபதியும் தேவர்களும் அந்தஸ்தலத்தில்சரமாகவும் அசரமாகவும பிறந்திருப்பதற்குத்தவஞ்செய்வார்களென்றால் எப்படிப்பட்டஸ்தலங்களும் அந்தசேஷத்திரத்துக்குச் சமானமாகுமோ-எ-று. (௰௪)

விருப்படியார்சொரிந்தவறுகலருனே விழியிடந்தவேடர்காவிற்செருப்படியுமுதைகந்தபிரான் காளத்திகைசமேனுஞ்செய்வபூரி - பருப்பத

அங்கமெல்லாமயிர்பொடிப்ப கண்டுணைவிழிபொழிய மறுகிப்பா
ய, செங்கையிணைமலர்க்குவிய மொழிதவறகெம்போது தெளிவில்
லாமற், கங்கையணிசடையானே யருணகிரிப்பெருமானே கனற்கண்
ணனே, எமையாளுடையானே யெனத்துதித்து விழித்தநற்பின்
னைசப்பதானன்.

இ-ள். தேகமெல்லா மயிர்க்குச்செறியக் கம்பிதங் கொண்டு இர
ண்டுகண்களிலும்நின்று அருவிபோல் ஆனந்தபாஷ்பம் வரமலர்போ
ன்ற இரண்டுகைகளும ஒன்றாய்க்குவிய வார்த்தைதடுமாற அநேகநா
ழிகை ஞாபகமில்லாமல் கங்கையைத்தரித்திருக்கின்றசடையையுடை
யவரே அருணகிரியிலெழுந்தருளியவரே அக்கினிக்கண் ணையுடைய
வரேஎங்களையாட்கொண்டவரேஎன்று தோத்திரஞ்செய்து விழித்துக்
கொண்டு அதன்பின்பு சொல்லத்தொடங்கினார்நந்திகேசுரர்-எ-று உ௬

எழுசீரடியாசிரியவிருத்தம்.

சத்தியமதாமொழிவன் முத்திதருமூறது தனக்குரியநாமமிகவு
ண், டத்தனையுநான் பொழியவல்லதனை வலேநதிலொாறபவளவேயு
லுவேன், சித்தியுதவுங்கௌரிசேகநக ரென்றுபெயர் தென்னருணை
யென்றுபெயர்சிறவைத்தசிவலோகநக ரென்றுபெயர் நீடுசதுர் வாயு
நகரென்றுபெயரே.

இ-ள். அப்படிஸ்தோத்திரஞ் செய்தபின்பு நந்திகேசுரர் சொல்
வார்கேளும மார்க்கண்டேயரே சத்தியமாகச்சொல்லுகிறேன் மோட்
சத்தைக்கொடுக்கிற ஸ்தலமொன்றுண்டு அதற்குரிய நாமங்களோ அ
நேகம்அதனை பெயரையுஞ் சொல்லுகிறதற்கு நான்எவ்வளவுசக்தி
யுடையவன் ஆகிலும அவைகளில் சிலநாமமாத்திரம் சொல்லுகிறே
ன் சித்தியைக்கொடுக்கிறகௌரிநகரமென்றும் தேசுநகரமென்றும அ
ழகிய அருணாசலமென்றும் சிறப்புப்பொருந்திய சிவலோக நகரமெ
ன்றும் நாகரீகமிகுந்த வாயுநகரமென்றும் நூல்களில்சொல்லப்பட்ட
திருநாமங்களையுடையது-எ-று. உ௭

சத்தபுரியேமுதலெடுத்தலம் யாவுமொருதட்டொரு தட்டத
னிலே, யத்தலமுமிட்டெடுதிரா சிடுக்கவணை கட்கதிகமானதொனிநக
நகாய, முத்திநகரென்றுபெயர் ஞானநகரென்று பெயர்மூர்த்தியதலேச்
சாமெனுஞ், கத்தநகரென்றுபெயர் தென்கைலையென்று பெயர்சோண
கிரியென்று பெயரே.

இ-ள்.பின்னும் நந்திகேசுரர்சொல்வார் சத்தபுரிகளென்கிற அயோ
த்திமதுரை மாயாபுரி காசி-காஞ்சிபுரி-அவந்தி-துவாரகை முதலாகிய

நன்மைசேர்கார்த்திகை விளக்கையேற்றுதல்
மணமகன்மகுடமாணிபிறங்கின்றதுமே.

(இ-ள்.) வெள்ளிநிறமாகியமேகங்கள் அந்தமலையடிவாரத்திற்சேர்ந்தாலயாவராலும் எண்ணப்பட்ட கைலாசகிரிமேல் அந்தமலையிருக்கிறது போலாம் குளிர்ச்சிபொருந்திய கார்த்திகையாதத்தில் கார்த்திகாதீபம அந்தமலைமேலேற்றினால் பூமிதேவியினுடையகிரீடத்தில்பதித்தரத்தினம்போலாம்—எ-று. (௩௩)

அன்றுமாறிசை முகனளவிடாமுதன்
மன்றல்சோர்ந்திடுமலை வடிவுகொள்கையா
னன்றுமமருகனு மாமமோர்குல
மென்றுளமகிழ்ந்ததே யிமையபூதரம்.

(இ-ள்) முற்காலத்தில் பிர்மாவினாலும் விஷ்ணுவினாலும் அறியப்படாத பரமசிவன்கீர்த்திபொருந்திய அந்தமலையுருவங் கொண்டதினாலே இமோதபாவதாரசனனவன் இத்தனைகாலமவனுக்கும்வேறுசாதியாயிருந்தநம்முடையமருமகன் நம்முடையசாதியாய்ப்போய்விட்டானென்றுமனதுசந்தோஷித்ததான்-எ-று. (௩௪)

பன்னிருதிங்களும பரிதியானது
மன்னியமதியமும் வலமதாய்வரு
மந்நிலையுரைக்கவென் னறிவுபோதுமோ
வுன்னியவாசையா லுரைக்கலுற்றனன்.

(இ-ள்.) பன்னிரண்டுமாதமும் சந்திரசூரியர்கள் மகாமேருவைவலஞ்செய்தல்போலப்பிரதட்சணஞ்செய்துவருவார்களென்றால் அந்த அருணாசலத்தினது பெருமையைச்சொல்வதற்கு அற்பமாகியஎன்னுடையபுத்தி போதுமோ ஆனாலுஞ்சொல்லவேண்டுமென்று நினைவுகொண்டபத்தியினால் சொல்லத்தொடங்கினது—எ-று. (௩௫)

அர்க்கமாமலையுள தகத்தகீழ்த்திசை
நர்கணாயிரத்தவ னண்ணிவாழ்த்துவன்
தெறகிலேயுளதுபுத்தேளிர்மாமலை
பொறமைவேந்தசன்றினம் புகழ்ந்துபோற்றுவான்

(இ-ள்.) அருணாசலமென்னு மலைக்கு அடுத்த கீழ்ப்பக்கத்தில் அர்க்கமலையென்று ஒருமலையுண்டு அதில ஆயிரங்கண்களையுடையதேவேந்திரன் இருந்துகொண்டுசுவாமியை ஸதோத்திரஞ்செய்வான் அவ்வருணகிரிக்கு அடுத்ததென்பாரிசத்தில் தெய்வமலையென்று ஒன்றுண்டு அதில்சிவந்தகைகளையுடைய யமன்புகழ்ந்துகொண்டு வணங்குவான்—எ-று. (

மேற்றிசைத்தண்டமாவிலங்கலுண்டதிற்
சேற்றிசைவருணன் முன்செங்கைகூப்புவன்

(இ-ள்.) மகத்தாகிய கீர்த்திபொருந்திய வச்சிராங்கதபாண்டியன் அருணாசலத்தைப் பிரதட்சணம்வந்ததினாலே தன்னுடைய பாவத்தை நீங்கினான் பெருமைபொருந்திய கைலாசமென்னும் ஸ்ரீசாலியிலுள்ள இந்திராதிகளும் அந்தஸ்தலத்தைவலம்வந்து மோட்சத்தையடைந்தார்கள்-எ-று. (சக)

எழுசீரடியாசிரியவிருத்தம்

ஆதியாமிவர்கடொடங்கியின்றளவுக்கணேசருண்டருணையைநினைந்துங்-காதலானுரைத்துங்கேட்டுமுன்கண்டுங்கால்களால்வலமதில்செய்தும் நீதியாயிருந்துநெறியினுணடந்து நெடுங்கயம்படிந்தறம் புரிந்துஞ் சோதிதாடொழுதும் பணிவிடைசெய்துந் துளக்கிலா முத்திபெற்றிருந்தார்.

(இ-ள்.) சொல்லப்பட்ட இவர்கள் ஆதியாகத் தொடங்கி அன்றுமுதல் இன்றையவரைக்கும் அனேகம்பேர் அருணாசலத்தைநினைத்தும் ஆசையோடுஸ்தோத்திரஞ்செய்தும்கேள்விப்பட்டும் தரிசனஞ்செய்தும்கால்களாலே பிரதட்சணஞ்செய்தும் அதில்நீதிபொருந்தியவேதமார்க்கத்தை அனுசரித்துக்கொண்டிருந்தும் மகத்துவம்பொருந்திய தீர்த்தங்களிலேமுழுகியும் தருமங்களைச்செய்தும்சோதிசொரூபமாகியசிவனைத்தொழுதும் திருப்பணிசெய்தும் கெடுதலில்லாதமோட்சத்தை பெற்றிருந்தார்கள்-எ-று. (சஉ)

அப்பதிதமிழ்நாட்டுளதிடைபெண்ணையாறுசெய்யாறுபிங்கலையாஞ் செபமிகமலைநதி சுழிமுனையாஞ்செய்த தொன்றாயிரம்பலமாமுப்பத்துமூன்றுகோடிதேவர்களுமுனிவருந் தவஞ்செயவாரதற்கோர்ஒப்புவேறில்லையிப்பாரூட்டிடத்துமும்பாரூட்டிடத்துமென்றுரைத்தார்.

இ-ள். அந்தஅருணாசலஸ்தலமானது தமிழ்நாட்டின்கண்ணிருக்கிறது அந்தப்பதிக்கு வலப்பக்கத்திலேவருகிறபெண்ணையாறுஇடையென்னும்நாடியாகும் இடப்பக்கத்திலேவருகிறசெய்யாறு பிங்கலையென்னும்நாடியாகும் கமலையென்கிறநதி சுழிமுனையென்னும நாடியாகும்அந்தநதிகளில் ஸ்நானஞ்செய்தால் ஒன்றுக்கு ஆயிரம்பங்குபலன்வருமமுப்பத்துமூன்றுகோடி தேவர்களும்முனிவர்களும் அந்தஸ்தலத்தில்தவஞ்செய்வார்கள் அதற்குச்சமானம இந்தலோகத்திலும் மேலுலகத்திலும இல்லையென்றுசொன்னார் நந்திகேசுரர்-எ-று. (சங)

அற்றமிலவன்சொலருணையின்சிறப்பாலகமகிழ்ந்துருகியமுனிவன்மற்றுளதலத்திலதிகமென்றுரைத்தவாய்மையமனங்கொளாதவப்பான் : இற்றதீவுடையேனுதலாலொருசொற்றெளிந்திலேனெனச்சொனு

னதற்குறற் றுளமுணர்ந்தான்மொழியெனமொழிந்தான்முனிவனு மவர்க்கினைமொழிவான்.

(இ-ள்.) சிவபத்தியிற் சோர்வில்லாத நந்திகேசுரர் சொல்லப்பட்ட அருணாசலத்தின் மகான்மியத்தினாலே இருதயமகிழ்ந்து உருக்கத்தை யடைந்த மார்க்கண்டேயர் மற்றசிவஸ்தலங்களைப் பார்க்கிலும அருணாசலம அதிகமென்றுசொன்னதைமனதில் ஒப்புக்கொள்ளாமல்சொல்வார் சுவாமீ நான்சிறிய அறிவையுடையவனானபடியினாலே நீங்கள்திருவுளம்பற்றியது நன்றாயதோன்றவில்லையென்றுசொல்ல அதுகேட்டுச்சலத்தையும உள்ளத்திலுணர்ந்த நந்திகேசுரர்உமக்குண்டான சந்தேகத்தைசொல்லுமென்றுகேட்கமார்க்கண்டேயர்சொல்வார்-எ-று. (௪௪)

தில்லையைக்காணக்காசியிலிறக்கச்சிறக்குமாரூர்தனிற்பிறக்க, வெல்லையில்பெருமையருணையை நினைக்கவெய்தலா முத்தியென்றுரைத்தீர். சொல்லொணாவிலுதலங்களுந் தம்மிலொக்குமென்றுரைத்திடாதடிகேளெல் லிருந்தருணை யதிகமென்றுரைத்தருளெனவருள்செய்வானவனும.

(இ-ள்.)சிதம்பரத்தைத் தரிசனஞ்செய்தாலும் காசியிலே தேகத்தைவிட்டாலும்சிறப்புள்ள திருவாரூரிலேபிறந்தாலும்அளவில்லாதபெருமையுடைய அருணாசலத்தை நினைத்தாலும் முத்திகிடைக்குமென்று அருளிச்செய்தீர் இதனாலுஸ்தலங்களையும ஒன்றுக்கொன்றுசமானமென்று திருவுளம்பற்றாமல்சுவாமி அல்லிமலர்களையுடையதடாகஞ்சூழ்ந்த அருணாசலத்தைமாத்திரம்அதிகமென்றுகட்டளையிட்டதை அனுக்கிரகஞ்செய்யவேண்டுமென்று மார்க்கண்டேயர்கேட்க அந்தநந்திகேசுரரும அருளிச்செய்கிறார்-எ-று. (௪௫)

இறந்திடுந்தொழிலும்பிறந்திடுந்தொழிலுமெண்ணியபடியவைமுடியா, பறந்திடுமவைக்குஞ்சிலவிலங்கினுக்கும்பாதவமுதலோருயிர்க்கு, நிறைந்தபுன்னீசரங் குருடர்க்குமக்கு நிருத்தமண்டபந்தொழுவோரதற்றிகழ யனார்சிலசிலர்க்கெளிதாமல்லவர்க்கரியதாமதுவே.

(இ-ள்.) கேளும் மார்க்கண்டேயரே ஒருவன் இறக்குந்தொழிலும் பிறக்குந்தொழிலும் நினைத்தபடிமுடியாது அதுஇருக்கட்டும பட்சிஜாதிகளுக்கும, மிருகங்களுக்கும விருட்சமுதலாகியஜீவவர்க்கங்களுக்கும்புன்மைநிறைந்த நீசருக்கும், குருடருக்கும், சபாபதியினது நிருத்தசபையை தரிசனம்பண்ணக்கூடாது பூர்வசன்ம புண்ணியத்தினாலே அந்தச்சபைக்குப் போய்க்காணத்தக்கதவர்களாகியசிலர்க்குமாத்திரங் கிடைக்கும் மற்றவர்களுக்கு அரியதாகும் அந்தஸ்தலம்-எ-று. (௪௬)

குண்டகர்பதிதருக்கோளகர்புலையர்கொலைபுரிநருறுப்பினிற்குறைந் தோர், கண்டகர்நெடுந்தூரத்தினிலிருப்போர்கருணைசேரருணை-யூரர்

ஈத எண்டகவொருகா லினைத்திடமுத்தி யிவரலால்விலங்கு புள்மரங்
கள்-முண்டகமுதலாயினவுமன் காணமுளைத்திடமுத்தியேபெறுமால்

(இ-ள்.)ஸ்திரீயானவள் தன்கணவனுக்கன்றிவேறொருவனுக்குப் பெறப்பட்ட குண்டகர்களுக்கும், பாவிகளுக்கும் விதவை பெறப்பட்டகோளகருக்கும்-நீசருக்கும-கொலைசெய்கிறவர்களுக்கும் அவையவங் குறைந்தவர்களுக்கும்-தீமைசெய்கின்றவர்களுக்கும - வெகுதூரத்திலிருப்போர்களுக்கும்-கிருபைபொருந்திய அருணசலஸ்தலத்தை நன்றாக ஒருதரமினைக்க முத்தியுண்டாகும் இவர்களல்லாமல்மிருகங்கள்- பட்சிகள்-மரங்கள்-தாமரைமுதலாகிய கொடிபூண்டுகளும் அந்தவூரில் முளைத்தால்முத்தியையடையும்-எ-று. (௬௭)

சிலையெலாமிலிங்கமதுசிவலோகந்தேவர்பாதவங்கள்பாதவங்க
ளலையுலாமபுனல்கள்சடையுலாங்கங்கையறுந்துமுணமாருண்ணமுதா
மூலவியேவருதல்புவிவலம்வருதலூரத்தசொல்சுருதியாமுறங்கலை
மலைவருசமாதியாகுமத்தலத்தைமானுமோமற்றொருதலமே.

(இ-ள்.)அந்தஸ்தலத்திலிருக்கிற சிலைகளெல்லாம் லிங்கங்களானபடியினாலே அதுசிவலோகமாகும் அந்தஸ்தலத்திலிருக்கிற விருட்சங்களெல்லாம் கற்பகவிருட்சங்களாகும் அந்தஸ்தலத்திலிருக்கிற அலைபொருந்தியநீரெல்லாம் சுவாமியின்சடையிலிருக்கிறகங்கையாகும், அந்தஸ்தலத்திலிருக்கிறவர்கள் சாப்பிடுகிறவுணவுகளெல்லாம் தேவாமிர்தமாகும்-அந்தஸ்தலத்தில் சஞ்சரித்தால் பூமிப்ரதட்சணஞ் செய்ததாகும்-அவ்வூரில்சொல்லும்வார்த்தைகள் வேதமாகும்- அந்தஸ்தலத்தில் நித்திரைசெய்தால்நிஷ்டைகூடி சமாதியிருந்ததாகும் ஆனபடியினாலே அதற்குமற்றொரு ஸ்தலம்சமானமாகுமோ-எ-று. (௬௮)

முத்தழல்புரிந்தோர்வண்மறைதெளிந்தோராவகைவேள்வியுமுடித்தோ, ரொத்தவம்புரிந்தோ ரெவ்வறஞ்செய்தோ ரெண்வகை யோகிய ரெனினு மத்தலநினையா தவர்க்கிலைமுத்தியாதலா லயாவனிடத்துஞ்சுந்தமானிடராய்ப் பிறந்ததைநினைத்துத துஙகிலாமுத்திபெறற்கிருப்பார்.

(இ-ள்.) காருகபத்தியம்-ஆகவனியம்-தட்சணாக்கினி என்கிற மூன்றக்கினியைவளர்த்தவர்களும்-ருக்குயசுர்-சாமம அதர்வணம என்னுநான்குவேதங்களை யுணர்ந்தவர்களுமபிரமயாகம்தெய்வயாகம பூதயாகம-பிதிர்யாகம்-மானுடயாகம்-என்கிற ஐவகை யாகங்களையும் நிறைவேற்றினவர்களும் இத்தன்மையாகிய தவஞ்செய்தவர்களுமப்படிப்பட்ட தருமஞ்செய்தவர்களும்-இயமம்-நியமம்-ஆசனம்பிராணாயாம பிரத்தியாகாரம்-தாரணை-தியானமசமாதி யென்னப்படுகின்ற அஷ்டாங்க

யோகஞ்செய்தவர்களுமாகிய எப்படிப்பட்டவர்களாயிருந்தாலும் அந்த அருணாசலத்தைநினைக்கவிட்டால் அவர்களுக்குமுத்தியில்லை ஆனபடியினாலேதான் தேவர்களாய்ச் சொர்க்கலோகத்தி லிருந்தவர்களுமஞ்ஞானமுள்ள மானிடராகப் பூமியிற்பிறந்து அந்த அருணாசலத்தைத்தியானஞ்செய்துகெடுதலில்லாதமுத்திநிலையையடைந்திருப்பார்கள். (சக)

பொருவிலாசுவர்க்கத் தமிர்தமுண்டிருப்போர் போகபூமியைத்த
னிபுரப்போ ரருணைமாநகரிற்கிருமியாய்ப்பிறப்பதிகமென்றுநாங்கொ
ள்வார், மருவுமப்பதியிற்பிறப்பது நாடி மகம்புரிந்தவர்க்கலாற்கிடையா,
திருவருள்படைத்தார்க்கெளிதலான்மற்றதேவர்கள்யாவர்க்குமரிதே.

(இ-ள்.) ஒப்பில்லாத சொர்க்கலோகத்தில்-நரை-திரை-மூப்பு உண்டாகாதபடி அமிர்தமுண்டிருப்போர்களாகியதேவர்களும் போகத்தையனுபவித்தற்குரிய அந்தச்சொர்க்கமுதலானலோகங்களைத்தனித்தனியாளுகின்ற தேவேந்திரன்முதலாகிய திக்குப்பாலகர்களும் அருணாசலஸ்தலத்தில் கிருமியாயப்பிறக்கிறது சொர்க்கத்தின்பத்தை அனுபவிப்பதைப்பார்க்கிலும் அதிகமென்றுபிறப்பதற்கு ஆசைப்படுவார்கள் தெய்வத்தன்மைபொருந்திய அந்தப்பதியில் பிறக்கிறது நூறுயாகஞ்செய்தவர்களுக்கு அல்லாமற் கிடையாது சுவாமியினுடைய கிருபைபெற்றவர்களுக்குக் கிடைக்கும் அவர்களன்றிமற்றதேவர்கள்முதலான மகத்துவம்பொருந்திய யாவர்க்கும் அப்படிப்பிறக்கிறது கிடைக்கமாட்டாது-எ-று.

வெற்றிரும்பிடத்தில் செம்பில்வெண்கலத்தில் வெள்ளியில்வெள்
ளியபொன்னிற், குற்றமொன்றில்லாக்குயிற்றியமணிபோற்குலவியசி
வனிருந்திடுவன், மற்றையதலத்தி லருணையென்றுரைக்கும் வளம்பதி
தனிலெழுந்தருள்வன், பொற்றகட்டிடத்து மணியெனவுலாத்தான் பு
னிதனுறைபவருணந்தி.

(இ-ள்.) சொற்பவிலைபெற்ற இரும்பிலும், செம்பிலும், வெண்கலத்திலும், வெள்ளியிலும், வெள்ளையபொன்னிலும் பதிக்கப்பட்ட யாதொருதோஷமில்லாத மாணிக்க ரத்தினம்போல் மற்றஸ்தலங்களில் அங்கங்கு நிறைந்தபரமசிவன் எழுந்தருளியிருப்பார் பொன்னினாற்செய்த தகட்டில் பதிக்கப்பட்ட அந்த ரத்தினம்போல அருணாசலமென்றுசொல்லப்பட்ட வளம்பொருந்திய ஸ்தலத்தில் எழுந்தருளியிருப்பாரென்று பரிசுத்தமாகிய நந்திகேசுரர் திருவுளம்பற்றினார் ஆனபடியினாலே எல்லாஸ்தலத்திற்கும் இது அதிகமாயது-எ-று.

கண்ணினால் விளங்குந் திருமுகமுகத்தாற் கரியகள் விளங்குமவ் விரண்டின், பண்ணினால் விளங்குமுடலெலாமவைபோற் பரமனால் விளங்குட லருணை, யண்ணருன் விளங்குமருணைமாநகராலமலனோ டருணை யூரகமா, லெண்ணிலாப்பதிகளெவைகளும் விளங்கு மெவற்றினுஞ் சிறந்ததென் றிசைத்தான்.

(இ-ள்.) கேளும் மார்க்கண்டேயரே கண்களிருக்கிறதினால் முகம் பிரகாசிக்கிறது முகத்தினிடத்திலிருக்கிறதினால் அந்தக்கண்கள் விளங்கிக் கொண்டிருக்கும் இந்தஇரண்டினுடையசேர்க்கைஅழகினாலே தேகமெல்லாம் விளங்கும் இவைப்போலப் பரமசிவனாலே அருணாசலம் சிறப்படைந்திருக்கும் அந்தஅருணாசலத்தால் சுவாமியும் அதிக அழகையுடையவராய் விளங்குகிறார் அந்தஸ்தலத்திலேயும் அதிலெழுந்தருளியிருக்கிறசுவாமியினாலும் எண்ணிக்கையில்லாதஎல்லாக்ஷேத்திரங்களுமசிறப்பாயவிளங்கும் ஆனபடியினாலே எல்லாஸ்தலங்களிலும் அதுசிறந்ததென்று திருவாய்மலர்ந்தருளினார்-எ-று. (௬௨)

இதனால் எல்லாஸ்தலங்களு முடலாகவும், அருணாசலஸ்தலம்முகமாகவும் அதில்சுவாமிகண்ணாகவும் சொல்லப்பட்டது.

வீசலரிலைமெய் குளிர்ந்திடிப்கொடியின் வேரினீர்சொரிந்திடி னது போற்பூசனை யருணைநகரிலேசிறிதும் புரையறநடக்குமேயாகிற் காசிமே முதலெத்தலமெலாம்பூசை கணம்பெறநடந்ததாமிலையே, லீசவாழ்ந்த ததலமெலாம்பூசை யியற்றிலெனியற்றிடா திருக்கிலென்.

(இ-ள்.) ஒருகொடியினதுவேரில் நீர்வார்த்தால் அக்கொடியும் அதினிடத்திலுண்டாகின்ற புஷ்பங்களும் இலைகளும் குளிர்ச்சியை யடையும் அதுபோல் அருணாசலஸ்தலத்தில் சுவாமிக்குஎவ்வளவேனும்பூசைகுறைவில்லாமல் நடக்குமானால் காசிமுதலாகிய எல்லாஸ்தலங்களினும் மேன்மையாகப்பூசைநடந்ததாகும் அந்த திருவண்ணாமலையில் பூசைநடவாவிட்டால் மற்றஸ்தலங்களில் நடந்தாலென்ன நடவாவிட்டாலென்ன ஒருபயனுமில்லை-எ-று. (௬௩)

நிலந்தொழுமருணாசலந்தனிலிருந்து நெஞ்சினிலையமாயப் பிரிந்தோர், நலந்தனைவிரும்பி நடந்தவர்முன்செய் நலங்களு மிழந்துநலரூபர், குலந்தனி லுதித்தோ ராயினும் புலையர் குலத்தவராயினுங் கோடிய, ருலந்தவருயிரோடிருக்கினுமதற்கோர் குவமைசொலவறுமீதெரிக்கும்.

(இ-ள்.) உலகத்தார் போற்றுகின்ற அருணாசலஸ்தலத்தி லிருந்து இதைவிட உயர்ந்தஸ்தலங்கள் இருக்குமென்று மனதில் சந்தேகங்கொண்டுபிரிந்துஒருக்ஷேத்திரத்தைநாடி நடந்தவர்களுக்கு அவர்கள் அத

ற்குமுன் செய்யப்பட்டதவங்களும், சருமங்களும், பிரயோசனப்படா துகள் அவர்கள்நல்லகுணத்திற்பிறந்தவர்களானாலும் நீசராவர்கள்நல்ல குணங்களையுடையவர்களானாலும் கொடியகுணத்தாராவார்கள் அவர்கள் உயிரோடிருந்தாலும் இறந்தவர்களாவார்கள் அந்த அருணாசலத்துக்கு வேறேருஸ்தலங்களைச் சமானமாகச்சொன்னாலும் இந்தத்தோஷங்களெ ல்லாம் உண்டாகும்-எ-று. (௫௪)

என்றுதானவனனைச் சிறப்பொழுகிவாக்கேதுவோடெடுத்தினி தியம்பிக் கன்றுமானும் மழுவுஞ் சூரிகையுந்தரித்த கடவுணன் திருந்தன னலலைச், சென்றுசென்றுவணங்கி நெக்குநெக்குருகிச் சென்னிமேற் செங்கைகளேற்றி, ஒன்றுமானந்தப்பெருங்கடலிடைப்புக்குணாச்சி யாய்முனிவனிருந்தனன்.

(இ-ள்) இப்படிப்பிரகாரம் அருணாசலஸ்தலத்தினுடைய பெருமையை துவேடுமுனிவர்களுக்கு இனிதாயெடுத்து அருளிச்செய்து மான்கன்று மழு உடையவர் இவைகளைத்தரித்த நந்திகேசுரராமவர் களிப்புற்றிருந் தார் அந்தநந்திகேசுரனைப்பலதரம் வந்தனஞ்செய்து நெக்குவிட்டுருகி ச் சிரசின்மேல் சிவந்தகைகளை நெடுநேரங்கூப்பி ஒன்றுபட்டவராய் ஆ னந்தசமுத்திரத்தில்முழுகி தன்னைமறந்தவராகிப்பின்பு ஞாபகம்வந்து இதனைச்சொல்லுவாராமார்க்கண்டேயர்-எ-று. (௫௫)

முதலாவது.

## திருநகரச்சருக்கம்.

முற்றிற்று.

---

ஆக-திருவிருத்தம்-௭௯.



# திருவண்ணாமலை



பிர்மா-விஷ்ணு இருவரும்பரமசிவத்தினது அடிமுடியைக்காணுதல்.



உ

சிவமயம்.

இரண்டாவது

# திருமலைச்சருக்கம்.

கலிநிலைத்துறை.

எந்தையேயரு ணந்தியேயடியவர்க்கெளியாய்
சிந்தையானது மகிழ்ந்தனனருணையின்சிறப்பா
லந்தமாநகரிடத்திலே சிவனழல்வடிவாய்
வந்தவாறுடனது மலையாகியவகையும்.

(இ-ள்.) அருணாசலஸ்தலத்தினது மகிமையைக் கேள்வியுற்றமார்க்கண்டேயர்சொலவார்சம்முடையஆண்டவரே அடியேனுக்கு அருள்செய்த நந்திகேசுரசுவாமியே அடியார்களெளியவரே நீர்அருளிச்செய்ததிருவண்ணாமலையென்னும் ஸ்தலத்தினதுமகிமையினால்மனங்களிப்படைந்தேன் அப்படிப்பட்ட ஸ்தலத்தினிடத்திலே பரமசிவனாவர் அக்கினிசொரூபமாய்த் திருவுருக்கொண்டதும் அதுபின்பு மலையுருவமானதும்-எ-று. (க)

அம்மலைச்சுடரடி தலைதெரிகிலாதயன்மால்
விம்மலுற்றது மவர்க்கருள்செய்ததும விளம்பாய்
கைம்மலைக்கட கரியுரிபுனைந்திடுங் கைலை
செம்மலைத்தொழுஞ் செல்வனேயெனவவன்செப்பும்.

(இ-ள்) அந்தஅக்கினிமலையினது அடியும்முடியும்அறியக்கூடாமல்பிரமாவும்விஷ்ணுவும வருத்தப்பட்டதும்பின்புசுவாமி அவர்களுக்குஅநுக்கிரகஞ்செயததும்திருவுளம்பற்றவேண்டும் கைபெருத்திய மலைக்கு ஒத்ததாயாகத்தையுடைய யானையினதுசர்மத்தைத்தரித்தரு

ளிய கைலாசவாசகராகிய பரமசிவனைவணங்கும்படியான செல்வத்தை யுடையவரே யென்றுசொல்ல அந்நந்திகேசுரர் சொல்லத்தொடங்கி ஞர்-எ-று. (உ)

பஞ்சபாதகமொருவனப்பதியிலேபண்ண
நெஞ்சினுனினைததிடுகினு நினைத்ததேபரமாய்த
தஞ்சமாகியமுததியாமெனமறைசாற்று
மஞ்சொலாலதுமொழிந்தபேர்க்கென்னபேறரிதே.

(இ-ள்.) ஒருவன் அந்த அருணாசலஸ்தலத்திலே பஞ்சபாதங்க ளைச்செய்யவேணடுமென்றுநினைத்தாலும் அப்படிநினைத்ததே மேற் பட்டபுண்ணியமாகிஅதனால்பற்றுககோடாகிய முத்தியுண்டாகுமெ ன்று வேதங்கள்முறையிடும் அன்பையுண்டாக்கும் நல்லசொற்களினு லேஸ்தோத்திரஞ்செய்பவர்களுக்கு என்னபேறுகிடைக்கமாட்டாது என்றவாறு. (௩)

ஆகையாலுமக் கன்றியேயெமக்குமுண்டதிகஞ
சோகமேகங்கள்தவிர்ப்பவஞெருபரஞ்சுடராய்
மாகமூடுறவளர்ந்ததுமாலயாககாகப்
போகலிங்கமொன் றுனதுமொருவகைபுகல்வேன்.

(இ-ள்.) ஆனபடியினுலேமார்க்கண்டேயரே இந்தமகான்மியத் தைக்கேட்கிறஉமக்கேயல்லாமல்எனக்கும் அதிகபலனுண்டாகும் து க்கத்தையும் மோகத்தையும் நீக்கிவிடுகிற சிவன்ஒப்பற்ற பெரியசோ திசொரூபமாய்ப் பிரமாவிஷ்ணு இவர்களுக்காக ஆகாசம்அளாவிவள ர்ந்தும் சர்வத்திரர்க்கும் போகத்தைக்கொடுக்கநின்ற லிங்கமென் றுசொல்லும்படி திருவுருக்கொண்டதும் எனக்குத்தெரிந்தஅளவில் கொஞ்சம் சொல்லுகிறேன்-எ-று. (௪)

ஒடுக்குநாளினிலயனரியுருத்திரன்மகேச
னெடுஞ்சதாசிவன்விந்துநாதஞ்சததிநெறியே
யடங்கிடும்பரசிவத்தினிற்பரமசிவமனைத்துங்
கடந்ததத்துவ முடிவிலேநின்றதுகருதி.

(இ-ள.) சர்வசம்மாரகாலத்தில் முறைப்படிச் சகலஉயிர்களும் பிரமாவிடத்தில்ஒடுங்கிப் பிரமாவிஷ்ணுவிடத்திலொடுங்குவார் விஷ் ணுமகேசுரனிடத்தி லொடுங்குவார் மகேசுரன்சதாசிவனிடத்திலொ டுங்குவார் சதாசிவம் விந்துவினிடத்திலொடுங்குவார் விந்துநாதத்தினி டத்திலொடுங்கும் நாதம் சத்தியினிடத்திலொடுங்கும் சத்திபரமசிவத் திலொடுங்கும் அந்தபரமசிவம் திருவுளங்கொண்டு எல்லாங்கடந்த த த்துவமுடிவிலேநின்றது-எ-று. (௫)

பரசிவத்தினில்வருபராசத்திபாற்குடிலை
விரிவிதியபர தத்துவமடையவிலேவிரிந்து

மருவுமைவரு வொடுங்கியமுறையிலேவந்தா
ரரிமகன்படைத்திடுவதுநினைந்தனனகத்தில்.

(இ-ள்.) அப்படியெல்லாம் ஒடுங்கினகாலத்தில் தனியாகிநின்ற பரமசிவம்உலகம்உண்டாக்கவேணுமென்று திருவுளங்கொண்ட அளவில் அந்தசிவனிடத்திலேதோன்றிய பராசத்தியினிடத்தில்குடிலையென்னுஞ்சத்திதோன்றியது அதில்பெருமைபொருந்திய மற்றைத் துவங்கள முறையே உண்டானதுகள் பஞ்சகிருத்தியங்களுக்குரியபிரமா விஷ்ணு ருத்திரன்மகேசுரன் சதாசிவன்முன்னே ஒடுங்கிய முறையே உண்டானார்கள் விஷ்ணுவினுடைய புத்திரனாகிய பிரமாவானவர் உலகத்தைச்சிருஷ்டிக்கிறதற்குமனதிலெண்ணினார்-எ-று. ()

மரீசியங்கிரன் புலத்தியன்புலகனுன் மறையோர்
கிருதுவத்திரிசனபதி யெழுவருநினைத்தா
ருரியதக்கனும வலப்பதப்பெருவிரலுதித்தான்
பிருகுமார்பினு மறத்திறைமுகத்தினும்பிறந்தார்.

(இ-ள்.) அப்படிபிரமாநினைத்தவுடனே மரீசி-அங்கிரன்- புலஸ்தியா-புலகர்-கிருது-அத்திரி-சனபதியென்கிறஏழுரிஷிகளும பிறந்தார்கள் தக்ஷனவலதுகால்பெருவிரலில்பிறந்தான் பிருகுமார்பினிடத்திற பிறந்தான் தருமதேவதைமுகத்திற்பிறந்தது-எ-று. (எ)

உன்னுமைந்தரின் மரீசிபாற்காசிபனுதித்தான்
பன்னுதக்கனு மைம்பதுபெணகளைப்பயந்தா
னன்னகாசிப னவர்பதின்மூவரையணைந்தான்
முன்னளாகியவதிதிபாலிமையவர்முளைத்தார்.

(இ-ள்.) பிரமாவினிடத்திற்பிறந்த பிள்ளைகளாகிய ஏழுவரில் மரீசிரிஷியினிடத்தில் காசிபரிஷிபிறந்தார் தக்கனென்பவன் ஐம்பது பெண்களைப்பெற்றான் அந்தஐம்பதுபெண்களில பதின்மூன்றுபெண்களைக் காசிபர்விவாகஞ்செய்தார் மூத்தவளாகிய அதிதிவயற்றில முப்பத்துமூக்கோடி தேவர்களும்பிறந்தார்கள்-எ-று. (அ)

இருமைசேர்த்திதி யிரணியனிரணியாக்கர்களைத்
தெரியவீன்றனள் சிறப்புறுந்திதியெனுமிளையாள்
தருணமைந்தரி லிரணியன்பிரகலாதனைமுன்
டருமைமைந்தர்க ளவரைப்பயந்தனனவருள்.

(இ-ள்.) அதன்பின்பு அதிதிக்கு இளையவளாகிய சிறப்புப்பொருந்திய திதியென்பவள் இரணியன் இரணியாட்சசனென்கிற இரண்டுபேரையும்பிரசவித்தாள் அந்தஇருவரில் இரணியன் பிரகலாதன்முதல் ஐந்துபிள்ளைகளைப்பெற்றான்-எ-று.

பிரகலாதனன் றவத்தினால்மூவரைப்பெற்றா
னாருளுமைந்தரில் விரோசனன் மாவலியளித்தான்
மாவுமாவலி வாணனென் றொருவனைப்பயந்தா
னானருச்சனைபுரிந்தவ னயன்றொழவிருந்தான்.

(இ-ள்.) அந்தப்பிரகலாதனன் தவத்தினாலே மூன்றுபிள்ளைகளைப்பெற்றான் அந்தமூவரில் விரோசனனென்பவன் மாவலியென்பவனைப்பெற்றான் மாவலிவாணாசூரனைப்பெற்றான் அந்தவாணாசூரன்பரமசிவனைப்பூசித்துப் பிரமாதொழுபடியாக வாழ்வு பெற்றிருந்தான்-என்றவாறு. (௰)

தனுவளித்தவன் சம்பரன்முதலினோர்பதின்ம
ரனையதானவர் பெற்றனன் சிங்கிகையணங்கு
பணியிராகுவே முதலொருநால்வரைப்பயந்தாள்
பினையளாகவொரு மூன்றுபேரசுரரைப்பெற்றாள்.

(இ-ள்) மலைகளினுடைய சிறகையறுக்கிறதற்குத் தேவேந்திரனுக்குதகன்முதுகெலும்பைக்கொடுத்துத தேகத்தைவிட்டவராகிய ததீசிரிஷியெனபவர் சமபரன்முதலாகிய பத்து அசுரர்களைப்பெற்றார் அந்தப் பத்துப்பேரில் சிங்கிகையென்பவள் இராகுமுதல் நாலுபிள்ளைகளைப்பெற்றாள் அவளுக்கு இளையவள் மூனறுபேர்அசுரரைப்பெற்றாள்-எ-று. (௰௧)

காலகேயர்களறுவரைப் பயந்தனள்காலை
காலநீள்சிறைக் கருடனுமருணனுந்தவிர
நாலுபாலரைப புதல்வராவினதையுமயந்தாள்
ஆலநேர்விழிக்கத்துரு பணியெலாமளித்தாள்.

(இ-ள்.) காலையென்பவள் காலகேயர்கள் ஆறுபேரையும்பெற்றாள் மிகவும்நீண்டிருக்கிற சிறகினையுடையகருடன் அருணனோடு கூடநாலுபிள்ளைகளை வினதையென்பவள்பெறறாள் விஷத்தையொத்த கண்களையுடைய கத்துருவென்பவள் பாம்புகளெல்லாவற்றையும் பெற்றாள்-எ-று. (௰௨)

அரிட்டையென்பவளிடத்திலேயரம்பையேமுதலாய்த
திரட்டிமங்கையர் பிறந்தனரிலங்கினைமுனிவ
னருட்டலத்திலென் னிரட்டிகந்தருவரையளித்தா
ளருட்டுவாள்விழிக் கபிலையாற்பதின்மர்வந்துதித்தார்.

(இ-ள்.) அரிட்டையென்பவளிடத்தில் அரம்பை ஊர்வசிமுதலான பெண்கள்பிறந்தார்கள் இலங்கினையென்பவள் முனியினுடைய கிருபையினாலேபதினாறுவகையாகியகந்தருவர்களைப்பெற்றாள் வாள்போன்ற கண்களையுடையகபிலையிடத்தில்பத்துப்பிள்ளைகள்பிறந்தார்கள்-எ-று.

அங்கிரர்சனபதிகள் காந்தருவரையளித்தார்
தங்குமத்திரி கதிரமதிபுலத்தியன்முனையா
பொங்கிராக்கதர் வானரர்கின்னராபுலக
னகுமைந்தரகிம் புருடர்பின்விலங்கையுமளித்தான்.

(இ-ள்.) அங்கிரர்-சனபதிஎன்கிற இருவரும் காந்தருவரைப்பெற்றார்கள் அத்திரியென்பவர் சூரியசந்திரரிருவரையும்பெற்றார் புலத்தியா-இராட்சதர்-வானரர்- கின்னரர்-இவர்களைப்பெற்றார் புலகரிஷியென்பவர்கிம்புருடரையும மிருகங்களையும்பெற்றார்-எ-று.                                                    (௰௪)

தருணராகியவசுக்களைச் சனபதிதந்தான்
பிருகுவென்பவன் கவியுடன்சவுனரைப்பெற்று
னிருவரோடுசெந் திருவையு மபிருகுபெற்றெடுத்தான்
பருவமைந்தரிற் கவியுமோவெள்ளியைப்பயந்தான்.

(இ-ள்.) சனபதியென்பவர்பின்னும் தருணம்பொருந்தியஅஷ்டவசுக்களைப்பெற்றார் பிருகுவென்பவர் கவியென்பவனையும்சவுனகரையும்பெற்றார் இந்தஇருவரைப்பெறறதுமல்லாமல் பின்பு லட்சுமியையுமபெற்றார் அந்தபபருவம்பொருந்திய பிள்ளைகளில் கவியெனபவர் சுக்கிரனைப்பெற்றார்-எ-று.                                                    (௰௫)

பரியதானதன் றேவிமூக்கிரண்டினும்பரிதி
யுரியவாண்பரி யாகிப்பெட்டிரியதைத்தூற
வரிசைபட்டிய மருத்துவரிருவரும்வந்தார்
விரி * சராசரம் பிறந்தனபலபலவிதமாய்.

(இ-ள்.) சூரியன்தன்மனைவியையச்சேருகிறதற்கு யத்தனப்பட்டபோது அவளதற்குப்பொருந்தாமல் பெண்குதிரையாயோடினாள் சூரியன் ஆண்குதிரையாயததாரதத அவளை திருமபிப்பார்த்தாள் அப்பொழுது சூரியன்தனதுபெண்சாதியி னிரண்டுமூக்கிலும இந்திரியந்தங்கவூற வரிசையாகிய அசுவினிதேவர்களிருவர்பிறந்தார்கள் அதன்பின்பு பலாக சரமும அசரமும அனேகவிதமாயுண்டாயின-எ-று.                                                    (௰௬)

கலிவிருத்தம.

கண்டுலகெலாமது கற்பனைகளென்றே
புண்டரிகவேதியன் மதத்திரிபுரத்தில்
தண்டியெதிர்கொண்டுபகை தகவிசைவண்டார்
வண்டுளபமாயனை வைதுரைவழங்கும.

(இ-ள்.) இப்படிச்சகலமும உண்டாக்கிய பிரமதேவர் இந்த உலகெல்லாமம்முடையசிருஷ்டியினாலல்லவோ உண்டாயினவென்று அகங்காரங்கொண்டு அதனாலவைகுந்தத்தில் வலுவிற்போயெதிர்ந்து பகைகொள்ளுமபடி சங்கீதம்பாடாநின்றவண்டுகள்சூழ்ந்த துளபமாலையைதரித்த விஷ்ணுவைப்பார்த்து அவமதித்துச சிலவார்த்தைகள் சொல்லத்தொடங்கினார்-எ-று.                                                    (௰௭)

---

* சரம்-நடையுள்ளன. அசரம் - நடையில்லன.

ஏழுலகமேழுபில மேழுபுயலோடே
ழாழிமுதலேழுகிரி யாமவையியற்றி
வாழுமுயிரனைத்தையு மகுத்திடமனத்தால்
பாழிகொளமரீசிமுதன் மைந்தர்கள்படைத்தே.

(இ-ள்.) வாராயவிஷ்ணுவே பதினாலுலகங்களையுங்கறுத்தமேகங்களையுமசத்தசமுத்திரங்களையும, முதன்மையாகிய சத்தகுலபருவதங்களையும உண்டாகும்படிமனத்தினாற்படைத்து எப்பொழுதும்வாழ்கின்ற எல்லாவுயிர்களையும உண்டாக்கவலிமைபொருந்திய மரீசிமுதல் ரிஷிகளைப்பெற்றேன்-எ-று. (௰௮)

மைந்தரதுமைந்தர்கள் குருக்களுடன்வானோர்
சந்திரன்முதற்பெரிய தானவர்களானோர்
கந்தருவர்கிம்புருடர் சித்தர்கணநாத
ரிந்திரன்முதற்றிசைக ளெட்டினுமிருப்போர்.

(இ-ள்.) வாராய்விஷ்ணுவே என்னுடையபிள்ளைகளுடைய பிள்ளைகள் குருவாகிய பிரகஸ்பதியுடனே எல்லாததேவர்களும, சந்திரசூரியர்களும், அசுரர்களும், கந்தருவர்-கிம்புருடர்-சித்தர்- கணநாதர்களும தேவேந்திரன்முதலாகிய திக்குப்பாலகர் எட்டுப்பேருமாயிருக்கிறார்கள் இவர்களெல்லோரும் என்னாலல்லவோ உண்டானார்களென்று பின்னுஞ்சொல்லுவார் பிரமதேவர்-எ-று. (௰௯)

எஞ்சுதலிலாவிறைவ னென்பதனையென்பேர்
கஞ்சனெனுமைந்தனை மறந்திடுகர்த்தா
வஞ்சமில்படைப்பொழியி லெப்படியளிப்பாய்
செஞ்சுவரிலாதெழுது சித்திரமுமுண்டோ.

(இ-ள்.) குறைவில்லாதசகலத்துக்கும் நானேகர்த்தனென்பதையும், என்பிள்ளைதான் பிரமாவென்பதையும், மறந்துவிடுகின்றகையினாலே உலகத்தைப்படைக்காவிட்டால் எப்படிக்காப்பாற்றுவாய் சுவரில்லாமலெழுதுகிறசித்திரமுமுண்டோவென்று பின்னுஞ்சொல்லுவார் பிரமதேவர்-எ-று. (௨௰)

அளித்திடுகளிப்பினை யகத்தினில்விடாயேல்
வெளிப்படவொருத்தனை யளித்திடவிதிப்பேன்
குளிர்ச்சியகடற்கிடை குதித்திடதனுள்ளே
யொளித்திடுசாத்திரனுனைச் சருவுமுன்னே.

(இ-ள்.) வாராய்விஷ்ணுவே சகலத்தையும் இரட்சிக்கிறோமென்கிற மதத்தைவிட்டுவிடு நீவிடாமற்போனால் உன்னுத்தியோகத்தைநீக்கி மற்றொருத்தனையுண்டாக்கி இரட்சிக்குமதொழிலுக்குவைத்துப்போடுவேன் அப்பொழுது வேனனபமுடையபுத்திரபௌத்திரர்களாகிய தேவர்கூட்டங்கள்வந்து உன்னைக்கொல்லும்படிவளைத்துககொள்ளுகிறதற்குமுன்னே திருப்பாற்கடலுக்குள்ளேஒளித்துப்போவென்றுசொன்னார்பிரமதேவர்-எ-று.

வித்தகமு னிப்பிருகு விட்டமுனிவாலே
பத்துருவெடுத்ததனை பகுத்தறிகிலாயோ
வத்தனையுடற்களு மமைத்தபடியாலென்
கைத்தலமுமிப்படி கறுத்ததாடிபாராய்,

(இ-ள்.)ஞானசொரூபியாகிய பிரிகுரிஷி யானவரிட்ட சாபத்தினா லேபத்துதரம பூமியிலேபிறந்தாய்நீ அதைப்பகுத்தறிய வில்லையோ அப்படிப்பிறந்தபோதெல்லாம் அவ்வளவு பெரியஉடல்களையெல்லாம்படைத்துப்படைத்து என்கைகள்காய்ப்பேறினபடிகறுத்துப்போயினபாரென் றுபின்னுஞ்சொல்லுவார்—எ-று, ௨௨

உந்திமலரோனென விகழ்ச்சியுரையாதே
முந்தவொருதூணிடை முளைத்தனையுனக்கு
தந்தையெனவோவல்து தாயெனவோசொல்
செந்தழல்பிரந்துகளை நீயப்பதறியாயோ

(இ-ள்.)வாராய்விஷ்ணுவே நம்முடைய நாபிக்கமலத்திலே தானே வந்தவனென்றுநிந்தனைசொல்லாதே முன்னாலே நீஒருதூணினிடத்திலேபிறந்தாயே அந்ததூணை உனக்குதகப்பனென்றுசொல்லட்டுமா அல்லதுதாயென்றுசொல்லட்டுமா அந்தத்தூண் உனக்குதந்தையானால் னக்குநீதந்தையாவாய் செந்நிறம் பொருந்திய நெருப்புமூண்கிளினிடத்திலேபிறந்து மூங்கிலைத்தானே கொளுத்திப்போடுகிறதை யறியாயோ அப்படிஉன்னிடத்திலே நான்பிறந்தாலும்உன்னையழித்துப்போடுகிறேனென்றுரர்பிரமதேவர்—எ-று, ௨௩

வேதனிவைசொற்றன கொடும்படைவெதுப்பிக்
காதிடை துளைத்தனல்பு கட்டினகடுப்பக்
கோதமோடெழுந்தபுகை கொண்டநகைகொண்டே
மாதவன்மதித்தனன் மறுத்திவையுரைப்பான்

(இ-ள்.)பிரமாஇப்படி சொன்னவார்த்தைகள் விஷ்ணுவுக்கு இரண்டுகாதிலும் வேலாயுதத்தைப் பழுக்கக்காய்ச்சித் துளைக்கவிட்டுள்ளேசெலுத்தியநெருப்புப்போலதகிக்கவிருந்த கோபங்கொண்டுபுகையெழும்புபடியாகநகைத்து இவனுக்குஇந்த அகங்காரம்வந்த தெந்த விதத்திலேயென்று ஆலோசித்துச்சிலவார்த்தைகளைச்சொன்னார்விஷ்ணு—எ-று, ௨௪

வந்தவழிதன்னையு நினைந்திலைமனத்தென்
னுந்தியுனதன்னை யெனஉன்னுதலையில்லாய்
தந்தைசிறுமைநர்பிழை தன்னையுணராரென்
றிந்தவுரைசொல்லினை யிகழ்ந்ததுபோதேனே

(இ-ள்.)வாராய்பிரமாவே நீவந்தவழியையும் நினைத்தாயில்லைஎன்னுடைய நாபியைதாயென்று ஆலோசிக்கவும் இல்லை தாய்தகப்பன் மக்கள் செய்தபிழையை ஒருகுற்றமாகநினையார்களென்றுதைரியமாகசொல்லினையோ இனிமேல இப்படிபொறுக்கமாட்டேனென்றுபின்னுஞ்சொல்லுவார்.

கன்றுமதுவுக்கயிட வப்பகடுநானு
மென்றனையாரகவு மிகழ்ந்ததுயிர்குடித்தேன்
மன்றமொருதீமைசெயின்மைந்தனெனவுண்டோ
வன்றியுடனேயுமறுத்தெறிகிலாரோ

(இ-ள்.)கோபத்தையுடையமதுவும் யானைபோன்றகைடவனும்ன
னக்குப்பிள்ளைகளல்லவாஎன்னையிகழ்ந்துஎதிர்த்த ‘டியினாலேகொன்
றுவிட்டேன்பிள்ளைபெற்றவரு தீங்குசெய்தால் மகனென்று பார்க்கக்கூடு
மோ அதுவல்லாமல்தேகத்திலே ஒருகட்டிகண்டால் அதைஅறுத்தெ
றிந்துசொஸ்தபடுத்திக்கொள்ளாமலிருக்கிறார்களோமனுஷர்கள்.(    சா)

பித்தனுனதோர்தலைபிடுங்கியெறிபோதி
லத்தலைமகனென வமைக்கவிதியில்லா
எத்தலைவனென்பதுனை யித்தகைமைகொண்டோ
பைத்தலையராமுடிகொள் பாரிடம்விதித்தாய்,

(இ-ள்.)வாராய் பிரமாவே பயித்தியக்காரனாகிய சிவன்உன்னு
டைய தலைகளிலொன்றைப் பிடுங்கி எறிந்தகாலத்தில் அந்தத்தலையை
மறுபடியுண்டாக்கிக்கொள்ள வகையில்லை உன்னைப்படித்தலைவனெ
ன்றுசொல்லுகிறது இந்தத்தலையைக்கொண்டுதானே படத்தையுடை
ய ஆதிசேடன் முடியிலிருக்கிறபூமியைப்படைத்தாயென்றார்விஷ்ணு

மச்சவுருவங்கொடு மறைதொகுத்தேன்
விச்சைபுளதானவரை வென்றுயிர்குடித்தே
னச்சமரமாமெனினும் வைத்தமரமென்றே
யச்சமுறுகின்றனை யழிக்கவறிதன்றே,

(இ-ள்.)வாராய்பிர்மாவே சோமுகாசூரன் உன்னிடத்தில்வேத
ங்களைப் பிடுங்கிக்கொண்டுபோனபோது நான்மச்சாவதாரங்கொண்டு
அந்த அசுரனைக்கொன்று வேதங்களைவாங்கித்தந்தேன் அதுவல்லாம
ல சாமார்த்தியமுள்ள அநேக அசுரர்களைக்கொன்றுதேவர்களோடு உ
ன்னையுங்காப்பாற்றினேன் எட்டிமரமானாலும் தான்வைத்தமரமாக
விருந்தால்வெட்டார்கள் அப்படிப்போல் பிள்ளையான உன்னைக்கொல்
லக்கூடாதென்றுபயப்படுகிறேனென்றார்விஷ்ணு—எ-று, (௨௮)

என்றொருவருக்கொருவ ரெத்தனையுரைத்தார்
கன்றினர்புயத்தின்மிசை கைத்தலமடித்தார்
நின்றுலகுதித்தனர் நெருக்கினர்சிமிர்ந்தார்
துன்றியகனற்பொறிசுருக்கெழவிழித்தார்

(இ-ள்.)இந்தப்பிரகாரம் ஒருவருக்கொருவர் எத்தனைவார்த்தை
களையோ சொல்லிக்கொண்டிருந்தார்கள் கோபித்துக்கொண்டுபுஜதசி
ன்மேல் கைகளாலே அடித்துக்கொண்டார்கள் நின்று பூலோகத்தில்
குதித்தார்கள் நெருங்கினார்கள் நிமிர்ந்தார்கள் நெருப்புப்பொறிநெருக்
கமாய்விழச்சுறுகசெனககண்களைவிழித்தார்கள்—எ-று, ௨௯

முந்தியவனுற்றதுயர் யாவையுமொழிந்து
வந்தவரவேதெனவ வருகதனைசெய்கின்றார்.

(இ-ள்) சருவசங்காரகாலம்வந்ததென்று சொல்லும்படி இருவருஞ்சண்டைசெயயும்போது 'அந்தவேளையில்தேவர்களெல்லாம பயப்பட்டுத் தேவேந்திரனிடத்திற்போயசேர்ந்து தங்களுடையதுக்கத்தைச்சொல்லுகிறதற்குமுன்னேதேவேந்திரன் தானபட்ட துன்பங்களெல்லாஞ்சொல்லிப்பின்பு நீங்கள்வந்தகாரியம் ஏதென்றுகேட்கத தேவர்கள்சொல்லுவார்கள்—எ-று. (௲௪)

ஆரணனுநாரணனு மானவிருவோருந்
தாரணியிலேமிகு சமர்தொழில்வினைத்தா
ரோணியவேறுகதி யில்லையெவருக்கும
காரணனையேதொழுதல் காரியமிதென்றார்.

(இ-ள்) பிரம்மா விஷ்ணுவுமாகிய இருவரும் பூமியில்மிகுந்தயுத்தத்தைச்செய்கிறார்கள் எங்களுக்குப் பிழைக்கத்தகுந்தமாாககம வேறேயில்லை எல்லாருக்கும் காரணமாயிருக்கிற பரமசிவனைதொழுது இந்தச்செயதியைசசொல்வதேகாரியமென்றுசொன்னார்களதேவாகள

நாயகனிசைந்துபின ர் நாகவுலகத்தோர்
ஆயமலாபோலடி துதித்தரிவைபாகா
மாயமுடன்மாலயன் வருந்தமது திராய்
தாயலதுமைந்தர்துணை தாரணியிலுண்டோ.

(இ-ள்) இப்படிச்சொல்லத்தேவேந்திரனும் சம்மதித்துப்பின்பு அவனோடு தேவாகளெல்லோருமபோயச் சிவனுடைய பரிசுத்தமாகிய தாமரைமலாபோன்ற பாதத்தைததொழுது மங்கைபாகனே ஞெசக்கொண்டு விஷ்ணுவும பிரமாவும சண்டைசெய்வதனால் வருந்துக்கதனைததீாககவேண்டும பிள்ளைகளுக்குத்தாயேதுணையல்லாமல் மற்றொருதுணை பூமியிலுண்டோவென்று சொன்னார்களதேவர்கள-எ(

உருப்படுசகட்டைநிக ருற்றுலகின்மீதே
யிருட்படுபிறப்பினை யிறப்பினையுறாதே
பொருட்பெறவுனக்கடிமை புககளவிலாவுன்
னருட்கடல்குளித்திட வடைக்கலமதானோம.

(இ-ள்) உருண்டுகொண்டுபோகாநின்றவண்டியினுடையசக்கரம்போல அஞ்ஞானம்பொருந்திய பிறப்பையுமிறப்பையு மாறிமாறியடைந்து வருத்தத்தை யனுபவியாமல் மோட்சத்தைப்பெற உனக்கடிமையாகப்புகுந்து உன்னுடைய அளவில்லாத கிருபைக்கடலில் குளிக்க அடைக்கலமானோமென்றாகள் தேவாகள—எ-று. (௲௭)

புழுக்குடையுடம்பை பொறுக்கமுடியாக
விழுக்குடையநீக்சைகெட விச்சையருள்வோனே

முழுக்கடவிடத்தின் முழுக்காளுமேமாறு
வழுக்கமலமற்றிட வடைக்கலமதானோம்.

(இ-ள்) அநேகம்புழுக்கள் குடைந்துகொண்டிராநின்ற உடற்பாரத்தைத்தப்பொறுக்கமுடியாத இழுக்காகிய அஞ்ஞானங்கெடப்பிரியத்தினாலே கிருபைசெய்கின்றசுவாமியே பெரியசமுத்திரத்தினிடத்தில் தினம்முழுகினாலும் போகாதமும்மலமாகிய அழுக்கற்றுப்போக அடைக்கலமாயுமமைச்சேர்ந்தோமென்றார்கள் தேவர்கள்-எ-று. (௩௮)

எண்ணமினிவேறிலை யெமக்கருள்செய்யென்றே
கண்ணுதலைவிண்ணவர்கள் கற்றுமொழிபோதி
லண்ணலுமுணர்ந்தனனத்துயிரினுள்ளே
யெண்ணெயெனநிற்குமவ னீதறிகிலானோ.

(இ-ள்.) இனிமேல்வேறேஆலோசனையில்லை எங்களுக்குக் கிருபைசெய்யுமென்று சிவனைதேவர்களபுகழ்ந்து ஸ்தோத்திரஞ்செய்யும்போதில் சுவாமியும் அவ்விருவருக்கும் வந்தசண்டையின்மூலத்தையறிந்தார் எல்லாவுயிர்களிடத்திலும் எள்ளினிடத்து எண்ணெயைபோல்நிற்கும் சுவாமி இது அறியமாட்டாரோ அறிவார்—எ-று. (௩௯)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

நடுக்குறுமுனிவரோடு மமரரெலாம்பயந்துவிர நாகமீது
படுக்கைபுரிதிருமாலும் பங்கயத்திருந்தயனும் பகைமைதீர
வடுக்கியிடுமபுவனமெலா மடுக்கழியாதிருக்கமனத் தருள்வதாகி
தடுக்கரியதழலுருவத தொருவரையாயிருவரையுந் தடுப்பதானான்.

(இ-ள) நடுக்கமடைந்தமுனிவர்கள் தேவர்களெல்லாரும் பயத்தைநீங்கும்படி சர்ப்பசயனத்தில் நித்திரைசெய்கின்றவிஷ்ணுவும்தாமரைப்புஷ்பத்தில்வீற்றிருக்கின்றபிர்மாவும் ஒருவருக்கொருவர் பகைமைநீங்கவும் அடுக்கடுக்காயிருக்கிற அண்டங்களெல்லாம் அடுக்குக்குலையாமலிருக்கும் கிருபைசெய்வதற்காக தடுத்தற்கரிய அக்கினிசொரூபத்தோடுகூடிய ஒருமலையாகி இவ்விருவரையுந் தடுக்கும்படி எழுந்தருளினார் பரமசிவம்—எ-று. (௪௰)

பாதலத்திற்பணிகளெல்லா விழுதாகவதன்கீழ்ற் பருவேரோடிப்
பூதலத்திலகிளைத்திமையோர் குலமெல்லாமலர்ந்துமலப் புண்டரீகன்
மீதலத்துமுகடுடைத்துக கடாகவெளிகடந்துபெரு வெளிக்குமேலா
மாதலத்துக்கிதுவுமொரு கனன்மேருவதித்ததென வளர்ந்தமாதோ.

(இ-ள்.) பாதாளலோகத்திலிருக்கிறபாம்புகளெல்லாம் அந்தமலைக்குச்சல்லிவேராகவும் அதன்கீழ்ப்பருத்தவேரோடி பூமியிற்பெரிதாய் கிளைத்துக் தேவலோகங்களெல்லாந்தாண்டிப் பிர்மலோகத்துமுகட்டையுடைத்து அண்டகடாகவெளியைக்கடந்து அதற்குஅப்பாலிருக்கிற பெரியவெளிக்கு மேலாயிருக்கிற இடத்துக்கும் அக்கினிசொரூபமாகிய மகாமேருஅடுத்ததென்றுசொல்லவளர்ந்தது—எ-று. (௪௧)

(இ-ள்.) சொல்லப்பட்ட அரைக்ஷணத்தில்பிரமா ஆயிரங்காதவழி பறந்துமேலாகப்போனார் படத்தையுடைய ஆதிசேஷன் சுமந்தபூமியை அரைநொடியிலே ஆயிரங்காததூரம் துளைத்துக்கொண்டு விஷ்ணுகீழாகப்போனார் அதுஎப்படியிருந்ததெனறால் அந்தமலைதங்கமயமாகியராட்டணப்பூட்டைப்போலவும் அதில்யிறைக்கிறதற்குக்கட்டிவிட்டிருக்கின்ற நீலரத்தினத்தோண்டிபோலவும் முத்துகளிழைத்திருக்கிற அழகியதோண்டிபோலவும்யிருந்தது—எ-று. (௬௫)

பூவுலகையரியகன்று கீழுலகின்முறைமுறையே புகுந்துபோந்து
காவலுறுமாவலிதன்போகவதி யெனுமபுரமுங் கடந்துமேவித்
தேவர்தொழும்பரஞ்சுடர்வாளாடகேசுரசரதுஞ் சிரத்தும்போற்றி
மூவுலகைமுதலளந்தோனேழுலகமளந்துமதனமுடிவுமாணான்.

(இ-ள்.) வராக அவதாரமெடுத்து விஷ்ணுவானவர்பூலோகத்தைக்கடந்து அதின்கீழிருக்கின்ற ஏழுலகத்தையு முறைமுறையே துளைத்துக்கடந்துபோய் மாவலிச்சக்கிரவர்த்திகாவலிலேயிருக்கிற போகவதிபட்டணத்தைத்தாண்டி அப்புறம்தேவர்களவணக்கும் பிரமசொரூபம்விளங்காநின்ற ஆடகேசுரத்தைக்கண்டு கைகளினாலு சிரசினாலும்வணங்கி முன்னேமூன்றுலகத்தையுமளந்தவ இப்போதேழுலகங்களை அளந்து அந்தமலையினடியைக்காணமற்போனார்—எ-று. (௬௬)

வளர்ப்புடையபிறைபோல வளர்மருப்புந் தேய்பிறைபோல்மழுங்கிப்போகக், குளப்படியுமூக்குநுனியும் பிணத்தேமாசைபோற் குறைந்துபோக, வளப்பரியதுயரிலவிழுந் தொருதாறுண்டொழிந்த தமபினரானைவாழ்த்தி, யிளைப்பதுவுஞ்சலிப்பதுமற் றெழுதலமுமிடர்க்கடலு மேறினானே.

இ-ள்.) அப்படிமகாவிஷ்ணுவராகரூபங்கொண்டு தேடுகிறபோது வளர்பிறைபோல நாளுக்குநாள்வளர்ச்சியுற்ற இரண்டுகொம்புகளும் தேய்பிறைபோல்குறைந்து மழுங்கிப்போகவும், குளம்புகளும், மூக்குநுனியும்-தேய்மானமாயின்பு எப்படிகுறைந்துபோமிறதோ அப்படிதேய்ந்துகுறைய எண்ணக்கூடாததுக்கசமுத்திரத்தில்விழுந்து தாறுவருஷகாலந்தேடியுங்காணாமல் பின்பு தெளிவுவந்து இது சிவனுடைய செயலென்றறிந்து அவனாதியானஞ்செய்து இளைப்புஞ்சலிப்புமநீங்கித் தன்னுடையதுக்கசமுத்திரத்தையும், ஏழுலகத்தையும தாண்டிவந்தார் -எ-று. (௬௭)

தமபோரைமுதற்றவிக்கத் தழற்பிறப்பாதவந்தத்தலத்தைச் சார்ந்தாரணமபோதனிதன்முடிபினளவறியானெனமனத்திலையகிந்தாரணமபோருக்கரியானைச் சேடனைத்தனதுவிழிநயனத்தோடே, வைபம்போதைப்புனைவானைப்பலகாலும்பணிந்துருகிப் பாவினின்றான.

(இ-ள்.) தனக்கும்பிரமாவுக்கும் வந்தகலகத்தை நீக்கும்படிக்கு அக்கினிசொரூபமாகஎழுந்ததலத்தைச்சேர்ந்து அழகியதாமரைப்பூவிலிருக்கிறபிரமா இந்தமலையின்முடியை அறியமாட்டானென்றுநிச்சயி

ஞ்செய்துக்கொண்டு ஸம்பூரணமனுஷர்களுக்கு அரியவனை எப்படிப்பட்டவர்களுக்கு தூரமாகயிருக்கிறவனைத் தாமுடைய கண்ணாகியபுஷ்பத்தோடு அழகியபுஷ்பங்களைத் தரிக்கானின்றவனைப்பலதரமும் வந்தனஞ்செய்து உள்ளமுருகிப்பாவின விஷ்ணு—எ-று. (௪௮)

கலிவிருத்தம்.

இன்னதாமிறைஞ்செய லிருக்கவிக்கிதன்
முன்னமேயழற்கிரி முடியைத்தேடவே
யன்னமாய்ப்பறந்தவ னளக்கணத்திலே
மன்னுமோராயிரக் காதம்வாவினான்.

(இ-ள்.) இந்தப்பிரகாரம் இந்தவிஷ்ணுவிருக்க இதற்குமுன்னே அக்கினிமலையின் முடியைத்தேட அன்னபட்சியாகிப் பறந்தபிரமா அரைக்ஷணத்திலே ஆயிரங்காதவழியாகத்தாண்டினார்—எ-று. (௪௯)

கிறியேயண்ட கோளமையுங்கீழுற
வேறிநூறாயிர மாண்டுமேவினு
னூறுநூறாயிரக் காதமோக்கினு
மீறிலா திருத்ததவ் வெறியினாணமே.

(இ-ள்.) அண்டகோளகையுங்கீழ்ப்பட கிழித்துப்பறந்து நூறாயிரம்வருஷந்தேடினார் அப்படி அனேகநூறாயிரங்காதந்தாண்டிப்போயப் யாதத்தினும்முதலபார்த்ததுபோலவேயிருந்தது அக்கினிஸ்தம்பம்—எ-று. (௫௦)

சிறையெலாமுதிர்ந்தன திசையுந்தீர்ந்தன
நிறைவத மிகக்கனு முயிர்ப்புநீண்டன
குறைவெலாம்வளர்ந்திடத் தனிமைகூர்தலான்
மறையினானிலையிலை மனதிலெண்ணினான்.

(இ-ள்.) அப்படிபிரமா அன்னமாய்ப்பறந்துபோகிறபோது சிறகெல்லாமுதிர்ந்துபோயின திசையும் அடங்கின குறைவில்லாததுக்கமும்பெருமூச்சும் அதிகப்பட்டன மனக்குறை வளர ஒருவருமில்லாமல் தான் ஒருவனானபடியினாலே பிரமா சிலதை மனதிலெண்ணினார்—எ-று.

அரியமாலிதனடி யறிந்துமீளுமோ
தெரிவருமுடியிலே திரும்புமோவெனா
வரியதாகியதுய ருசலாடினு
னெரியுறுமெழுகுபோ லிளகுஞ்சிந்தையான்.

(இ-ள்) அரியமகாவிஷ்ணு இந்தஅக்கினிமலையினுடைய அடியை அறிந்துதிரும்புவானோ கொஞ்சதூரந்தேடி இனிமேல் தேடக்கூடாதென்றுதிரும்பிவருவானோ என்கிறதுக்கமாகிய ஊஞ்சலிலிருந்தாடினார், நெருப்பிலேயிட்டமெழுகுபோல இளகிய மனதையுடையவராகிய பிரமதேவர்—எ-று. (௫௨)

மற்றிதுசிவனென மனதிலெண்ணிலே
னுற்றரிதன்னையு முறவுகொண்டிலே
னிற்றைநாளவனாகுமிவ் விடாகசூழ்கினேன்
சிற்றறிவுடைமையோ செய்ததீமையோ

இ-ள். இந்தமலையைச்சிவனென்று அறியாமற்போனேன் பகைத்துக்கொள்ளப்பட்ட விஷ்ணுவையாவது உறவுகொள்ளாமற்போனேன அன்றுமுதலின்றையவரைக்கும்வெகுகாலமாய்த்துக்கசமுத்திரத்தில்மூழ்கினேன் என்னுடையசிறியபுத்தியினாலேயோ பூர்வகாலத்திலேநான் செய்தபாவத்தினாலேயோவென்று விசனத்தையடைந்தார் பிர்ம்மதேவர்—எ-று. (௫௪)

எயதினேன்முடியறிந் தேகிலேனெனும்
பொய்களையுஞ்சொல்லும பொருந்தவேயுரை
செய்துணைபிறிதில்லையென்றுதேடினான்
கைதையின்மடல்வாய் பின்புகண்டனன்

(இ-ள். இவ்வளவுதூரந்தேடிவந்துமுடியையறியாமற்போனேன் ஆகிலுமினிமேற்போய் விஷ்ணுவினிடத்தில பார்த்தேனென்று பொய்சொன்னாலுங்கூட அந்தாசையாகப்பார்த்தேனென்றுபொய்சாட்சிசொல்லுகிறதற்கு ஒருதுணையுமில்லையேயென்றுவிசனப்பட்டார் அந்தசமயத்தில்தாழம்பூமடலொன்றுமேலேயிருந்திறங்கப்பார்த்தார்பிரமா-எ-று.

இம்மடலெங்குற்று வருவதென்னுமுன்
னம்மடலணைந்ததன் கைகளையெற்றனன்
செம்மறன்முடியிலவீழ் செம்மலர்க்கையான
மெய்ம்மைசேருயிர் ப்பதாய் விடுமினென்றதே

(இ-ள்.) இந்தத்தாழைமடலெங்கேயிருந்து வருகிறதென்று ஆலோசிக்குமுன்னே தாழம்பூபிரம்மாவுக்குச்சமீபத்தில்வர அதைக்கையினாலேபிடித்தான் அதுபரமசிவனுடையசிரசிலிருந்து தவறிவிழுந்ததாழம்பூவானபடியினாலே மெய்மையானபெருமூச்சோடு என்னைச் சீக்கிரத்திலேவிட்டுவிடுவாயென்றுசொல்லியது—எ-று. (௫௫)

ஞாணிகைதையே யிங்குநீவருங்
காரணமேதெனக் கமலன்கூறினான்
ஆரணனாரண னளவிடாமுத
ற்றாணிமுடியினுந் தவறிவீழ்ந்தனன்

(இ-ள்.) அந்தத்தாழம்பூசொல்லியதைக்கேட்டு அழகுபொருந்திய தாழம்பூவேயெங்கேயிருந்து வருகுவதாயென்றுபிர்மாகேட்கப்பிரமாவினாலும் விஷ்ணுவினாலும அறியக்கூடாதபரமசிவனுடைய சிரசிலேயிருந்து தவறிவிழுந்தேனென்றுசொல்லியது—எ-று. (௫௬)

தார்ப்பொலிமுடியினுந் தவறிவீழ்ந்தபின்
றற்பதினாயிரம வருடமெண்ணினே

னேற்பதுவிடுசெவன் றிசைப்பவெங்கதையைப்
பாரப்பதுவிடுத்தயன் பகர்வதயினான்

(இ-ள்) கொன்றைமாலைப்பிரகாசியாநின்ற சுவாமியினது திருமுடி மேலிருந்துவிழுந்ததும நாற்பதினாயிரம் வருஷங்களாகவந்தேன இன்னமநான் பூமியிற்போகவில்லைவருந்தத்தேடுவருகிறேனென்னைப் பிடிக்கவேண்டாம்விடென்று தாழம்பூசொல்லப்பிரமா சுவாமியைத் தேடுகிறதைவெறுத்துச்சிலவார்த்தை சொல்லத்தொடங்கினான் -எ-று.

துன்வியகதையே துணையுமாய்நமக்
கின்னமுமலைவுற திருக்கணிக்கின
யுன்னிலுமுயிர்த்துணை யுறவுவேறிலை
யன்னியனல்லனா னனமுமல்லவே.

(இ-ள்) என்சமீபத்திலடைந்த தாழம்பூவேநீஎனக்குத்துணையாயிருந்து நாளின்னமுந் தேடியலையாமல் என்வருத்தத்தைநீக்கினாயுன்னைப் பார்க்கிலுமுயிர்போன்றதுணையுமுறவுமவேறில்லை நானும அன்னியனல்ல அன்னபட்சியுமல்லவென்றுசொன்னான்பிரமதேவன-எ-று.(

நாமமோநான்முகனுமாலுமா
யேமமாமிதற்கள விசைக்கவெண்ணினேன்
பூமிகீழிடந்தவன பொயினான்மதே
தீமையென்றிருமுடி தேடிக்காண்கிலேன்.

(இ-ள்) என்பெயரோ பிரமா நானும விஷ்ணுவுங்கூடி அக்கினிசொரூபமாகிய இந்தமலையினளவைத் தெரிந்துகொள்ள வெண்ணினோம பூமியின்கீழிடந்தைப்போந்துகொண்டு அடியைஅவன்தேடப்போனான் பாவிபாவியநான்முடியைக்காணவெகுநாளாய்த்தேடியுங்காண்கிலேன்-எ-று

அந்தமலைவாவிற்று வதுகொடெண்பய
னெடியனின்வாவினா னினைத்ததெய்தினாற்
படியளந்தவனுடன் பறவையாமிவன்
முடியறிந்தானென மொழிதல்வேண்டுமே.

(இ-ள்.) ஆதியந்தமாக நடந்தசமாச்சாரமிது அதைக்குறித்துப்பேசுவதனாற்பயனென்னபெருமைபொருந்தியஉன்னுடையநலவார்த்தையாலே நினைத்தகாரியமுடிக்கால்தான்பயன்பூமியையளந்தவிஷ்ணுவினுடன்பகைக்கொண்டு பட்சியாயுருவெடுத்த இந்தபிர்மாசிவனுடைய முடியையறிந்தானென்று நீசொல்லவேண்டுமென்றுபின்னுஞ் சொல்லுவான்பிரம்மதேவன்—எ-று. (கூ0)

வஞ்சமென்றிகந்திடேல் வருந்தினோர்க்குயிர்த்
தஞ்சமாமெனிற்பெரும் பொய்யும்சாற்றலா
மஞ்சியேசொலத்தகர் மொழியுமன்றிது
கஞ்சமுண்டமைவரே ணபுவேணடினார்.

(இ-ள்.) அப்படியே இலிங்கமும் ஓங்காரம் பதியுடன்பூசியுங்கொண்டு நந்தமலையினுள்ளே மறைவுகோலஞ்செய்தார் ஏகாந்தமாகத் தேசமும் புகழும்படியவ்விடத்தில் ஒருஇலிங்கந்தோன்றிற்று அதைக்கண்டு வணங்கிதத்தோத்திரஞ்செய்து புஷ்பவருஷம்பொழிந்து பரவசமாய்ச்சந்தோஷத்தையடைந்து ஆனந்தக்கூத்தாடி மயனென்கிறதேவதச்சனைக் கூப்பிட்டு ஒப்பில்லாத கோபுரங்கள் மண்டபங்கள் அழகுபொருந்திய மதிலுஞ்செய்வித்தார்கள்-எ-று. (௮௪)

அழியாதவளங்கொளுந்தீர்த்தமுந்நூற்றறுபதுங்கண்டழகுசெய்தார
வழியாநீர்ச்சுரநதியுஞ்சுரதருவுங்கேணிகளுமாறுமான
வொழியாமனிமையவருமிருடியருமனிதரெனவுருவங்கொண்டார்
விழியாலவிடமனையகணிகையாரரம்பையருமேவினாரே.

(இ-ள்.) எப்பொழுதும் அழியாதவளமுள்ளதாகமும்முந்நூற்றறுபதுவகையாகியதீர்த்தமும்உண்டானதுகண்டழகுசெய்தார் வழியாதசலத்தையுடைய ஆகாயகங்கையும் கற்பகவிருட்சமும் கிணறுகளும் ஆறுமானதுகள் நீங்காமல் தேவர்களும்ரிஷிகளும மனிசரூபங்கொண்டுவந்துபிறந்தார்கள் விஷம்போன்றகண்களையுடைய தாசிகளாக அரம்பாஸ்திரீகள்-எ-று. (௮௫)

காலையிலேமுழுகிமாவுரியுடுத்துச் சிவந்தசடைகட்டிநீறு (ண்
மேலணிந்துகண்டிகைபூண்டனமுதலாமஞ்சனத்தால் மிகுந்தசாரமாலையினாற்சிவபூசைபுரிந்தண்ணாமலையனைவணங்கொண்டேத்தி
ஏலவொருபதினாயிரவாண்டுகழிந்ததற்பின்னிறைவனாணை.

(இ-ள்.) பிரமாவிஷ்ணுக்கள் இருவரும் காலமேமுழுகிமாவுரிதரித்துக்கொண்டு சிவந்தசடைகட்டிவிபூதியையுடம்பெல்லாந் தரித்து ருத்திராட்சமாலை பூண்டுகொண்டு அன்னமுதலாகிய திருமஞ்சனத்தினாலும மாலையினாலும் சிவபூசைசெய்து திருவண்ணாமலையை பிரதட்சிணஞ்செய்து வணங்கிப்பின்பு பதினாயிரவருஷம் ஆனபிறகு சுவாமியினிடத்தில விடைபெற்றுக்கொண்டு தங்களபதிக்குப் போகத்தங்களதிகாரத்தைப் பெற்றுக்கொண்டார்கள்-எ-று. (௮௬)

ஆசைதருந்திருவருணைசமைந்ததறபின்கயிலைமலையாகசபோயிற
நீசனுக்குகந்தகமலையிதுவாயின்வெள்ளிமலையினிமேலென்றுங
காசிமுதலெடுத்துரைக்குஞ்சிறப்புடையதலமேழுங்கனகாடு (ந்த
மாசகன்றகதிர்தோன்றவொளியிழந்தவுடுக்கணமபோன்வளமாகேகா

(இ-ள்.) சுவாமிக்குஆசைகொள்ளும்படி திருவருணாசலஸ்தலஞ்சமைந்தபிறகுகயிலைமலையிலிருக்கும ஆசைவெறுத்தது இதுதானேயேபொன்னுருவங்கொள்ளுமாயின வெள்ளிமலையினிமேல் ஆசையுண்டாகுமா காசிமுதலாகசசொல்லப்பட்ட ஏழுஸ்தலங்களுமாசிதைந்தேலோகமும் குற்றநீங்கிய சூரியனுதயமாகப் பிரகாசமிழந்த நட்சத்திரங்களைபோல ஒளிமழுங்கிப்போனதுகள்-எ-று. (௮௭)

அரியயனுமளவிடற் கரியமலை நிலையுரைக்கவரிதென்றுலகு
தெரியவுணக்கருந்தபடிசிறிதுரைத்தகேணி [illegible] இறகே [illegible]
ண் [illegible] சபெருமாக்கண்டமணிமிழ்ந்து [illegible] துலையுயர்ந்து

ள் தன்னிடத்திலேபிறக்க அந்த அம்மனைச்சுவாமிக்கு கலியாணஞ்செ
ய்துகொடுத்து மாமனாகும்படிவரம்பெற்று அந்தப்படிசெய்தபின்புஞ
குகாள் இவன்சுவாமியினுடையசபைக்குப்போனான் அவ்விடத்தில்சுவா
மிதனக்குஎழுந்துமரியாதைசெய்யவில்லை என்கிறகோபங்கொண்டு
தன்னுடையவீட்டுக்குவந்து சுவாமியைப்பார்க்கிலும் உயர்வையு
யவேண்டுமென்று.

(இ-ள்.) பன்னிரண்டுசூரியர்கள் - பதினொருருத்திரர்கள்- சத்தரி
ஷிகள்-அஷ்டதிக்குப்பாலகர்-நாகலோகத்தார்- கின்னரர்-கிம்புருடர்-
சித்தர்-யட்சகர்-தேவர்கள்-முனிவர்கள்-பிரமன்-மகாவிஷ்ணு- சர
ஸ்வதி இலட்சுமிமிகவுஞ்சந்தோஷத்தையடைந்துசூழ்ந்துகொள்ள எல்
லோருக்குமுதல்வராகிய பரமசிவனைநிந்தித்து முடியக்கூடாதபெரி
யயாகஞ்செய்யத்தொடங்கினான் -எ-று. (௧)

எந்தைசெயுமகம்பார்க்க விடையருளென்றிறைக்கிறைவிவிசை
த்தானந்தை, புந்தியிலாதிகழ்ந்தனனென் றுரைத்தனனீதெனை வே
ண்டிப்பொருப்பாயென்று, வந்தனஞ்செய்தனளவளை நகைபுரிந்துகடி
துசென்றுவருவாயென்றான், கந்தமலர்குழலாளுந் தந்தைமகந்தொட
ங்குகன தவத்தைச்சார்ந்தாள்.

(இ-ள.) பார்வதிதேவியானவள் தகப்பனாகியதக்கன்யாகம்பண்
ணுகிறதைக்கேட்டுசுவாமி என்னுடையதகப்பன்செய்கிறவேள்வியை
ப்பார்த்துவருகிறதற்கு உத்தரவுகொடுமென்றுகேட்க அதற்குசுவாமி
யானவர உன்னுடையதகப்பன் புத்தியில்லாமல் என்னைமிகவும் நிந்
தித்திருக்கிறானே நீபோகலாமாவென்றுசொல்ல அதைக்கேட்டுசுவா
மீ என்தகப்பன்செய்த இந்தக்குற்றத்தை என்னைவேண்டிப்பொறுக்க
வேண்டுமென்று நமஸ்காரஞ்செய்தபோது அந்தஅம்மனைப்பார்த்துந
கைத்து நல்லதுநீபோய்சீக்கிரத்தில்வந்து சேரென்றுசொல்லப்பா
ர்வதியும் தகப்பன்யாகஞ்செய்கிற இடத்துக்குப்போனாள்-எ-று ( )

தாயரைக்கண்டடிதொழுதா ளவட்முவாதிருந்தனன்றந்தை யா
னன், தீயவனைப்பணிந்தனளாநகலனுமிகழ்ந்தானிகழ்ந்தசொல்லைநோக்
கிப்,பேயிருக்குஞ்சுடலைபெணாப்பிழைபிறந்துவிடுகவுங்கள்பெறுவாழ்
வென்று, வாய்பிறைக்குங்கொடுமைசொலி மறைந்தனளச் செயலறிந்
தான் மங்கைபாகன்.

(இ-ள்.) பார்ப்பதியானவள் தக்கன்யாகசாலைக்குப்போய்தன்னு
டையதாயைவணங்கினாள் அவள் இந்தஅம்மனைத்தழுவி உபசாரஞ்
சொல்லாமலிருந்தாள் அதன்பின்பு தீமைபொருந்திய தகப்பனைவந்த
னஞ்செய்ய அவனும்நிந்தித்தான் அதைப்பார்த்துக்கோபங்கொண்டுஉ
ன்னுடையயாகசாலைவாழ்வுபேயிருந்து விளையாடுஞ்சுடலையாகிப்போ
கக்கடவதென்றுஜபித்து இந்தப்பாவி வளர்த்ததேகம்இருக்கக்கூடா
தென்றுயோகத்தினாலேதன்னுடைய தேகத்தைவிட்டாள் அந்தச்செ
ய்கையையுணர்ந்தார்சாம்பவமூர்த்தி-எ-று. (௩)

(கலிவிருத்தம்)உண்ணிலாவுவஞ்சிசெல்ல ,வொருவனாவியுய்யுமோ
தண்ணிலாமுடிக்கணின் றுதழலையொண்டிறைக்கையு

லண்ணல்வெம்பிமுனிவுகொள்ளு மளவினெற்றிவிழிதனில்
விண்ணடங்கமண்ணடங்க வீரன்வந்துதோன்றினான்.

(இ-ள்.) எப்பொழுதுங்கூடயிருந்த பார்ப்பதிதேவியைத்தனை விட்டவுடனே ஒன்றியாகியிருந்த பரமசிவனுடைய உயிர்சவுக்கியத்தனையடைந்தமா குளிர்ச்சிபொருந்தியசந்திரன் தங்குமுடையசிரசிலேதானேயிருந்து நெருப்பைவாரிச்சொரிகிறபடியினாலே அதிகதாபத்தையடைந்து தக்கனாகிய பாவியினாலல்லவோ இந்தவருத்தம் உண்டாச்சுதென்றுகோபித்துக்கொள்ளுகிறபோது அவருடையநெற்றிக்கண்ணிலிருந்துவீரபத்திரரானவர் ஆகாயஉலகமும் பூமியும் நடுங்கும்படியாகத் தோன்றினார்-எ-று. (௪)

மஞ்சுபற்றியுடல்கறுத்த மணிமயூரமுடியுடன்
சஞ்சரிக்குமேருவென்ன விடிமுழங்குதழலின்வாய்
நஞ்சுகொப்பளிக்கவெற்றி நயனமூலகொதிக்கவே
லஞ்சலித்தகையோடெங்க ளையன்வந்துதோன்றினான்.

(இ-ள்.) மேகத்தைப்பார்க்கிலும்உடம்புகறுத்தமயிலினதுநிறம்போன்ற மரகதரத்தினமிழைத்த கிரீடத்துடனே சஞ்சரிக்கின்றமேருவுக்குச்சமானமாகி இடிபோல்முழங்குகின்றநெருப்பாகியசொற்களையுடையவாயானது நஞ்சைக்கொப்பளிக்க நெற்றிக்கண்கொதிக்கச்சிரசின்மேல்வைத்துக் கூப்பியகைகளோடு எமதுஐயராகிய வீரபத்திரர்வந்துதோன்றினார்-எ-று. (ரு)

ஒழித்தசிங்கவுரிபுயத்தி னுத்தரீயமாகவே
கழித்தெறிந்தவல்லியத்தி னதளிசைத்தகச்சையாய்
விழித்திமைக்குமுன்னம்விண்ணின் வெளியடைத்தமேனியா
தழைத்ததென்னவென்னவென் றனையன்வந்து தோன்றினான்.

(இ-ள்) இரணியனைக்கொன்ற நரசிங்கத்தினுடையதோல்உத்தரீயமாகவும்தாருகாவனத்துரிஷிகளால்விடப்பட்டுச்சுவாமியினால் மரணத்தையடைந்த புலியினதுசர்மம் இடுப்புக்கச்சையாகவும்விழித்து இமைக்கிறதற்குமுன்னே ஆகாயமெல்லாமறைந்ததேகத்துடனே என்னையழைத்தது என்னகாரணம் என்னகாரணமென்றுவீரபத்திரர்வந்தார்-எ-று. (சு)

முக்கணத்தனீர்கொடாது கனல்கெடுக்குமுகிலென
தக்கன்வேள்வியைத்தகர்த்து மீள்கவென்றுசாற்றின
னக்கணத்திலுவகைபொங்கி யடிவணங்கியேகினான்
பக்கநின்றபூதநாதர் பாரிடங்கள்சூழவே.

(இ-ள்.) என்னையழைத்தகாரியமென்னவென்றுகேட்டவீரபத்திரரைப்பார்த்து மூன்றுகண்களையுடைய பரமசிவன் ஜலத்தைப்பொழியாமல்நெருப்புகளைக்கக்கும மேகம்போற்போயதக்கனுடையயாகத்தையழித்துவாவென்று அருளிச்செய்ய அந்தக்ஷணமேவீரபத்திரர் அதிகசந்தோஷத்தையடைந்து சுவாமியினது திருவடியைத்தொழுதுபக்கத்தினின்றபூதக்கூட்டங்களும் பேய்களுஞ்சூழப்போனார்-எ-று. ()

நஞ்சுகொப்பளிக்குநாக நாணிரண்டுமாலையா
அஞ்சுகாட்டிபூதலே வாலவட்டம்வீசவே

குஞ்சரங்களெட்டையுங் குதம்பையாகவிட்டவெங்
கஞ்சகத்தராநால்வர்தூய கவரிநின்றுவீசவே.

(இ-ள்.) விஷத்தைக்கக்குகின்ற அஷ்டமாநாகங்களை மலையாகத் தரித்துக்கொண்டு பத்துபூதங்கள் நீலவானமான ஆலவட்டம் வீசிக் கொண்டுவரத்திக்கிலிருக்கின்றயானைகளெட்டையுங்காதிலேகுண்டலமாகத்தரித்துக்கொண்ட வெள்ளைச்சட்டையணிந்த நாலுபேர்களுத்தமாகிய சாமரம்வீசவும் புறப்பட்டார் வீரபத்திரர்-எ-று.

தீயிருந்தவுதரவெம்மை விண்பிழிந்துதீர்த்திடும்
பேயிரண்டுநூறுநூறு காளமபிடிக்கவே
வாயிரண்டுபோலுமாலை மதியிடைந்தபூதமோ
ராயிரங்கவிக்குமுத்தி னுகபத்திரங்களே.

(இ-ள்.) வடவாமுகநெருப்புக்குடிகொண்டிருந்தவயிற்றினுடையபசியையமேகங்களைப்பிழிந்துகுடித்து ஆற்றிக்கொள்ளுகின்ற இரண்டாயிரம்பேய்கள் எக்காளம்பிடிக்கவும் சந்திரனை இரண்டாகப்பிளந்து இரண்டுகடவாயிலும் வைத்ததுபோலுமிருக்கின்ற ஆயிரம்பூதங்கள் முத்துக்குடைகள்பிடிக்கவும் புறப்பட்டார்-எ-று. (க)

மாயுமாயாதந்தசங்கு கோடிகோடிமருகவே
தீயின்வாயினூர்திதந்த சிங்கநாதமூதவே
சாயுமெண்ணிலகாலமேதி தந்தகொம்பிசைக்கவே
யாயிரங்களிறுநெருந தனைத்தேரிலேறினன்.

(இ-ள்.) இறந்திறந்துபிறக்கிற அனேககோடி விஷ்ணுக்களுடையகையிலிருந்தசங்குகளை அனேகபூதங்கள்வாயில்வைத்துஊதிவரவும் இறந்தஅக்கினிபகவான் வாயுபகவானேறுகின்ற ஆட்டுக்கடாக்களைமாளிதுகளுடையகொம்புகளை வாயில்வைத்து அனேக பூதங்களூதவும் இறந்துபோன யமராசாக்களேறிய எருமைக்கிடாக்களுடைய கொம்புகளை வாயில்வைத்து அனேகபூதங்களூதவும் ஆயிரம் யானைகள்கட்டியிழுக்கிற தேரிலேறினார் வீரபத்திரர்-எ-று. (ம)

சிலகணங்களானையான சிலகணங்கடோதா
யுலவுகின்றசிலகணங்க ளோடுகின்றவாசியாய்
மலைவுகொண்டுசிலகணங்கள் மனிதர்தேவராயின
வலகைதானுமளவிலா தனந்தவேடமானதே.

(இ-ள்.) அப்படிவீரபத்திரர் தேரிலேறினபோது சிலபூதங்கள் யானைரூபங்கொண்டதுகள், சிலபூதங்கள் தேரினுருவங்கொண்டதுகள் சிலபூதங்கள்குதிரையானதுகள், சிலபூதங்கள் மனிதரூபமும் தேருமானதுகள், அளவிலாதபேய்கள் அனந்தரூபங்கொண்டு புறப்பட்டதுகள்-எ-று. (மக)

வீரையேழடங்கவுண்டும் விடாய்கெடாதுமீளுமே
பாரவேழுபாருமுண்டு பசிகெடாதுபடருமே
கூரவேலெறிந்துகால னுடுகெஃளைகொள்ளுமே
போரையேவிரும்பிமுன் னடக்குசென்றபூதமே.

(இ-ள்.) வீரபத்திரர்புறப்பட்டவுடனே யுத்தஞ்செயயவிரும்பி அவருக்குமுன்னேநடந்தபூதங்கள் ஏழுசமுத்திரத்து நீரடங்கலுங்குடி

லேறி யெதிர்த்துக்கொண்டுவந்த வீரபத்திருடைய பூதகணங்களை யெதிர்த்தார்கள்-எ-று. (௰௮)

வளிசூலம வேலுலக்கைக வச்சிரங்கணிச்சிவாள்
மீளிசேனைகாவலாளர் வீழுமாறுவீசினார்
கூளிகளிரண்டுசென்று கொடியவெண்மர்பரியெலா
மாளியோடெடுத்தெறிந்த வம்மனைக்குநிகரவே.

(இ-ள்.) திக்குப்பாலகர் எட்டுப்பேரும் பாணம்-சூலாயுதம்-வேல்-உலக்கை-வச்சிராயுதம்-மழுக்கத்தி-இதுகளைவீரபத்திருடையசேனைத்தலைவர்கள்விழும்படி பிரயோகஞ்செய்தார்கள். அப்போது எட்டுப்பூதங்கள்புறப்பட்டுத் திக்குப்பாலகர் எட்டுப்பேரையும் அவர்களேறிய வாகனங்களெட்டையும் * அம்மனைக்குச்சமானமாக எடுத்தெறிந்ததுகள் எ-று. (௰௯)

அலகைநாலிரண்டுவீழ வமர்செயபூதமோடவே
மலைவுகண்டுதிக்குப்பாலர் வெற்றிமாலைசூடினார்
நலிதல்கண்டுவீரன்வாளி நாலிரண்டையேவினு
னுலகபாலருடல்புகுந்து வமுதமுண்டுலாயதே.

(இ-ள்.) முன்னேயெட்டுப்பூதங்களாலேயெறிபட்டுவிழுந்ததிக்குப்பாலகரெட்டுப்பேரும் அந்தஎட்டுப்பூதங்களுங்கீழேவிழவும்,மற்றைப்பூதங்களெல்லாம் ஓடிப்போகவுமயுத்தஞ்செய்து வெற்றிமாலைசூடிக்கொண்டார்கள் அதுகண்டவீரபத்திரசுவாமியானவர் எட்டுப்பாணத்தைவிட்டார் அதுகள்போய் எட்டுப்பேர்களுடலைத்துளைத்து அவ்வுடல்களுள்இருக்கிற அமிர்தத்தைப்புசித்துச்சஞ்சரித்ததுகள்-எ-று. ()

மருங்கிழிந்துகுயிலதாகி வச்சிரத்தனோடினு
னொருங்கியீசனளகையாளி நிருதிவாயுவருணனுஞ்
சுருங்கினார்கடாவிலேறி துஞ்சினனழற்பிரான்
பெருநகையேழுமீசனன்பர் பிரலிபோலறுத்தனன்.

(இ-ள்.) தேவேந்திரனானவன் தன்வாகனத்தைவிட்டுக் குயில்ரூபங்கொண்டுஓடினான் ஈசானன்-குபேரன்-நிருதி-வாயுவருணன்-இவர்கள்தோற்று வெட்கத்தையடைந்தார்கள் யமனானவன் இறந்தான் அக்கினிபகவானுடைய ஏழுநாக்கையும் சுவாமிஅன்பருடையபாவங்களை அறுப்பதுபோல அறுத்துத்தள்ளினார் வீரபத்திரர்-எ-று; (௰௧)

கச்சமற்றவச்சமோடு கலையதானவெச்சன
ரெச்சனைவுயிரைவாரி யுடலுரிசதெரித்தனன்
பசசைவல்லியன்னையான பன்னிகர்தாண்டையும்
வசிரத்தினாலறிந்து மாமன்முன்புசென்றனன்.

(இ-ள்.) அளவில்லாதபயங்கொண்டயாககர்த்தாவாகியகலைக்கோட்டு மகாரிஷிபிராணனுநதேகமும் வேறாகக்கொன்று உடலை வுரித்து வெரித்தார் பார்வதியின்தாயாகிய தக்கனுடையபெண்சாதியின் இரண்டுகாதையும் அறுத்துத்தள்ளிமாமனாகிய தக்கனிடத்திற்குப் போனார் வீரபத்திரர்-எ-று. (௨௰)

---

* அம்மனை மகளிர் விடுமோர்விளையாட்டு.

(இ-ள்.)பிரம்மாவினாலேவிதிக்கப்பட்டயாகசாலைவாசத்தையடைந்தாலும அதற்குபயோகமாகவைவத்திருந்த சோறுமவைகளும் பொரியும் ஒருபூதபசாயிற்கொட்டிக்கொண்டுநெய்க்குடங்களையெடுத்து மடமடவென்றுவிட்டுக்கொள்ளும்போது அதனுடையவாய் ஓமகுண்டமாகவும் உதிராக்கினியேநெருப்பாகவுமிருந்தது—எ-று. (௨௫)

அட்டதிக்குப்பாலரும் வசுக்களுமருக்களும்
முட்டானமுப்பதிறமூன்றுகோடித்தேவரும்
பட்டபோதுவாதமெய்களபழுதுறுதுதன்னுனே
இட்டபூதவுதரமுன்னையாகசாலையொத்ததே

(இ-ள்) அஷ்டதிக்குபாலகரும்அஷ்டவசுக்களுமதலைவராகவந்தகுருக்களும்முட்டுப்பட்டவராகியமுப்பத்துமுக்கோடிதேவர்களும் இறந்தபோது அவர்கள்தேகமவீணைகப்போகாமல வீரபத்ரருக்குமுன்னே அவருடையசேனைகளசாப்பிட்டபடியினாலே அந்தப்பூதகணங்களுடையவயிறுயாகசாலையையொத்தது—எ-று. (௨௬)

கறபகாலமுங்கெடாத கணமிதிக்கவமரர்தம
மறபமாமுடம்பிரத்தமாவிகாரமொத்ததால
பற்பலவியக்கர்சித்தர்பண்டிசிந்துடர்களாம்
சர்ப்பயாகமொத்ததன்றுதக்கன்செய்தயாகமே

(இ-ள்.)கற்பகாலத்திலும்அழிவில்லாத பூதகணங்கள் மிதித்தபடியினாலேதேவர்கள் அற்பமாகியஉடம்பில்நின்று பிரிட்டரத்தமானதுயாகத்துக்குநெய்யெடுத்துச்சொரிதல்போலிருந்தது பலபல யட்சசித்தர்களுடையவயிறுபிதுங்கப்பட்டு அவர்களுடைய குடல் கொடிபோகச்சிந்திவிடுகிறது சர்ப்பயாகம் செய்தலையொத்தது அன்றுதக்கன் வேள்வி—எ-று. (௨௭)

சிறந்ததிக்குபாலராதிதேவ சித்தர்முதலினோர்
இறந்திறந்துபோகவேதனிமையிலேயிமாறினோ
பிறந்துவந்துவந்துபோரபெருகினாபிறந்தபேர்
மறந்துவீழவீரன்மோதிமாறினோனமண்டினோன்

(இ-ள்.)சிறப்புப்பொருந்திய திக்குப்பாலகர்முதலாகியதேவர்கள் சிதறிகள இறக்கப்பிரம்மாவானவர் நொடிப்பொழுதிலே யவரைப்படைத்துக்கொண்டுவந்தார் அவர்களமறுபடியும் யுத்தஞ்செய்தார்கள் அவர்கள்பின்னும்பிறவாமலிருக்கும்படிபிரமாவையடுத்து யுத்தஞ்செய்யத்தொடங்கினார்வீரபத்திரர்—எ-று. (௨௮)

செத்ததேவர்மீளவுஞ்செருச்செயப்படைத்திடுங்
கைத்தலங்களவீழுமாறுகமலனைமோதினான்
*முத்தலைக்கொள்படையெடுத்துமுண்டகத்தர்சிந்தைசேர்
பத்துமைந்தர்சென்னியுமடிக்குமோபரப்பினான்

(இ-ள்.)இறந்துபோன தேவர்கள்மறுபடியும் சண்டைசெய்யப்படைக்கும பிரம்மாவினுடைய கைகளை அறுத்துத்தள்ளினார்முன்றுக

---

*முத்தலைக்கொள்படை-சூலாயுதம்

ளையுடையஆயுதத்தினாலே அவர்மனதிலுண்டாகிய பத்துபிரமாக்களுடையதலைகளையும் குததி பூமியில்விழததள்ளினா வீரபத்திரா.எ-று

அண்டகூடமுண்டுமிழ்ந்தவாதிமாயனையர்செயத்
துண்டமேருவெனவிளங்குகருடன்மீதுதோன்றியே
விண்டவாளிவருடமாக்கவீரன்மார்பில்வீசினான்
கண்டதுண்டமாகவீரன்கையிலவாளியேவினான்

(இ-ள்.) அண்டங்களைவிழுங்கிஉமிழ்ந்தமுதல்வராகியவிஷ்ணுசண்டைசெயயமுகதையுடைய மேருகிரிகாக விளஙகிய கருடன்மேலேறிக்கொண்டுஅனேகபாணவருஷங்களவீரபத்திரா மார்பில்படும்படியாகப்பொழிந்தார் அப்படிவிட்ட பாணங்களையெல்லாம் துண்டமாகததன்கைப்பாணத்தினாலேஅறுத்தெறிநதார்வீரபததிரா ௫௰

வையமுண்டமால்வெகுண்டுவாள்விதிர்த்துவீசினா
னையணங்கொரவாளியாலறுத்தெறிந்தோர்ம்பினாற்
பையராவருந்தியாவிபருகினான்மெயகருகினான்
கையிலாழியேவினான்கனிநதண்ணல்காலிலே

(இ-ள்.) விஷ்ணுவானவர் வில்யுத்தம் பண்ணுகிறதற்குச்சக்திபில்லாமல்கோபஙகொண்டு ஒருகத்தியையெடுதது சுற்றி வீசினா வீரபத்திரர் அந்தகததியை ஒருபாணததைவிட்டு அறுதெறிந்து ஒருபாணத்தினாலேபாமபைககொல்லுகின்றகருடனைககொன்று விட்டார் அதுகண்டுதுக்கததினாலேவுடமபுகறுப்பாயக் கையிலேயிருக்கிறசக்கரததை வீரபத்திரர்மேல் பிரயோகமசெயதார அது ஓடிவநது சுவாமிகாலிலேவிழுந்துபணிநதது—எ-று. (௫௧)

எந்தைமுன்னளித்தவாழிபெந்தைதாளில்வீழவே
யந்தமெய்யொழிநதுடனரியரியினைவேடமாகியே
வந்துவந்துபோரதொடங்கிவாளின்வேலின்வல்வினை
ணுந்திவேறோர்சேலதாகிவாரிமீதொளிததனன்

(இ-ள்.) முற்காலத்திலேவிஷ்ணு ஆயிரம்தாமரை மலரைக்கொண்டுபரமசிவனைப்பூசித்து வருகிறபோது இவர்பத்தியைபரிசோதிககவேண்டிஆயிரம்பூவிலேஒருபூவைச் சுவாமிமறைததுவைத்தார் விஷ்ணுபூசைசெய்துஅருச்சனைபண்ணிககொணடு வருமபோது ஒருபுட்பங்குறைய அதற்குப்பதிலாகத்தமமுடைய தாமரைப்பூ ஒநதகண்ணைப்பிடுங்கி அருச்சிக்கச்சுவாமிக்குமனம் சந்தோஷம்வந்து சக்கராயுதஙகொடுத்தார அந்தசக்கரத்தைத்தானே சுவாமிமேலேவிட அதுபயந்துகாலில்விழவேஇனிமேல்இந்தரூபத்தோடேநின்றால் பிழைக்கமாட்டோமென்று அந்தஉருவததைஒழிததுப் பன்றியாகவும் சிஙகமாகவுமரூபமெடுத்துவந்துயுத்தஞ்செயய அந்தவுருவஙகளை வாளாயுதத்தாலும் வேலாயுதத்தாலும் வீரபத்திரர்வென்றார் அதனபின்பு மிகவும்பயந்து மீனுருவமெடுத்துச்சமுத்திரத்திலேவிழுந்துஒளித்தார்—எ-று. (௫௨)

புவியுண்ட நெடுமாலும் பழையபடி புவியுண்டு போனான் வேதன்
தவியுண்டு தலைநாலுந் தீயுண்டாரிமையவர்தங் குடியூனுண்டார்
அவியுண்ட கணங்குண்டம் பேயிறைச்சி யருந்தசன கலமேயான
தவியுண்டு மனமகிழ்ந்தங் கெய்ததவ முனிவரெல்லா மவியுண்டாரே.

(இ-ள்) மண்ணையுண்டவிஷ்ணுவுந் தோற்று மண்ணைவாயிற்றொட்டுக்கொண்டு ஒளித்துக்கொண்டார் பிரமா தலையிழந்து நான்குதலை றுபட்டு இறந்தார் தேவர்களுங் கண்டத்தால் அடியுண்டு இறந்தார்கள் பூதகணங்கள் இறைச்சிசாப்பிடுகிறதற்குக் குண்டம் பாத்திரமானது அவிர்ப்பாகம்சாப்பிட்டுவந்த முனிசிரேஷ்டர்கள் எல்லாரும் வீரபத்திரசுவாமியினால் இறந்தார்கள்-எ-று. (௯௩)

இங்கிதுவாய் முடிந்ததற்பின் வீரனிறைபதம்பரவியிசைந்தானெ
ல்லா, மங்கணனுமுனிமாறியருள்சுரந்து மகத்திறந்தாரக்காவியீந்து,
மங்கரியபதங்களெல்லாம பழையபடியுதவுதலுமவணங்கிப்போனார், ச
ங்கரியைமுன்பெற்றானென்பெற்றானறனக்காட்டுத்தலைப்பெற்றானே

(இ-ள்) இவ்விடத்தில் இவ்விதமாகயாகசாலையோடு சருவதிரபேரும் நாசத்தையடைந்தபிறபாடு வீரபத்திரர் கைலாயத்துக்குப்போய் சுவாமியினுடைய பாதத்திலேவணங்கி அங்கேநடந்தசமாச்சாரமெல்லாஞ்சொன்னார் அதுகேட்டருளிப்பரமசிவனுங்கோபமாறிகிருபைபிறந்து யாகத்திலிறந்தவர்களனைவரையும் பிழைப்பித்துக் கேடிலலாத அவவிடங்களையவரவர்க்குப்பழையபடியே அருளிச்செய்தலும் அவர்கள் சுவாமி நாங்கள் விவேகமில்லாமையினாலே செய்த குற்றத்தைப் பொறுக்கவேண்டியதென்று நமஸ்கரித்து விடைபெற்றுக்கொண்டார்கள் பார்வதியைப்பெற்றதக்கனுக்குமாத்திரம் நிந்தைசெய்ததற்கு அபராத அடையாளமாக ஆட்டுத்தலையை அவனுடலில் வைத்துப் பொருத்தி எழுந்திருக்கும்படிசெய்தார்-எ-று. (௯௪)

எந்நாதன்றனையிகழ்ந்தோன் செல்வியெனவுலகுரைக்குமிடுக்கண்டீர
தன்னாகந்தன் யோக சாதனத்தால்விடுத்திமயன் றவத்தினாலு (த்
முன்னாகமைநாகன் றனைப்பயந்த மேனியது முயற்சியாலு
மின்னாகவவதரித்தா ளமரரெல்லாங் கற்பகப்பூவீசினாரே.

(இ-ள்) எனக்குநாதராக இருக்கின்ற பரமசிவனைநிந்தித்ததக்கனுடையகுமாரியென்றுபழிப்பாகஉலகஞ்சொல்லுமேகம்மையென்று பார்வதி அந்தத்துக்கநீங்க தன்னுடையதேகத்தை யோகாக்கினியினாலே நிவர்த்திசெய்து இமவற்பருவதராசன் தபோமகிமையினாலும் முன்னேமைநாகனென்கிற பிள்ளையைப்பெற்றமேனாதேவியினது தவமுயற்சியினாலும் அவர்களுக்குக்குமாரியாக அவதாரஞ்செய்தாள் தேவர்கற்பகப்புஷ்பங்களைவருஷமகப்பொழிந்தார்கள்-எ-று. (௯௫)

சிந்தாந்தத்தோன்றுசத்தி சிவத்திரண்டாய்ஞானமிச்சைசெயலின்
மூன்று, கொத்தாகிக்குடிலைதரு நாதவிந்துவிரண்டினுக்குஞ் சொழு

கொம்பாகி, முத்தாகிச்சிவனிடத்தேயுருத்திரன்மாலயன்முதலாரு
ளைத்தமூல, வித்தாகிநிறைவாளைப் பயந்தவறகுமுடிந்ததவம விளம்ப
லாமோ.

(இ-ள்.) சித்தாந்தமாகச்சொல்லப்பட்ட சிவனிடத்திலேதோன்று
கிட்ட ஆதின்ஞானசத்தியாய்ப்பின்பு அச்சிவத்தில்நின்றும பின்ஞானசத்தி
யென்று வேறுபட்டுப்பின்புஞானசத்திஇச்சாசத்திகிரியாசத்தியென
மூன்றுவகையாகிக் குடிலையினாலுண்டாகிய நாதவிந்துகளுக்குக கொ
ழுகொம்பாகியுமசுவாமிககுமுத்தாகியும பரமசிவனிடத்தில் உருத்திர
ன் விஷ்ணுபிரமாமுதலானவர்களஉண்டாகிறதற்குமூலமாகிய வித்தா
கியும எங்குநிறைந்தபார்வதியைப் பெற்றவாகளுமுடிந்த தவப்பெரு
மையைச சொல்லக்கூடுமோ—எ-று. (௫௬)

கலைவளருமதிபோன்று சிவனைவெல்லாதன்வளர்க்குங் கரும்பு
போன்றும, பலகலையுந்தெளிந்துயர்ந்து பந்துகழலூசல்பறறியவிலு
நாளில், மலைபாசனிடத்தின்மறை நாரதனொருநாளில் மகிழ்வாயெ
ய்தி, யுலகமெல்லாங்குடியிருக்குந் திருவயிற்றிலிலக்கணம்பார்த் து
ரைக்கலுற்றார்.

(இ-ள்.) பார்வதியானவள்இமாசலராசனுக்குமேனாதேவிக்கும்
குழந்தையாகி வளர்பிறைபோல நாளுக்குநாள்வளர்ந்து மன்மதனா
னவன் சிவனைவெல்லவில்வேணடி அதற்குவளர்ந்த கரும்பையொத்து
ப்பலசாஸ்திரங்களையுங்கற்றுப் பந்துகழங்கு ஊசல்விளையாட்டு முத
லானதுசெய்துகொண்டு வருகிறகாலத்தில் மலையாசனிடத்தில் வே
தமுணர்ந்தநாரதர் ஒருநாள்வந்து உலகங்களெல்லாம் வயிற்றிலேவை
த்திருந்த அம்மனுடைய இலட்சணம்பார்த்துச்சொல்வார்-எ-று. ()

நெற்றியிலோர்புறத்திலரை கேத்திரமுண்டாமொருகைநெடியசூலம
மற்றுமொருதனமறையு மொருபாகமாகதம்போய்ப் பவளமாகும்
கற்றைநெடுங்குழற்பாதி சடையாகுமொருகைவளை கழன்றுபோகு
மூற்றுவருமிவ்வைகளென மலையாசன்மனமுருகி யுவகையானான்.

(இ-ள்) வாரும்பருவதராசனே உம்முடைய குமாரத்திக்குச்சில
பொழுதிலேநெற்றியில் ஒருபக்கத்தில் அக்கண்தோன்றும ஒரு
கையிலேசூலமுண்டாகும ஒருபக்கத்துஸ்தனம் மறைந்துபோகும்பா
திசரீரம் பசுமைநிறம்போய்ப்பவளநிறமாகுமகூந்தலிறபாதிசடை எளா
கும்ஒருகையிலேவளையல்களில்லாமறபோகும் இதுகள்சம்பவிக்குமெ
ன்று நாரதர்சொல்ல பருவதராசன் உள்ளமுருகிச சந்தோஷத்தைய
டைந்தான்-எ-று. (௫௮)

வேறு-அறுசீரடியாசிரியவிருத்தம்.

வையநீர்க்கங்கைபாயும் பணிவரைமருங்கினங்காள்
துய்யநீர்ச்சடையான்வந்தங் கோர்தவத்தொடங்கக்கேட்டு
வையகம்ளித்தாடரதை வள்ளலைப்பணிந்துமானை
யையநின்றவத்துக்கேவல் கொடுவென்றளித்துப்போனான்.

(இ-ள்) இந்தப்பிரகாரம் நாரதர்சொன்னதைக்கேட்டுப்பார்வதியே நமக்குப்பெண்ணாகவந்தபடியினாலே பரமசிவன்மருமகனாகவேண்டுமென்று பிரார்த்தித்துக்கொண்டிருக்கிறானாயில் பூமியிலே கங்கையைசெலுத்திக்கொண்டிருக்கிற அந்த இமவற்பர்வதத்திலொருபக்கத்தில் பரமசிவன்யாதோவொரு நினைவினாலேயோகத்திலிருக்கிறாரென்கிறவார்த்தைகேள்வியாகித் தன்மகளாகிய பார்வதியையு[m] சில தோழிப்பெண்களையும் அழைத்துக்கொண்டுபோய் நமஸ்கா[ரஞ்] செய்து என்னுடையபெண்ணை உமமுடையதவசுக்காக ஏவல்செய்ய ஒப்புக்கொள்ளுமென்று அவரிடத்தில் அம்மனைவிட்டுப்போனான் பருவதராசன்-எ-று. (௩௯)

ஓங்குமாலயன்மற்றுள்ளோ ரொழிவிலாத்தவம்புரிந்தால்
தாங்குபேரளிப்பான்றானோர் கருத்தினாற்றவஞ்செய்போதிற்
பூங்குழல்கனியுப்போது முஞ்சியும்புனலுங்கொண்டு
பாங்கியர்பலருஞ்சூழப் பணிவிடைபலவுஞ்செய்தாள்.

(இ-ள்.) எல்லாத்தேவரிலு முயர்ந்தவிஷ்ணு- பிரமா-மற்றவர்கள் பெருமையாயொழிவில்லாத தவசுசெய்தால் அவர்களுக்கு வேண்டியவரத்தைக்கொடுக்கிற சுவாமியானவர் யாதோ ஒருகருத்தினாலே தவஞ்செய்கிறபோது பார்வதி-பழம்-புஷ்பம்-தருப்பை- திருமஞ்சனமுதலானதுகளைக்கொடுத்துத் தன்னுடையபாங்கிமார்களுடனே பலபணிவிடையுஞ் செய்துகொண்டிருந்தாள்-எ-று. (௪௰)

இங்கிவையிருக்கத்தேவ ரியாவருமிமையோர்கோவும்
பங்கயத்தவனையெய்திப் பணிந்தனர்பதுமத்தோனு
மங்கவர்க்கிருக்கையீந்தா னவரவர்முகத்திற்சோர்வுங்
குங்குமக்குழம்புநீத்த புயங்களிற்குழைவுங்கண்டான்.

(இ-ள.) இவ்விடத்தில் இந்தப்பிரகாரமாகவிருக்க எல்லாத்தேவர்களும் தேவேந்திரனுங்கூடிப் பிரமாவைச்சேர்ந்து தொழுதார்கள் அந்தப்பிரமாவும் அவர்களுக்குஇருக்க ஆசனங்கொடுத்துப்பிற்பாடு அவர்களுடைய முகஞ்சோர்ந்து இருப்பதையுங்குங்குமம்பூசியிருக்கிற தோள்கள் இளைத்திருப்பதையும் பார்த்தார்-எ-று. (௪௧)

வச்சிரமொடிந்தீசானன் கணிச்சுவாய்மடிந்துகாலன்
முச்சிரம்வளைந்துமற்றோர் படைபெலாமுறிந்துதேவர்
மெச்சிரமகுடநீத்து மெலிந்தமைவிளம்புமென்று
னச்சுரர்தமக்குக்கோமான் றாரகனழித்தானென்றான்.

(இ-ள்.) வச்சிராயுதம்ஒடிந்துபோயும் ஈசானன் மழுவாயுதத்தின் வாயமழுங்கியும் யமனுடையசூலாயுதம்வளைந்தும் மற்றவர்கள ஆயுதமுறிந்தும தேவர்கள்சிரசிலேயிருக்கிற மகுடம்பிடுங்கப்பட்டும் வருந்தத்தையடைந்தீர்கள் அவ்வருத்தத்தைச்சொல்லுங்களென்று கேட்கத் தேவேந்திரனானவன் தாருகாசுரன்இப்படிஅவமானஞ்செய்தானென்றுசொன்னான்-எ-று. (௪௨)

காலையாம்புயத்தோன்சொல்வான் கர்லனாற்கனலாற்காற்றான்
மாலினாலென்னாலுன்னா லவன்வலிதொலைக்கலாமோ

வாலமாமிடற்றான்சேயா யசலமாதிடத்தேதோன்றும்
வேலனார்வெல்வாருக்கள் சிறையெலாமவிடுப்பாரென்றான்.

(இ-ள்.) அப்படிதேவேந்திரன் சொல்லக்கேட்ட பிரமாவானவன் சொல்வான்-யமன்-அக்கினி வாயு-விஷ்ணு-இவர்களாலும்என்றாலும் உன்றாலும், அந்தத்தாருகாசூரனைக் கொல்லக்கூடுமோ, சிவனுடைய நிலையாய இமாசலபுத்திரியான பார்வதியினிடமாக சுப்பிரமணியர் அவதரிப்பார் அவனைகொன்றுஉங்கள் சிறையைமீட்பாரென்று சொன்னான்-எ-று. (சுக)

யோகத்திலிருக்கவீச னுமைக்குநாணளிக்குமாறு
வேகத்திலியற்றுமென்றே யயனவிடைகொடுத்தான்மீண்டு
மாகத்திலணுகித்தேவர் மதனைநினைத்தார்மாரன்
சோகத்தையொழிசகுநமெதன்றறநேருடன்றோன்றிசசொல்வான்

(இ-ள்.) யோகத்திலிருக்குஞ்சிவனுனைவர்பார்வதிக்குமங்கலியதாரணஞ்செய்யும்படிச்சீக்கிரத்தில் முயறசிசெய்யுங்களென்று பிரமாவானவதந்திரபேருகதும உததரவுகொடுக்கத் தேவாகளெல்லாரும அமராவதிக்குவந்து மன்மதனைநினைததாாகள் அவனை விடாயதீர்க்கத் தருந்தென்றலாகிய தேரிலேறிவந்துசொல்வான்-எ-று. (சுசு)

எனறவமழிக்கமாத ரெவர்களைமயககதீவிர
கவலாறதெத்துயாரலெம்மை யழைத்ததெனகருமமென்று
னவனாறனையிறுகபபுல்லி யமரர்கோனருளினோக்கிச்
சிவன்றவமழிக்கவேண்டி யழைததமை தெரியச்சொன்னான்

(இ-ள்)மன்மதன்தேவர்களைப்பார்த்து சிவனுடையதவததை அழிக்கட்டும் எந்தப்பெண்களைமயக்கட்டும் நீங்கள் எந்ததுக்கநிமித்தமாக என்னையழைத்தீர்களென்று கேட்கத் தேவேந்திரன் அந்தமன்மதனை இரண்டுகையினாலும் இறுகக்கட்டித்தழுவி உபசாரத்துடனே பார்த்துச் சிவனுடைய் தவத்தையழிக்கும்படி உனனைவேண்டியழைத்தனென்று தெரியசசொன்னான்-எ-று. (சரு)

விண்ணிலாமகவான்சொல்ல வெகுண்டுவேள்பயந்துகூறும
பெண்ணலாராலியாணல்லா பிறப்பிலாரிறப்புமில்லார்
கண்ணினாலளவைநூலாற் கருததினாலளவாவநத
தணணிலாமுடியார்செய்யுந்தவத்தையார்தவிர்க்கவல்லார்

(இ-ள்.)தேவலோகத்திலிருக்கும் இந்திரன் சொல்லக்கோபித்துச் சுவாமிக்குபயப்பட்டுச்சொல்லுவான் வாருமையாதேவேந்திரனே சிவன் பெண்ணுமல்லா, ஆணுமல்லர் அலியுமல்லர் பிறப்பும் இறப்புமில்லாதவர் காட்சிப்பிரமாணத்தினாலும் ஆகமப்பிரமாணத்தினாலுமநுகருதத்தினாலும் இப்படிப்பட்டவரென்று நிதானிக்கக்கூடாத குளிர்சசிபொருந்திய சந்திரனைத்தரிக்குமுடியையுடைய அந்தச்சுவாமியினது தவத்தையழிக்கின்றதற்கு ஆர்வல்லவர்-எ-று. (சுசு)

கன்னிகைதெளரிபீசன் கதமிலாப்பிரமசாரி
சக்திகிரியையாலே யுயிரெலாந்தழைய நிற்கு

முன்னியவுயிர்கள்போல வொடுங்கிடுமவன்பாற்செல்லு
பன்னியபொருளுந்தோன்றி மனதிலேயொடுங்குமாபோல்.

(இ-ள்.) அம்மனோகன்னிகை சிவனோடு குற்றமில்லாதபிரமசாரி யிவாகளிரண்டுபேர்களுடையசன்னிதிமகிமையினாலேசகலவுயிர்களும் உண்டாகிவிாதகியாகுமமுன் அப்படிசுவாமியினிடத்திலிருந்துசீவ ளாஉண்டாச்சுதுகளோ அப்படியே அவரிடத்திலே ஒடுங்கும் ம லேதோன்றியஅனேகவஸ்துகளாடுங்குவதுபோல-எ-று. (சஎ)

தாமதகுணத்தரென்பர் சங்கரிததிடலாலீசன்
வமமாமுயிர்கட்கெல்லா மிளைப்பொழித்தருள்வதாக்கும்
மாமலகுணமூன்றில்லை வடிவமிக்கனலாமென்கைய
பூவலாசொரிந்தககாலும் புகையெழப்பொரிந்துபோமே.

(இ-ள்.) உலகததிலேசங்காரகதொழில்செய்வதனாலே சிவன் த மோகுணததையுடையவரென்று சொலவாாகள் அப்படிஆன்றுஉயிர் களுடையவினைப்பையொழிப்பதாகும மற்றத்தேவர்களுக்குஉண்டாயி ருககின்றமுமமலசம்பந்தமில்லை இவருடையசொருபமமிகவும்நெருப் பாகும அவர்மேல்நான்புஷ்பபாணததைவிட்டால அதுகள்புகையாகக் கரிநதுபோகுப-எ-று. (சஅ)

உருவெனதெரியாதானை யுருவினொடுருவாவானை
யருவெனதெரியாதானை யமாசெயலரிதென்றஞ்சி
வெருவரப்புகுநாளைத வேளையிலவேளைநோக்கித்
தருவனததிடையில்வாழும் சரமகனுரைப்பதானான்.

(இ-ள்.) உருவென்று யாவராலுந்தெரியக்கூடாதவரையுருவமாகி யும்அருவமாகியும இருககின்றசிவனை அருவமென்றுமதெரியாதவரை மிகவும்யுதகம்செயதுசயிக்கப்படாதென்று மன்மதன்பயப்பட்டுத் த னனுடையஸ்தானததிறகுப்போகப்புறப்பட்டான் அந்தக்காலததில் மன்மதனைப்பாாததுககறபகத்தருவினிழலில்வாசஞ்செயயாநின்றதே வேந்திரன் சொல்லததொடங்கினான்-எ-று. (சகூ)

மாயவனுரத்தின்மீது மலரவனாவின்மீது
நாயகன்சிரததின்மீதும் பொறுத்ததுனலமேயன்றோ
காயுநற்கதிரினமேனிக கடைந்ததுமெனக்குமிந்த
வாயிரநயனந்தந்த செயலுமுன்னுணமையன்றோ.

(இ-ள்.) விஷ்ணுதமமுடையமார்பிலே இலட்சுமியை வைத்துக் கொண்டதுபபிரமாசரஸ்வதியைநாவில்வைத்துக்கொண்டதும்,மகாத் மாவானவா தலையிலேகஙகையென்கின்ற பெண்ணை வைத்துக்கொண் டதும் உன்னுடையசாமர்த்தியமல்லவோ சூரியனைச்சாணையில்கடை யச்செயததும் எனக்கு ஆயிரநகணவத்ததும் உன்னுடையஆண்மை யல்லவோவென்றான் தேவேந்திரன்-எ-று. (ரு௦)

செல்வதின்றெமக்காயங்கே தருவதுசேவர்க்காவி
வெல்வதுசிலனைவென்று கொடுப்பதுகாமவேட்கை

சொல்வதுமறுக்கவேண்டாமெனச்சொலித்துணைக்கைப்பற்றி
நல்வரமிதுதாவெனமதனையேனையர்க்கூறும.

(இ-ள்.) பின்னுந்தேவேந்திரன்சொல்வான் வாராய்மன்மதா என்னக்காக அங்கேசென்று சிவனைசயித்து அவருக்குக்காமலாகிரி யுண்டாகும்படிசெய்தால் அவருக்குப்புத்திர னுண்டாகும் அந்தப்புத்திரன் சூரர்களைக்கொன்று தேவர்களைப்பிழைக்கும்படிசெய்வார் அதற்கு சமயமாயிருக்கிறபடி நான்சொன்ன வார்த்தையைமறுக்கவேண்டாமென்றுகையைப்பிடித்துக்கொண்டு எனக்குஇந்தநல்லவார்த்தைக்கொடுவென்றுகேட்க மன்மதன் சந்தோஷித்துச்சொல்வான்-எ-று. ()

அரன்சிலைமலையென்றாலு மம்புக்கணையரியென்றாலும்
வரபறவிசைநாணுற வாசுகியாவென்றாலுங்
கருமமெனுஞ்சிலைபார்க்கு சகணையுறுபலராகிலச் (போனான்
சுரும்படைகுணத்தால்வெல்வே னெனச்சொலித் தொழுது

(இ-ள்) வாருந்தேவேந்திராசனே சிவனுக்குவில்லானது மலையாகியிருந்தாலும விஷ்ணுவே பாணமாகியிருந்தாலும வாசுகியே நாணாக ஏறுகின்றதாணியானாலும என்னுடையகரும்பாகிய வில்லினாலும் ஐந்துபுட்பங்களாகியபாணங்களாலும நீலநிறம்பொருந்திய வண்டென்கிறநாணியினாலும அந்தசிவனைச் செயித்துப்போகிறேனென்றுவந்தனஞ்செய்துசுவாமியிடத்துக்குப்போனான் மன்மதன்-எ-று.

சந்தனமணமுந்தெட்வக தமிழப்புதுமணமுங்கொண்டு
வந்துமலையதென்றல் வசந்தமந்திரியுஞ்சார்ந்
திந்துவுநிலவாபவென்னை வலையினையெதத்தெங்கும
கொந்தலரிளமாவெல்லாங் கோகிலமுழங்கிறதே.

(இ-ள்.) மன்மதன் சிவனைசெயிக்கும்படிபுறப்படும்போதுபொதியமலையிருந்து அவ்விடத்தில்தங்கிய சந்தனவாசனையும திவ்வியமான தமிழவாசனையுங்கொண்டுதென்றல்காற்றுவந்ததுவசந்தமாகிய மந்திரியுமவந்துசேர்ந்தான்சந்திரன்கிரணமாகிய் [illegible]வலையினையாக பக்கமுமவீசினான்புட்பக்கொத்துகளையுடைய இளமையுற்றமாமரத்திலெல்லாங்குயில்முழங்கியது-எ-று. (௩௯)

மல்லிகைமுகையாஞ்சங்க மதுகாமுழங்கபசெய்ய
முலலைசண்பகமசோகு முளரியேமுதலாயுள்ள
வெல்லைபின்மலருந்தேனு மிசைத்தனவிரும்படைச்செம்பைக்
கல்வினையுநக்கும்சொல்லார் குறிஞ்சியாழகாதிற்கொண்டார்.

(இ-ள்.) மல்லிகையரும்போசங்கமாகவும அவ்வரும்பிலசப்திக்கின்றவண்டுகள்அச்சங்கத்தைவாயில்வைத்துஊதுகிறவீரர்களாகவுமவிளங்கவுமுல்லை சண்பகம் அசோகு-தாமரைமுதலியபகணக்கில்லாத புஷ்பங்களையும்தேனையுமுண்டுபாடுமிறைத்துக்கொண்டுகடினமாகியபயிரும்புகல்செய்யுமிதுகளைகூடவுருக்கும்படி சொல்லுகிறவார்த்தையையுடையபெண்கள்குறிஞ்சியாழென்னும்வாத்தியத்தைக்கையிலேகொ (௪௦)

பொங்கியவுடுக்களான புகாணிமுகத்துச்செக்கர்
தங்குசிந்தூரமாகுந் தனியிருட்கரியுங்கிளிளைப்
பைங்குரகதமுஞ்செல்லப் பணைமுலைப்பவளச்செவ்வாய்
மங்கையரெனுமபோர்வீரர் வடிகண்வாள்விதிர்த்துச்சென்றார்.

(இ-ள்.) மிகுந்தநக்ஷத்திரங்கள் முகத்திலிருக்கிற புள்ளிகளாக செவ்வானமானது ஒருதிலகப்பொட்டாகவும் விளங்குகின்ற ஒ— விருட்டாகியயானையும் பசுமைபொருந்திய கிளியாகியகுதிரையும் நடக்கப்பருத்தமுலையையும் பவளம்போன்றவாயையுமுடைய ஸ்திரீகளாகிய சுத்தவீரர்கள் தங்கள் தங்கள் கண்களாகிய சத்திகளை அசைத்துக்கொண்டு புறப்பட்டார்கள்-எ-று. (௫௫)

கோணியகருப்புமைந்து குலமலர்க்கணையுங்கொண்டு
வாணுதலிரதிசெல்ல மகரகேதனத்தினோடு
தாறுமாவனத்தைச்சேர்ந்தான் றவஞ்செய்வான் றனைக்கண்டஞ்சி
நாணினானகால்வண்டு நாணினனமிங்கினனே.

(இ-ள்.) வளைவாகியகரும்புவில்லையும் புஷ்பங்களாகியஐந்துபாணங்களையும் எடுத்துக்கொண்டு ஒளிபொருந்திய நெற்றியையுடைய ரதிதேவியானவள் கூடவர மீனக்கொடியுடனே பரமசிவன் யோகத்திலிருக்கிறவனத்தைச்சேர்ந்து அவ்விடத்தில்தவஞ்செய்கிற அந்தச்சுவாமியைப்பார்த்து இவரையெவ்வாறுசெயிப்போமென்றுபயந்து வெட்கத்தையடைந்துநடுங்கினன் வண்டுநாணாகவுடைய மன்மதன்-எ-று.

வெளிப்படச்சலத்தெதிர்த்தாலென்னவிளையுமோதனச்சென்றெண்ணி
யொளித்தனன்முன்னேபின்னேயுமையவள்வரவுகண்டு
களித்தனமயக்கமாமோகனத்துகளிறைத்துவில்லை
வளைத்தனனிநாண்பூட்டிவடிக்கணைதொடுத்தான்மாரன்.

(இ-ள்.) நேரேவெளியாகவந்துயுத்தஞ்செய்தால்என்னசேதமக்கு உண்டாகுமோவென்றுநினைத்துச் சுவாமியின்பின்தெரியாமல் ஒளித்திருந்து சமயம்பார்த்துக்கொண்டிருந்தபோதுபார்வதிஅக்கடவுள் முன்னே பணிவிடைசெய்யவருதலைக்கண்டு பெண்துணைநமக்கிருக்கிறபடியினாலே வெல்லக்கூடுமென்று சந்தோஷித்து மோகனமுண்டாக்கும் புஷ்பாகத்தைஇறைத்து வில்லைவளைத்து நாணேற்றிப்பாணங்களைத்தொடுத்தான்மன்மதன்-எ-று. (௫௭)

ஒருகரும்புருவச்சாபமொடியினுமுலகமீன்ற
விருகருப்புருவச்சாபமுளவெனுமெழுச்சியாலே
*பொருகணைதொடுத்தானென்று புராணசுடுகணையினாலு
மொருகணைவிடுத்தான்மாரனுடலெலாங்கொளுத்திற்றன்றே.

(இ-ள்.) மன்மதனைவனதானதிக்கண்டைசெயதால்ஒருகரும்புருவமாகியவில்லானது ஒடிந்தாலும் உலகத்தைப்பெற்ற பார்வதியின்

---

*ஒருகணையென்றமையால் வெற்றியென்றுவருவிக்கப்பட்டது கணையென்றசொல்மெய்கேட்டு கணையென்று சொல்லணியேற்ற—.

இரண்டுபெரும்புருவமாகிய வில் உண்டாயிருக்கின்ற நமக்கியாதொரு குறைவுமில்லையென்கிறசெருக்கினாலேபோய்அனேகபாணங்களை விட்டபோது மூன்றுபுரத்தையும் எரித்தகண்ணையாகிய அம்மையுடைய சிவன் அம்மன்மதன்மேல் தன்னெற்றிக்கண்ணைச்செலுத்தினார் அக்கண் மன்மதனுடைய உடம்பையெல்லாங்கொளுத்திவிட்டது-எ-று.(ருஅ)

கூழுக்கவெண்பஞ்சுபோலே யழற்கண்ணாலனங்கனை
திருக்குளக்கனலக்கண்டு தேவருந்திசையினோரும
வெருக்கொளவொளித்தார்பூதகணத்துடன் விடையினானும்
பொருக்கெனமறைந்துவெள்ளிப் பொருப்பிடை புகுந்தானன்றே.

(இ-ள்.)நெருப்புப்பட்ட எருக்கம்பஞ்சுபோல் மன்மதனாகியவாறு பாடுபொருந்திய மனத்தையுடையவன் எரிந்துபோகக்கண்டு தேவர்களும் அஷ்டதிக்குப்பாலகரும் பயப்பட்டொளித்துக்கொண்டார்கள் அதன்பின்பு சுவாமிபூதகணங்களுடன்சீக்கிரமாகஅந்த விடம்விட்டுகைலாசத்துக்குளெழுந்தருளினார்-எ-று. (ருகூ)

சங்கரன்மணத்தைவேண்டியுமையுநற்றவமேசெய்தா
ளங்கதுணர்ந்தாரேழ் முனிவருக்கமலனசொன்னான்
மங்கலமேவுழுஞ்செய்த முனிவருமகிழ்வாயெய்தி
துங்கவெற்பிறைபாற்கிதனைச் சோபனஞ்சொல்லினார்கள்

(இ-ள்)பரமசிவனானவர் தன்னைக்கல்யாணஞ்செய்துகொள்ளப்பார்வதிதவஞ்செய்கிறாள் அவள்வந்துசேரசப்தரிஷிகளையழைத்து பருவதராஜனிடத்திற்போய் சுவாமிக்கு உன்பெண்ணை கலியாணஞ்செய்துகொடுவென்று கேளுங்களென்று அனுப்பினார் அந்தப்படியே அந்த ஏழுபேரும் பருவதராசனிடத்திற்குப்போய் இந்தச் சோபனத்தைச் சொன்னார்கள்-எ-று. (சுய)

மலையிறைமகிழ்ந்தானந்த மலையிறைபுதல்வன்வள்ளல்
குலமதுபயந்தோர்நாமங் குடிப்பெயரேதுவாழூர்
தலமதுபுகலுமென்றான் தவத்தவர்நகைத்துச்சொல்வா
ரலகிலான்பிறப்புசொல்ல கிலையெனவறிவித்தார்கள்.

(இ-ள்.)ரிஷிகள்போய்ச்சொன்னவுடனே பருவதராஜன் சந்தோஷித்தான் அவன்பிள்ளையாகியமைநாகன் ரிஷிகளைப்பார்த்து சிவனென்ன சாதி அவருக்குத்தாய்தகப்பன் பெயரென்னகுடிப்பெயரென்ன அவரிருக்குமூரெது சொல்லுங்களென்றுகேட்டான் அதைமுனிவர்கேட்டுநகைத்துச் சிவனோ அளவிடக்கூடாதவர் அவர்பிறந்தவிடம் மூங்கில் அவர்கல்லசாதியென்றுதெரிவித்தார்கள்-எ-று. (சுக)

பொருந்தநேதோருவகையாகிப் பிறைமுடியவன்பேர்சாலிற்
பொருந்தபூசாளுந்தோர்ந்து புனிதனைப்புகழ்ந்துபோமறி
விருத்தியார்வாவுசாளுங்குறிதகிறைவிடுத்தானன்றோ
பருத்தகைக்கையினாற்கிந்தப்படியெல்லாம்பணிந்துசென்று

(இ-ள்.) அப்படிசத்தருஷிகள்சொன்னபிறகு பருவதராசன்முதலானவர்களெல்லாமமகாசந்தோஷத்தையடைந்து சந்திரனைத்தரித்த முடியையுடையசிவன் பிறந்தநட்சத்திரத்திற்கும் அம்மன்பிறந்த நட்சத்திரத்திறகுந் தகுந்த பொருத்தமுங் கலியாணஞ்செய்கிறகாலமுமறிந்து நிசசயமபண்ணி ரிஷிகளினுடைய பாதத்தைப் புகழ்ந்துவணங்கி திருத்திபொருந்தியகலியாணமுகூர்த்தஓலையும் எழுதிக் கொடுத்த... புவித்தான் அந்தஏழுரிஷிகளும் கங்கையைத்தரித்தசுவாமிக்கு நடந்த சங்கதிகளெல்லாம வணங்கிசசொன்னார்கள் -எ-று. (சுஉ)

இமையவெற்பிறைவனோலை யூகத்திலேழுகிரிக்குமேருச்
சிமையமாலவரைக்குஞ்செம்பொற் றிகிரிமாவரைகளுமேழு
தமரவான்கடற்குஞ்சித்த சாரணர்முனிவோருக்கும்
அமரரானவர்க்குமவஞ்சிமணத்தினையறிவித்தாகள்.

(இ-ள்.) இமையப்பருவதராசன் பார்வதியம்மன் கலியாணமுகூர்த்த ஓலையை அனேகதூதர்கள்கையிற்கொடுத்தனுப்புவிக்க அவாகள்சத்த குலபருவதங்களுக்கும், கொடிமுடிபொருந்திய மேருவுக்கும், சக்கிரவாளகிரிக்கும் ஒலியையுடையசத்தசமுத்திரத்திற்கும், சித்தா - சாரணர்-முனிவர்-தேவர்முதலானவர்களுக்கும், அம்மன கலியாணத்தை தெரிவித்தார்கள் எ-று. (சுங)

ஓலைகண்டளவேசேர்ந்த வுந்திகளேழும்பூமி
மாலையாய்ச்செல்லுகின்ற மகிமைசேர்நதிகளேழும்
நீலமேமுதலாயுள்ள கிரியெலாநெருங்கிச்சென்ற
கோலமாமுனிவோர்சித்த ரிமையவாகூட்டங்கொண்டார்கள்.

(இ-ள்.) ஓலையைக்கண்டவுடனே ஏழுசமுத்திரத்திற்கும்பூமிதேவிக்கும, மாலைபோலப்பிரகாசிக்கின்ற மகிமைபொருந்திய ஏழுநதிகளுக்கும, நீலகிரிமுதலாகிய சபதகுல பருவதங்களுக்கும், அதிஷ்டானமாகியதேவதைகளொருங்கிசசேர்ந்தார்கள்-முனிவர்களும், சித்தர்களும் தேவர்களும் கூட்டங்கூட்டமாகச்சேர்ந்துவந்தார்கள்-எ-று. ()

அட்டதிக்கனைத்துந்தோற கொடிகளாலடைத்தாவிண்ணை
மட்டறுவிமானந்தன்னான் மாலையான்மறைத்தார்வீதி
நெட்டிலைபாமையூக நிரைகளாய்நிறைத்தார்வெறபிற
றட்டியபுழுகினாலே மெழுகினார்தரைகளெல்லாம்.

(இ-ள்) எட்டுதிக்கையும் தேரினாலும்கொடிகளாலும் இடமில்லாமல்நிறைத்துவிட்டார்கள், ஆகாயத்தைஇடமில்லாமல் விமானத்தினாலும், மாலைகளினாலும் மறைத்துவிட்டார்கள் வீதிகளில் நீண்ட இலைகளையுடைய வாழைகளையும்-கமுகுகளையும் நிரைநிரையாகநட்டு அலங்காரஞ்செய்தார்கள்-மலையிலிருக்கிற புழுகைக் கரைத்துத்தரைகளெல்லா மெழுகினார்கள்-எ-று. (சுரு)

தோரணஞ்சமைத்தார்முத்தின் றொங்கலெலாந்தொடுத்தார் வி
பூரணதும்பமவைத்தார் புதுமணிவிளக்குமிட்டார் (ண்ணில்

ஆரணனுஞ்சூழ்ந்தவரை யனைகையுமமரரும்
காரணனுலகுமவந்து காணவேவானுமாறே.

(இ-ள்) தோரணங்கட்டினார்கள், அகில முத்துமாலைகளைத்தொங்க விட்டார்கள் ஆகாயகங்கைகொண்டுவந்து பூரணகும்பம் வைத்தார்கள். நூதனமாகிய இரத்தினவிளக்குகள் ஏற்றினார்கள் பிரமலோகமும் புரியும்தேவலோகமும் வைகுந்தமும் இதைப்பார்த்து நாணமடையும்படிச் சிங்காரித்தார்கள்-எ-று. (௬௬)

மணிவிளக்கனையவிம்மனை மங்கையாமகளிர்கூடிக்
கணிமலர்க்கங்கையாட்டிக் கலையினன்மருங்கைக்கூட்டிப்
பணிமணியாரம்பூட்டிப் பரிமளத்தாரஞ்சூட்டி
யணிநுதற்றிலகந்தீட்டி யருமறைச்சடங்குசெய்தார்.

(இ-ள்) இரத்தினதீபம்போன்ற பார்வதியைமலையிலிருக்கிறபெண்களகூடிக் கற்பகமலர்வாசனைசேர்ந்த கங்காசலத்தினாலே ஸ்நானஞ்செய்வித்து இடுப்புத்துவளும்படி சேலைகட்டி ஆபரணங்களுடன், முத்துமாலையும்பூட்டிப் பரிமளம்பொருந்திய நறுமலர் மாலைசூட்டி அழகியநெற்றியிலே திலகம்பொட்டிட்டு வேதவிதிப்படிச் சடங்குசெய்தார்கள்-எ-று. (௬௭)

பூடணக்கோலஞ்செய்த பொடியணிபுனிதனாரைத்
தாமணக்கோலஞ்செய்யச் சதுர்முகன் முதலோரெண்ணித்
தூமணித்துகில்கள்சாற்றிச் சுராதருமாலைசாற்றி
மாமணிப்பணியைநீக்கி மாமணிப்பணிகள்பூட்டி.

(இ-ள்) வாசனைபொருந்திய புஷ்பபாணங்களை எய்தமாரனை நெற்றிக்கண்ணாலெரித்த அப்பஸ்மத்தைப்பூசிய சுத்தராகிய பரமசிவனை மணக்கோலஞ்செய்யும்படியாகப் பிரமா முதலானவர்கள்கூடிப் பரிசுத்தமாகிய இரத்தினமயமாகிய வஸ்திரஞ்சாத்திக் கற்பகப்பூமாலைதரித்து முன்னேயிருந்த சர்ப்பாபரணங்களைக்கழற்றிப்போட்டு மாணிக்கரத்தினங்களாகிய ஆபரணங்களைத்தரித்தார்கள்-எ-று. (௬௮)

சடையிளம்பிறையைத்தங்க ளிறையெனத்தகைந்துசூழ்ந்த
உடுகுலமெனமுத்தா லொளிவிடுமகுடஞ்சூட்டி
அடைவுடன்விழியாந்திங்க ளாதவர்காதின்மீது
குடியிருந்தனபோற்செய்ய குண்டலமிரண்டுஞ்சாத்தி.

(இ-ள்) சுவாமியினுடைய சடையிலே தரித்த பிறையைப்பார்த்துத் தம்முடைய புருஷனென்று சுற்றிக்கொண்ட நட்சத்திரக்கூட்டங்களைப்போல முத்துக்கள்பிரகாசியாநின்ற கிரீடஞ்சூட்டிப்பொருந்தியகண்களாயிருக்கிற சந்திரசூரியரிருவருங் காதினிடத்திற் குடியிருந்தாற்போல அழகாகிய இரண்டுகுண்டலங்களைச் சாத்தினார்கள்-எ-று. (௬௯)

வரம்பெற்றதிருமால்சாத்து மலர்விழிக்கரியசோதி
பரம்பியதனையசீலப் பருமணிச்சிலம்புசாத்தி
விரும்பியகோலஞ்செய்தா ரிறையுமால்விடைமேற்கொண்டா
ரம்மையாரொருங்கிருந்தன்னி ராஜசமுங்காட்டினார்கள்.

(இ-ள்) யமராசனானவன் தக்கத்தினாற்செய்திருக்கிற பாதக்குறடுகளைக்கையாலெடுத்துக்கொண்டு வரவும், வாயுபகவான் திசைகளெட்டிலும் அகிற்புகை, சாம்பிராணிப்புகை; காண்பிக்கவும், ரிஷபத்திலேறுகின்ற ஈசானன் உடைவாளெடுத்துக்கொண்டுவரவும், சூரியர்களேகரும் சந்திரரேகரும் விளக்கெடுத்துக்கொண்டுவரவும்-எ-று. ()

[illegible] சுரமடந்தையர் துகிலின்மஞ்சிகைபலசுமப்ப
வரவமங்கையர் நவமணிப் பணிசுமந்தணுகப்
பரவுகின்னரர் முதலினோர்வீணைபார்ப்பரிகைப்
பொருவினான்மறை நடந்திறைதலைமைப்புகழ.

(இ-ள்) தேவகன்னிய ரநேகவஸ்திரம்வைத்திருக்கிற பெட்டிகளைத்தூக்கிக்கொண்டுவரவும், நாகலோகப்பெண்கள் நவமணிகளிழைத்திருக்கிற ஆபரணங்களைச்சுமந்துகொண்டுவரவும், கின்னரகிம்புருடர் வீணைவாத்தியஞ்செய்யவும், நான்குவேதங்களுஞ்சமீபித்துசுவாமியெல்லாருக்கும் பெரியவரென்று புகழ்ந்துமுறையிடவும்-எ-று. ()

கிரகமேழுமெண்வசுக்களுமுனிவருங்கிளர
வுரகாவிஞ்சையரிமையவர்மகிழ்ந்துகண்டுருக
விருகரங்களாலுருத்திரர்மலர்மழையிறைப்பத்
திருவும்வெண்கலைமடந்தையுமிமசலந்தெளிப்ப.

(இ-ள்) சந்திரசூரியரிருவருந்தவிர மற்றவேழுகிரகங்களும், அஷ்டவசுக்களும், முனியீசுரர்களும் களிகூர்ந்துவர நாகலோகத்தார் வித்தியாதரர்கள் தேவர்கள்பார்த்துச்சந்தோஷத்தையடைந்து உருக ஏகாதசருத்திரர்களும் இரண்டுகைகளாலும் புஷ்பங்களைவருஷமாகவிறைக்க-இலட்சுமியும், சரஸ்வதியும், பனிநீர்தெளிக்கவும்-எ-று. ()

திக்குப்பாலகர் தெரிவையர்திசைதொறுந்திகழ
மிக்கமாதர்களெழுவருஞ்சோபனமிசைப்ப
விக்குநேர்மொழிநீரமகளிர்வாழ்த்தெடுப்பத்
தக்கவிஞ்சையாமகளிர்பல்லாண்டிசைவழங்க.

(இ-ள்) திக்குப்பாலகருடைய தேவிகள் அவரவர்கள் திசைகளினின்றுசேவிக்கவும் சத்தமாதர்கள் சோபனம் பாடவும் கரும்பஞ்சாறுபோல்மாதுரியம்பொருந்தியவார்த்தைகளுடைய நீரமகளிர்வாழ்த்துச்சொல்லவும், தகுந்தவித்தியாதரமாதர்கள் பல்லாண்டுகூறவும்-எ-று,

கண்டைபேரிகை குடமுழகாகளந்துவைப்ப
வுண்டமல்லரி சல்லரிவலம்புரியொலிப்ப
வண்டகோளகை மடந்தையர்சிலம்பொலியதிர்ப்ப
வெண்டிசாமுகந் தனிலுமெண்பிரம்பொலியிசைப்ப;

(இ-ள்) பெரியமணியினோசையும், பேரிகை-குடவாத்தியம் -மத்தளவாத்தியம்-காகளம்-சப்திக்கவும், மல்லரி-சல்லரி-சங்கங்கள்கோஷிக்கவும், தேவப்பெண்கள் காலின்சிலம்புகலீரென்று சப்திக்கவும் எட்டுத்திக்கிலும் நந்திகேசுரரானவர்வருகிறகூட்டங்களைவிலக்க அடிக்கிற பிரம்பினதுசப்தம் பிரகாசிக்கவும்-எ-று. (எஅ

எண்ணும்வெள்ளியாம் வரையடியிறங்கியதிடப
மண்ணல்சேனையின் கொழுங்கிரிதலமடைந்த
விண்ணுமண்ணுமெள்ளிடமறநெருங்கியவிமானம்
மண்ணுமால்விடைநெறிகடந்தடைந்ததப்பதியே.

(இ-ள்) யாவராலுந்தோத்திரஞ்செய்யப்பட்ட கைலாயகிரியடிவாரத்தில் ரிஷபவாகனமிறங்கியதுசுவாமியினுடைய சேனையின் முன்னணி இமையபர்வதத்தையடைந்தது-ஆகாயமும்பூமியும் எள்ளிருக்க இடமில்லாமல் விமானங்கள்நெருங்கியதுகள் அலங்கரித்திருக்கின்ற விஷ்ணுவாகிய ரிஷபம்சுவாமியைத் தாங்கிக்கொண்டு வழிமுழுதுங்கடந்து இமயபர்வதராசன் பட்டணத்தில்வந்துசேர்ந்தது-எ-று. ()

இமயகிரிப்பதியடைந்ததுமிமகிரிமடவார்
நிமலனார்திருவழகெலாம்விழிகளானிரைத்தா
ருமைதவத்தினுக்கழிவிலையெனப்புகழ்ந்துரைத்தா
ரமர்செய்காமனையழித்தகண்ணெதுவெனவுரைத்தார்.

(இ-ள்) அப்படியேசிவன் இமயபர்வதத்திலே எழுந்தருளினபோது அந்தமலையிலிருக்கின்றபெண்கள் சுவாமியின் அழகைப் பார்த்துப் பார்வதிசெய்ததவசுக்கு ஒருகுறைவுமில்லாமல்பலன்சித்தியாச்சுது என்றார்கள்- அவர்களில்சிலாயுதத்துக்குவந்தமன்மதனையெரித்தகண்ணெதுவோ அந்தக்குரூரமானகண்ணைப் பார்ப்போமென்றார்கள்-எ-று.

ஆகமாரணிந்திருக்கவுமுலகெலாமயர்ந்த
போகமீதிவரிரக்கையான் மாரனுடலொழித்துப்
போகமீதிவர்விரும்புறவுபாசகனவபுணர்ந்த
மோகமாக்கிமூதலவரெனசிலாமொழிந்தார்.

(இ-ள்) மன்மதன்தேகத்தையுடையவனாயிருந்தபோது இவர்யோகத்திலேயிருந்ததினாலே உலகத்திலுள்ள சனங்களெல்லாம் விசாரமில்லாமல் அசந்துகிடந்ததுகள் மன்மதன் தேகம்போயும்இவர்போகத்திலேவிருப்பமுண்டானபடியினாலே சகலருக்கும்போகத்திலாசையுண்டாச்சுது-ஆனபடியினாலே மோகத்தையுண்டாக்குகிறவர் இந்தசிவனேயன்றி வேறொருவருமில்லையென்று ஸ்திரீசனங்கள் சிலர்சொன்னார்கள்-எ-று (அக)

மாயவிற்கைவேளழகிவரெழின்மிகுவடிவி
லாயிரத்திலொன்றிலையெனத்தனைமதித்தவனைத்
தீயிடத்துடல்கொளுத்திய தவத்திறனற்றிறமே
யாயுமுத்தமராழிப்பரோவெனச்சிலாறைந்தார்.

(இ-ள்) மாயஞ்செய்கின்றகருப்புவில்லைகையிற் றரித்திருக்கின்ற மன்மதன் அழகு இந்தசுவாமியினுடையவடிவமாகிய அழகில் ஆயிரத்திலொருபங்குகாணாது-அதனாலே அவனையிகழ்ந்து தன்னைமதித்துத்தீயினாலேஅவனைக்கொளுத்திப்போட்டது-தபோபக்கிரமையினாலேயே ஆராய்ந்தெடுக்கத்தகுந்த உத்தமர்கள்- ஆனால் அப்படிச்செய்வார்களோவென்றுசிலமாதர்கள்சொன்னார்கள் எ-று. (அஉ)

மாதுலன்பெருங்கிளைஞருநாருகனாதிரனும்
காதலன்பினுநெதிரெதிர்தழுவினாகலந்தா

பற்றியாசனத்திருந்தன னனைவரும்பணிந்தார்
பெற்றதாயொடன்னையைப் பணிந்தனள்பெதும்பை.

(இ-ள்) வெண்மைபொருந்திய சங்கம் முழங்கவும், நான்குவேதங்களும் சப்திக்கவும், நான்குபுறமும் சுற்றிக்கொண்டு தேவர்களும் ரிஷிகளும் புஷ்பமாரியைப் பொழியவும், சுவாமி ஒரு ஆசனத்தில் எழுந்தருளினார்- அப்போது சர்வத்திரபேரும் வந்தனஞ்செய்தார். பார்வதியானவள் அவள் தாயையுந் தகப்பனையும்வணங்கினாள்-எ-று.

எரித்தகாமனைத் தருதியென்றிமையவரயன்மா
லொருத்தரின்றியே யிறையவன்மகிழ்ச்சிகண்டுரைத்தார்
மரித்தகாமனையழைத்தருள் புரிந்தனன்வள்ளல்
பெருத்தவன்பினாலனைவரும் விடைகொடுபெயர்ந்தார்.

(இ-ள்) தேவர்களும் பிரமாவும் விஷ்ணுவும் மற்றசாவத்திரபேரும் சுவாமி எல்லாரிடத்திலும் வைத்தபிரியத்தைப்பார்த்துச் சுவாமீநீர்முன்னே எரித்த மன்மதனையெழுப்பித்தரவேண்டுமென்று கேட்டார்கள். அப்படியே இறந்துபோன மன்மதனை வரவழைத்துக்கொடுத்த கிருபைசெய்தார்- பரமசிவன்-பின்பு யாவரும் விடைபெற்றுக்கொண்டு போனார்கள்-எ-று. (அஅ)

அதற்பின்னன்றுலுமை கவுரியுமுருகியொன்றாகி
மதத்தவானனையகுமாரனைபயந்தனாமகிழ்வாய்
விதித்தவேலினைக்குமாரனுக்களித்திறையடுத்தான்
கொதித்ததாருகனுயிர்குடித்துவந்தனன்குமரன்.

(இ-ள்) அப்படியேதிருக்கலியாணம் நடந்தபின்புசுவாமியும் அம்மனுமிருந்த அன்புகொண்டு ஒருருவமாகிச்சேர்ந்து வலிமைபொருந்திய யானைமுகத்தையுடைய விக்கினேசுவரனையும் சுப்பிரமணியரையும் பெற்றார்கள்-அதன்பின்புசுவாமி சுப்பிரமணியருக்கு வேலாயுதத்தை அருளிச்செய்தனுப்பினர். அவர்போய் அந்தத் தாருகாசூரனை வேலாயுதத்தால் விட்டெறிந்து கொன்று சந்தோஷத்தையடைந்தார்குமாரசுவாமி-எ-று. (அகூ)

மயிலெனத்திகழ் மலைமகள்பொருகரிவதன
னயிலெடுத்தசேவகனுடனிமயவெற்பகன்று
கயிலைவெற்பில்வாதிமையவர் முனிவர்கண்களிக்க
வெயிலுடைப்புரமெரித்தவனிருந்தனனன்பால்.

(இ-ள்) மயில்போல்விளங்குகின்ற பருவதராஜன்மகளாகிய பார்வதி யானைமுகத்தையுடைய பிள்ளையார், வேலாயுதத்தைத்தரித்த சுப்பிரமணியருடன் இமயகிரியைவிட்டு நீங்கி, தேவர்கள் முனிவர்களுடைய கண்களிக்கக்கைலாயத்தில் எழுந்தருளியிருந்தார்-முப்புரத்தையெரித்தவராகிய பரமசிவன்- அதன்பின்பு-எ-று. (கூ0)

மூன்றாவது-திருவவதாரச்சருக்கம்-முற்றிற்று.

ஆகதிரு ... ௲ - உ௱௪





உ

சிவமயம.

நான்காவது

# திருக்கண்புதைத்தசருக்கம்.

அறுசீரடி யாசிரியவிருத்தம்.

மின்னனையமுகிறவழு மிமகிரியின் றபோபலத்தான் மேனைட்ட
ண, வன்னையிடத்தென்னன்னையவதரித்தகதை சிறிதேயறைந்தேனிப்
பால், பொன்னனைய சடையிறைவன திருநயனமிருகரத்தாற் புதை
த்தவாறுந், தென்னருணைமாநகரி லன்னவினை தீர்த்ததுவுஞ் செப்ப
லுற்றேன்.

(இ-ள்) மின்னல்பொருந்திய மேகங்கள்தவழ்ந்து போகாநின்ற இம
வறபருவதத்தின் தபோபலத்தினாலே மேனாதேவியிடமாக என்தாயா
கியபார்வதி அவதரித்த கதையில் கொஞ்சந்தான் சொன்னேன் அந்
தப் பார்வதி பொன்போலும் சடையுடையசிவனது அழகியகண்களை
இரண்டுகைகளினால் பொத்தியதும அதனால் வரும்வினையைத் தெற
்கின்கண்ணிருக்கிற அருணாசலத்தில் அமமைபூசைசெய்துதீர்த்ததும
சொல்லததொடங்கினேன்-எ-று. (௧)

அறுசீரடி ஆசிரியவிருத்தம்-வேற்றுவண்ணம்.

ஊடுவர்புலவிதீர்ப்ப ரொருவருக்கொருவர்மாலை
சூடுவார்மறைநூல்கேட்பர்சொல்லுவார்வீணைநாதம்

பாடுவர்பலவிதேமும் பயிற்றுவர்பலகாறகூத
மாடுவர்வெல்லாமேற்றப மணிகலம்புனைவரன்பால்.

(இ-ள்) சிவனும்பார்வதியும் பிணங்கிக்கொள்வார்கள் அதை மறுபடியும் தீர்த்துக்கொள்வார்கள் ஒருவருக்கொருவர் மாலைகளைச்சூடிக் கொண்டு வேதசாஸ்திரங்களைத் தேவர்கள் முனிவர்கள் சொல்லக் கேட்டும், அதன்பொருளைச்சிலருக்குச்சொல்லியும், வீணைமுதலிய வாத்தியங்களை வாசித்தும் மற்றும் பலவிளையாட்டுகள் செய்தும், பலதாம் கூத்தாடியும், அதனால் வெற்றியையும் தோற்றலையுமடைந்தும் அழகிய ஆபரணங்களைத் தரித்துக்கொண்டிருந்தார்கள்-எ-று. (உ)

இதுவுமது.

அந்தவேலையிலெனன்னை யையனையிறைஞ்சியைய
விந்துவுமிரவிதானும் யாவரென்றிசைத்தாளெந்தை
சுந்தரகனிவாய்மின்னே சுடர்களெம்மிருகண்ணென்றார்
கந்தனைப்பயந்தாளீசன் விழிகளைப்புதைத்தாள்கையால்.

(இ-ள்) அந்தச்சமயத்தில் என்தாயாகியபார்வதி சுவாமியை வணங்கி ஐயா சந்திரசூரியர்கள்யாவரென்றுகேட்க அதற்குச்சுவாமி அழகிய கனிபோலும் வாயையுடையபெண்ணே அந்த இருவரும் நம்முடைய கண்களென்றுசொன்னார்-சுப்பிரமணியரைப்பெற்ற தாயானவள் கேட்டு வேடிக்கையாகச் சுவாமியினுடைய கண்களை இரண்டுகைகளால் மூடினள்-எ-று. (௩)

கலிவிருத்தம்.

ஈசனார்விழிபுதைத்தலு மிருட்பிழம் புருக்கிப்
பூசினாலெனவிருண்டன திசைகளும்புவியு
மாசினீலமால்வரையெனக்கருகியமலைகள்
காசிலாவிய நதியெலாம்யமுனைபோறகறுத்த.

(இ-ள்) பரமசிவனுடையகண்களைப் பார்வதி புதைத்தலும் இருட்கூட்டத்தை யுருக்கிச்செய்து பூசினதுபோல் திக்குகளும பூமியுமிருண்டதுகள்-மலைகளெல்லாங்குற்றமற்ற நீலகிரியைப்போல் கறுத்ததுகள் - மணிகள்பொருந்திய நதிகளெல்லாம யமுனாநதிபோல் கறுத்ததுகள்-எ-று. (௪)

அறுசீரடியாசிரியவிருத்தம்-வேற்றுவண்ணம்.

மறையவனுநாரணனு முனிவர்களும் வசுக்களுநான் மறையும்வானோ, ரிறையவனும்விழியொளிபோய்ப் பிறவிநெடுங் குருடரெனவிருந்தார்மற்றைக, கறவைகிளைமுதல்விலங்கு பறவைகளு மொளியிழந்த கண்ணதான, துறவறமும்பிறவறமுந் தொலைந்தனமற் றுளதொழிலுந்தொலைந்ததன்றே.

(இ-ள்) பிரமாவும், விஷ்ணுவும், முனிவர்களும், அஷ்டவசுக்களும், நாலுவேதங்களும், தேவர்களும்; இந்திரனும், கண்ணினது பிரகாசமற்றுப்பிறவிக்குருடர்போலிருந்தார்கள்; பசு-கிளை முதலிய மிருகங்க

ளும், பட்சிகளும் கண்ணொளியற்றதுகள்-துறவறமில்லறமிரண்டும் ஒ ழிந்ததுகள் -மற்றவெல்லாதொழில்களும கெட்டதுகள-எ-று. (௫)

கலித்துறை.

தேவர்மானிடரிராக்கதர் நிறமெனததிரிந்தார்,
கோவிலிந்திரன் வெண்கரிகருநிறங்கொண்ட
தாவிலம்புயன் கொடிகொடியானதவ்வளவின்
மூவாதேவனுக் களவறுமுறைசெப்புகின்றார்.

(இ-ள்) தேவர்களும் மனிதர்களும் இராட்சதர் நிறம்போலக் கறுத் தார ஆகாயததில் இந்திரன்வாகனமாகிய வெள்ளையானை கரிபோலக் கறுததது, கெடுதலில்லாதபிரமாவின்கொடிய கியஅன்னமகாகபபோ லகருகியது, அப்படிஎல்லாப்பொருளுங்கறுததது மயங்குகிறகாலததில் மூமமூாததிகட்கு முதலாகிய சிவனிடத்தில் எலலோரும போயமு றையிட்டுத தஙகளகுறையைச் சொல்லிக்கொண்டாாகள-எ-று. (௬)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

அஞ்சலெனவமைத்தகரத் திறைவனுதல் விழிதிறந்தா னவனி யேழுங், துஞ்சயிருளகன்றது பன்னிருகோடி சூரியாதந் தோற்றம போல, வஞ்சியுமையிறைவன்விழி புதைததிருககாய லவைவாங்கிநின் றாள், விஞ்சுமறையவாவளர்க்குங் கனல்போல விழி மூன்றும விளங் கிறறன்றே.

(இ-ள்) சிவன் பயம்வேண்டாமென்று கையமர்த்திப் பன்னிரண்டு கோடி சூரியருதயம்போலத் தபமுடைய நெறறிக்கண்ணைததிறககு-ஏ ழுலகமும அநதகாரததைநீக்கியது, பாாவதியானவள பொததிய கை யைவாங்கிநின்றாள், பிராமணாகள் வளர்க்கும யாகாககினிபோல மூ ன்றுகண்களும விளஙகியதுகள-எ-று. (௭)

பார்புதைத்த திருவயிற்றாள் பணிந்தனைப்பாணெஞ்சூலப் ப டையாய்காலன், மார்புதைததமலர்ப்பததா யார்புதைத்த சடாடவி யாயனையமேழும்,கார்புதைததவிருளாக விழிபுதைததகொடும்பாவஞ் சூழுமாறு, சீர்புதைதத பாரிடத்திற்றவமபுரிதற்கானவிட மிகழ்த்து மென்றாள்.

(இ-ள்) எல்லாச்சீவாாசிகளையும் கருவாகவைத்துக் கொண்ட வயிற் றையுடையபாாவதி சுவாமியைப்பாாதது நெடிய சூலததை யுடையவ ரே, இயமனைமாாபிலேயுதைதத மலாபோன்ற பாதகளை யுடையவ ரே, ஆததிமாலையையணிந்த சடைககாட்டினையுடை யவரே, ஏழுலக மும் மேகநிறததிலும் அதிகநிறமான இருட்டுண்டாக உமதுகணகளை மூடிய கொடியபாவமானது போகும்படியாகச சமுததிரஞ்சூழ்ந்தபூ மியினிடததில் தவஞ்செயதறகு நல்ல இடஞ் சொல்லுமென்றுகேட் டாள்-எ-று. (அ

ஈசனுமங்குரைத்தருள்வா னுனைவினைவந்தணுகாதே யெனினும் யார்க்கும், மாசகலும்படிக்கரியதவம்புரிய விரும்பினையேன் மதுரை மாயை, காசியவந்திதுவாரகை யயோத்தியினுஞ் சிறப்புடையகாஞ்சி மேவிப், பூசைபுரிந்தரியதவம் புரியென்றான் விடைகொண்டாள் புகழ்ந்துபோற்றி.

(இ-ள்) அப்படிபார்வதிகேட்கச் சுவாமிபெண்ணே உன்னைப்ப[illegible]ம்வந்து சேராதாயினும் மற்றவர்களுக்குப்பாவம நீங்கும் பொரு[illegible] தவஞ்செய்யஇச்சித்தாயாகில்மதுராபுரி- மாயாபுரி-காசி-அவந்தி-துவாரகாபுரி-அயோத்தி, இவைகளுள் சிறந்தகாஞ்சீபுரத்திற்போய்ப் பூசையுடன் அரியதவஞ் செய்யென்றுசொல்லச் சுவாமியைவணங்கித் திருவிடைபெற்றுக்கொண்டாள்-எ-று. (௯)

விசையமகள்குடையெடுப்பசயமகள்பொன்னடப்பைகொடுவிரைந்துமேவ, வசையுமணிக்கவரியிரண்டருந்ததியுங் கமலினியு மருங்கில்வீசத், திசையிலிளங்கிலவெறிக்குந் தாளமணிச் சிவிகையின்மேற் சென்றபோது, இசைபெருகுமறம்பெருகப் புனல்பெருகும புகழ்க்கங்கா நதியைச்சேர்ந்தாள்.

(இ-ள்) பார்வதியானவள் வீரலட்சுமி குடைபிடிக்க, செயலட்சுமி பொன்னடப்பந்தாங்கிச சீக்கிரத்தில்வர, இரத்தினங்களிழைத்தசாமரைகளால் அருந்ததியும் இலட்சுமியும் இரண்டுபாகங்களில் நின்றும் காற்றுகளைவீச, [illegible]சந்திரனைப்போலப் பிரகாசத்தைவீசும்முத்துப்பல்லாக்கின்மேலேறி யாவரும் விரும்புகின்ற தருமம் பெருகச்சலம்பெருகுகின்ற கீர்த்தியினையுடைய கங்காதீரத்தில்வந்துசேர்ந்தாளென்றவாறு. (௰)

இறந்தவுயிரினிமீளப்பிறவாமலிறவாமலிறைவனூர்தன், சிறந்ததிருவுருவாகுந்திருக்காசித்தலமடைந்து சிவன்றாள்போற்றி, வறந்தமழைக்குருகுழுந்தத் தலத்தவர்கள் பிழைக்கவறம் வளர்த்துப்பன்னாள், நறுந்தாரடையினரசன்விடைகொண்டுசிறப்பத் தொண்டைவளநாட்டைச்சேர்ந்தாள்.

(இ-ள்) இறந்துபோனஉயிரானது இனிதிரும்பப்பிறக்காமலும் இறக்காமலும் பரமசிவனுடைய திவ்யசொரூபமாகின்ற காசிப்பதியைச்சேர்ந்து விஸ்வேசருடைய பாதம்போற்றி மழையில்லாமல் வருந்தாநின்ற சீவராசிகள் பிழைக்கும்பொருட்டு அத்தலத்தில் தருமத்தைப் பலநாள்வளர்த்துத் தேன்பொருந்திய மாலையைத் தரித்த அத்தேசத்திராசன்விடைபெற்றுச்சிறந்த தொண்டைமண்டலத்தைச் சேர்ந்தாள் பார்வதி-எ-று. (௰௧)

மரைதவழுந்தலைப்பலவின்பழமதுவாய்விரிந்தாலும்மகரவாழைப், பழமதுவாய்விரிந்தாலும்புதுமடைவாய்விரிந்தொழுகும்பழனநீங்கிக், குழைபாவுடமாடும் விழிமாதர்நடமாடுங் குறிப்புநோக்கிப், பொழிலணியின் மடமயில்கள்நடமாடுந்திருக்காஞ்சிப்புரத்தைச்சேர்ந்தாள்.

(இ-ள்) மேகங்கள்தவழாநின்றதலையையுடைய பலாவினது பழங்கள் [illegible]விண்டாலும், மகரவாழையினுடைய பழங்கள் அளிந்தாலும், புதிய

தேன்பெருக்கெடுத்துவாய்க்கால்வழியாகஓடிவிழாநின்றகழனிகளைக்கடந்து குண்டலம்வரைக்குந்தாவுகின்றகண்களையுடையபெண்கள் நாட்டியஞ்செய்கின்ற குறிப்பைப்பார்த்துச்சோலைகளில் இளமையாகிய மயில்கள்நடனஞ்செய்கின்றகாஞ்சிபுரத்தலத்தைச்சேர்ந்தாள பார்வதி யென்றவாறு. (௰௨)

தாவாத்தையழிவாக்கிமணிநிரையுள்ளறிவழிக்குந்தடங்கண்மாதர்,
பூவாரத்தம்புயசரணஞ் சிவப்பேறவிழைமருங்குனுடைகவேறு, மாபுர
த்தின்மணிமேடையரம்பையர்க்குவிளையாட மலைகளாகுங், கோபுரத்தி
னெடுங்கொடிகள்காமவல்லியெனுங்கொடிக்குக் கொழுகொம்பாகும்.

(இ-ள்) கல்லுகளையும்மரங்களையுமுருகச்செய்து மனிதர்களுடையவுள்ளறிவைக்கெடுக்கிற விசாலமாகியகண்களையுடைய பெண்கள் சிலமணிந்ததாமரைமலர்போலுமபாதஞ்சிவக்க நூல்போலு மிடைதளைய வாறுகின்ற அப்பட்டணத்திலிருக்கின்றஇரத்தினமிழைத்த உப்பரிகைகளரம்பைமுதலாகியபெண்களுக்குவிளையாடுகிறதற்குமலைகளாகவிருக்கும், சிவாலயத்தின்கோபுரத்திற்கட்டியிருக்கிற கொடிகள்கற்பக விருக்ஷத்திற்படர்ந்த காமவல்லியென்னுங் கொடிக்குப் படருகிறதற்குக் கொழுகொம்பாயிருக்கும்-எ-று. (௰௩)

பாதநாடகமாடு மயில்போலுங்கயிற்று வழிப்பாவைபோலும், சுர
தநாடகமாடுந்துடியிடையார்கணவருடன்றுவளும்போது, மாயதாதிக
ளுறுத்த விழ்த்ததுபணிமேடையினுமவாரிவீச, வரதனுக்குமானதனலு
முதலின்றளவுமாழிகானே

(இ-ள்) பரதநாட்டியமாடுகின்றமயிலுக்குச்சமானமாகவும் கயிற்றுவழியாகஆடுகிறசிங்காரமபொருந்தியபிரதமைபோலவுமசுரதவிளையாட்டைச்செய்கின்றஉடுக்கைபோன்றஇடையினையுடையபெண்கள புருஷர்களோடுபடுத்துப்புரளுமபோதுமரகதமுதலிய இரத்தினாபரணங்களுறுத்தகோபித்து அவ்வுப்பரிகையில்நின்றுமகற்றுத்துவீசியெறிய அவ்வாபரணங்கள் சமுத்திரத்திலேவிழுந்ததினாலேதான் அதுரத்னாகரமென்கிறபெயர்பெற்றது-எ-று. (௰௪)

அனையமருங்ககன்றுவஞ்சியொருமாவின்கீழிருக்கு மானைப்போ
ற்றிக், கலைவனையவினைகளையுநடுக்குவிக்க நடந்ததிருக் கம்பையேவிப்,
புனையமணல்குவித்திலிங்கவடிவாக்கியுமைபூசைபுரிந்தாளப்போ, தெ
னையுடையானவடவத்தினுருதிரினைந்தரியக்கைகையேவினனே.

(இ-ள்) அத்தன்மையுடைய வீதியைக்கடந்து ஒப்பற்றமாவிருட்சத்தின்கீழ் எழுந்தருளியிருக்கும்ஏகாம்பரநாதரைவணங்கி நெருப்பொத்தபாவங்களைக்கெடுத்தோடிப்போகவருகின்றகம்பாநதியருகேபோய் அலங்காரமாய் மணலைக்குவித்து இலிங்கரூபமாகப்பார்வதி பூசைசெய்யும்போது எம்முடையசுவாமி அவள்தனதினுடையஉறுதியையறியக்கங்கையைப்பிரவாகமாகவரச்செய்தார்-எ-று. (௰௫)

லையுடைய அந்தஅம்மைதன்னுடையசுவாமிமார்பைமற்றப்பெண்கள் வெட்கத்தையடைந்து தொடாமலிருக்கும்படிதடுக்க வைத்த குறிகள் போல் தழும்புகள்விளங்கியதுகள்-எ-று. (௰௯)

அப்பொழுதானுமாற னடித்தழும்பிருக்குந்தோளு
முப்பொழுதிறைஞ்சுந்தேவர் முடித்தழும்பிருக்குந் தாளு
மைப்பொலிகுழலாள்கொங்கை வளைத்தழும்பிருக்குமார்பு
மெய்ப்பொலிநீறுமாகத் தேவன்றிருந்விடையின்மீது.

(இ-ள்) அந்தக்காலத்தில்பரமசிவனும்பாண்டியராசன் அடித்தழும் பிருந்ததிருத்தோள்களும், மூன்றுகாலத்திலும்வணங்குகின்ற தேவர் களுடையகிரீடங்களின் தழும்பிருந்ததிருவடிகளும் மேகம்போல்விள ங்குங் கூந்தலையுடையபார்வதி முலைத்தழும்பும்,வளைத்தழும்பு மிருக்கின்றமார்பும், தேகத்திற்பொலிந்த திருநீறுமாய் ரிஷபவாகனத்தின் மேல் எழுந்தருளினா-எ-று. (௨௰)

அந்தரத்தமரரெல்லா மலர்மழைசொரியவானிற்
றுந்துபிமுழக்கத்தோடே சுருதிகண்முழங்காநின்ற
விந்திரன்றிருமாறேவ ரிறைவியைத்தொழுதுநின்றார்
சுந்தரக்கனிவாய்மின்னு மீசனைத்தொழுதுநின்றாள்.

(இ-ள்) ஆகாயத்தில் தேவர்களியாவரும் புஷ்பவருஷம் பொழிய தேவதுந்துபி முழக்கத்தோடு வேதங்கள் முழங்காநின்றன தேவேந்திரனும், விஷ்ணுவும் தேவர்களும், பார்வதியைத் தொ ழுதார்கள்-அழகுபொருந்திய கனிபோலும் வாயையுடைய அம்மனும் பரமசிவனை வணங்கினாள்-எ-று. (௨௧)

ஒண்ணுதல்விடைமுன்சென்று பணிந்துளமுருகிப்பூசை
பண்ணுதல்புகழ்தலாகிப் பணிந்தனளவளைநோக்கிக்
கண்ணுதலுனக்குவேண்டும் வரமெதுகழறுகென்று
னெண்ணுதல்பிறிதொன்றில்லை யிடப்புறந்தருதியென்றாள்.

(இ-ள்) விளங்குகின்ற நெற்றியையுடைய அம்மன் ரிஷபவாகன த்தின் முன்பாகச்சென்று நமஸ்கரித்து மனமுருகிப் பூசை செய்தலை மோல் புகழ்ந்து வணங்கினாள் சுவாமி அப்படிப்பட்ட பார்வதியைப் பார்த்து உனக்குவேண்டியவரம் எதுசொல்லென்றார்-அதற்குஅம்ம னும் வேறேயொன்றும் வேண்டியதில்லை உமது இடபாகத்தை அரு ளுமென்றுகேட்டாள்-எ-று. (௨௨)

அத்தனுமொழிவானென்கண் புதைத்ததாலடைந்ததீமை
யித்தலத்தினியபூசை யியற்றலாலகன்றதிந்த
மெய்த்தலந்தனக்குத்தென்பா லொருநகர்விளங்கித்தோன்று
முத்திமாநகர்தன்னை நினைத்தபேர்க்களிக்குமூதூர்.

(இ-ள்) அதற்குப்பரமசிவனருளிச்செய்வார், கண்களை மூடியதனா லே அடைந்த பாவம் இந்தஸ்தலத்தி லினிமையானபூசை செய்தலி

ஞலேநீங்கியது- இந்தமெய்மையானஸ்தலத்துக்குத்தென்பாரிசத்தில் ஒருநகரம்பிரகாசிக்கு மதைநினைத்தால் முத்தியுண்டாகும-எ-று.

ஆரணன்றிருமாறேட வடிமுடியொளித்துஞானப்
பூரணவொளியாய்மேல்கீ ழுலகெலாம்பொருந்திநிற்போம்
தாரணியவர்க்குமற்றைச் சயிலமாயிருப்போமங்கே
வாரணிமுலையாய்பாகந் தருகுவோம்வருதியென்றார்.

(இ-ள்.) பிரமாவும், விஷ்ணுவும்தேடப்பாதமும், சிரசும், அவர்களுக்குத தெரியாமலொளிததுப் பூரணமாகிய ஞானவொளியாகிய மேல கீழுலகங்களெல்லாம் ஒன்றாயநிறபோம்-பூமிகளிலிருப்போர்க்கு மலையுருவமாயிருப்போம-அவவிடததில்வந்தால் கசசணிந்த தனத்தையுடையபெண்ணே இடப்பாகத்தைததருமோம் வாவென்றார் பரமசிவன்-எ-று. (௨௪)

என்னலுமிறைவிசொல்வா ளினிமைசேர்கயிலைகாசி
தன்னிலுமினிதுகாஞ்சித தலமெனவுரைததீரிந்த
நன்னிலந்தனக்குச்சோணை நகரமேயதிகமென்றீர்
பின்னையுமுளதோவந்தத தலததினுக்கிணையாம்பேரூர்.

(இ-ள்.) பரமசிவன் அப்படிதிருவுளம்பற்றிய அளவில் பார்வதிப்பெண் சொலலுவாள்-இனிமைசோந்த கையிலாயம்காசி இவ்விரண்டு தலஙகளிலும இந்தககாஞ்சீபுரம் அதிகமென்று அருள்செய்தீர் அந்தலத்துககுச்சமானமாகிய பெருமைபொருந்திஸ்தலம்வேறொன்றுண்டோவென்றாள் பாாவதியமமை-எ-று. (௨௫)

அவ்வுரைமறுத்தெஙகோமானருள்வானமக்கொப்பான
தெய்வமுந்தெழுத்துமானத் திருந்துமந்திரமுமில்லை
சைவமேயனையதான சமயமுமருணைபோல
வெவ்வினைதவிாக்குமூருமிலலையெனவிளம்பிப்போனார்.

(இ-ள்.) அப்படிபார்வதிசொன்னவார்த்தையைச்சுவாமியானவர்மறுத்து நமக்குச்சமானமாகியதெய்வமும் பஞசாக்ஷரததிற்கொப்பான மந்திரமும், சைவத்திற்குச்சரியானசமயமும், பொல்லாதபாவங்களைத்தீர்க்கும் அருணாசல ஸ்தலத்திற்குசசரியானஸ்தலமும், உலகத்திலில்லையென்றுதிருவாய்மலர்ந்துகைலாயத்திற்கெழுந்தருளினார்-எ-று. (௨௬)

கொம்பனாள்பொறுப்பாயென்றிறைவனைக்குவித்துப்போற்றிக்
கம்பையாறகன்றுகாஞ்சித் தலததையுங்கடந்துவேலன்
தும்பிமாமுகத்தோன்கன்னி வயிரவர்கணங்களசூழச்
செம்பொனாள்கவரிவீசச சிவிகைமேற்சிறந்துசென்றாள்.

(இ-ள்.) புஷ்பக்கொம்பையொத்த பார்வதியானவள் சுவாமிநான்தெரியாமல்சொன்னவார்த்தையைப் பொறுத்துக்கொள்ளுமென்று இரண்டுகைகளையுங்குவிதது வணங்கிக் கம்பையாற்றைவிட்டுக் காஞ்சீபுரததையுங்கடந்து சுப்பிரமணியர்-கணபதி- சப்தகன்னிகள்- வயிரவர்-சிவகணங்களசூழவும, இலட்சுமி கவரிவீசவும், பல்லக்கி லெழுந்தருளினாள்-எ-று. (௨௭)

மண்மகண்மகிழப்பட்ட மரங்களுந்தழைத்துவீறிக்
கண்மலர்சொரியக்கல்லு மலைகளுங்கரைந்துசோர
வெண்மலர்மடவாள்போற்றக் காவதமிரண்டுநீங்கி
விண்மதிமுகத்தாண்மறமேரூர் வெள்ளிடையருகிற்சேர்ந்தாள்

(இ-ள்.) பூமிதேவிக்குச் சந்தோஷமுண்டாகப் பட்டுப்போன மரங்கள் தளிருண்டாகித் தழைத்துத் தேனோடும் புஷ்பங்களைச் சொரிய பாராங்கல்லுகளும் பெரியமலைகளுங் கரைந்துருக வெள்ளைத்தாமரைப்பூவில்வாசஞ்செய்யும் சரஸ்வதிதோத்திரஞ்செய்ய இரண்டுகாதந்தூரம்போய்ச் சந்திரனையொத்த முகத்தையுடைய பார்வதி ஒருவெளியிடத்திலிறங்கினாள்-எ-று. (௨௮)

வெய்யவனுமையாரென்று வினவுகாரணத்தானீலக்
கையவன்மரகதத்திற் கரியவள்கரமுங்காலுஞ்
செய்யவள்வருந்தினாளென்றறிந்துயிர்சிதைப்பான்போலப்
பையமேற்கடலிற்பாய்ந்தான்குமரவேள்பந்தல்செய்தான்.

(இ-ள்.) சூரியனானவன் தன்னையாரென்று பார்வதி வினவக்கேட்டதனாலே நீலம்போன்றகையும், மரகதம்போன்றவடிவமும், தாமரைப்பூப்போன்ற உள்ளங்கையும், உள்ளங்காலும் பொருந்திய அம்மன் சாபத்தினால் வருந்தினாளென்றறிந்து தன்னுயிரைவிட்டுவிடுகிறவன்போல மெள்ளமெள்ள மேற்குச்சமுத்திரத்தில் விழுந்து அஸ்தமித்தான்-சுப்பிரமணியர் அம்மனிருக்கிறதற்காக ஒருபந்தல்போட்டுவைத்தார்-எ-று.

அந்தஸ்தலத்திற்கு வாழைப்பந்தலென்று இக்காலத்தில் வழங்கிவருகின்றது.

அன்னையுங்குகனைநோக்கி யம்மையாற்பந்தல்செய்து
பன்னிருகரமுஞ்சால வருந்தினையெனப்பாராட்டிப்
பின்னுமோர்கருமஞ்சந்தி முடிப்பதற்கினியநன்னீர்
கைந்நிறைவேலைவேலி யழைத்திடுகணத்திலென்றாள்

(இ-ள்.) அதன்பின்பு பார்வதியானவள் சுப்பிரமணியரைப்பார்த்து வாழைமரத்திலே பந்தல்போட்டுப் பன்னிரண்டுகைகளும் சிவக்கவருந்தத்தையடைந்தாயென்று பிரியவசனஞ்சொல்லி இன்னுமோர் வேலையிருக்கின்றது அதென்னவென்றால் சந்தியாவந்தனஞ்செய்கிறதற்கு நல்லபரிசுத்தமான ஜலம்வேண்டும் உன்கையிற்பிடித்திருக்கிற வேலாயுதத்தையேவி அழைப்பியென்றுசொன்னாள்-எ-று. (௩௰)

காதலாலிறைஞ்சிக்கந்த னேவினன்கைவேலவ்வேல்
போதவான் புத்திரண்டன்புகழ்புருகூதன்போதன்
வாதிபாண்டரங்கன்சோமன் வாமனென்பவரைவாட்டி
மீதிலேழ்கிரியைவீட்டிக்கொணர்ந்ததுவேலைநீத்தம்.

தொழுகிற அவர்களுடைய இரத்தத்தோடு ஜலங்கலந்து சிவந்துபோய் விட்டது-உனக்கொரு குற்றமுமில்லையென்றுசொல்ல அம்மன் பாதத்தில் சுப்பிரமணியர்வணங்கிச சந்தோஷமாயிருந்த அளவில் மலையிலே தவஞ்செய்து கொண்டிருந்த முனிவர்களுடைய இரத்தத்தினுற் சிவப்புநிறத்தையடைந்ததுபோலச்சிவந்தது செவ்வானம்-எ-று. (௬௫)

வித்தகர்கண் புதைக்குமுனம் பார்தவிருண்மறுமையிற சூழ்வினை
போல, வத்தலத்திலுமையவளைப் பின்பிடித்தாலெனப்பரந்த தங்
தகர,முத்தமிழோர்சிறுகதலிப்பந்தலின்கீ ழிருப்பவளென் றும்பர்ட்ட,
மித்திலப்பந்தனிகராயவிளங்கியது தாரகையானெருங்குமகானம்.

(இ-ள்.) சுவாமியினுடைய கண்களை முன்னேமூடின திருலேலஉலகமெல்லாம் பரவியவிருளானது ஒருவனுக்கு மறுமையிலவந்து பிடித்துக்கொள்ளுகிற பாவகனைதப்போல அந்தஸ்தலததில் பிறகுவந்து அம்மனைப்பிடிததுபோலிருந்தது பார்வதியோ ஒருவாழைப்பந்தலின்கீழிருப்பாளென்று தேவாகள்போட்டுவைத்தமுத்துப்பந்தலையொத்திருந்தது நட்சத்திரங்களால்நெருக்கப்பட்ட ஆகாயம்-எ-று. (௬௬)

மாலையெனுங் குமரியிருண் மகிடமுகமகற்றியந்தி வானச்சோரி,
கோலமுடன்படிகலியகங் கொண்டதுபோன்மதியெழுந்துகுடபாற்சென்று, தாலமணி மிடற்றிறைதன் விழிபுதைக்கவளாதவிருளனைத்துநீங்கப், பாலமிசைவெடித்தெழுந்த விழியெனவேயெழுந்ததுசெம்பரிதிதானே.

(இ-ள்.)மாலைக்காலமென்கிறதுர்க்கையானவள்இருட்டாகிய மகிடாசுரன்தலையையறுத்து அதனுல்செவ்வானமென்றுசொல்லப்பட்ட இரத்தகோலத்தோடுபொருந்தியஸ்படிகலிங்கத்தைக்கைகொண்டதுபோலச் சந்திரனுதயமாகிமேற்குத்திக்கிலஸ்தமித்தது நீலகண்டராகிய பரமசிவனது இரண்டுநேத்திரங்களையும் அம்மன்புதைத்த அளவில் நான்குதிக்கும்பரவியஎல்லாவிருளும,போகும்படியாயவிழித்தஅச்சுவாமியினதுநெற்றிக்கண்போலச் செம்மைநிறமபொருந்திய சூரியனகிழக்குததிக்கில்உதயமானன்-எ-று. (௬௭)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

கன்னிகைகாஞ்சேயாற்றிற்காலைசந்திகடன்கழித்து, மங்கைகனகச்சிவிகையின்மேன்மறையோலமிடவழிகொண்டாள், பங்கமலந்திரவழியடியார் கொடியவினையாம்பஞ்சமலைக், கனிமலையாயவிளங்கிய சிவண்ணுமலைகண்டு தொழுதாள்.

(இ-ள்.) பார்வதி கங்கைக்குச் சமானமாகிய சேயாறென்கிறநதியில் காலைக்கடனை முடித்துக்கொண்டு பொன்மயமாகிய பல்லக்கிலேறிவேதகோஷமுழங்க நடந்து பகைப்படுத்து மும்மலங்களைத் தீர்க்கிற அடியார்களுடைய பாவமாகியபஞ்சமலைக்குநெருப்புமலையாய விளங்கிய திருவண்ணுமலையைப்பார்த்துச்சாஷ்டாங்கமாகச் சேவித்துக்கொண்டாள்-எ-று. (௬௮)

அறுசீரடியாசிரியவிருத்தம்- வேற்றுவண்ணம்.

வென்றிபிறைக்கவர்ந்தபொருள்புகிர்த்திறைவியலியாமெம்வேனிற்பர்

மேசுற்றிரவிபுரவிகள்போற் கடாவிடுகதேயாற்றித்தாற்றி, மந்தரமேமெனகருவித்து வழங்குகினுந் தொலையாசெனை மருதவேலி.

(இ-ள்.) எப்பொழுதும் உழுவோர்கள பதம்பார்த்து அறுத்துஅரிகளைச்சுமையாகவரித தேவேந்திரனுலகத்தோடுசண்டைசெய்ய எடுத்த மலையென்று சொல்லும்படியாகப்போர்போட்டுஆகாயவழியாகவருகிற சூரியனுடைய குதிரைகள்போலும்,கடாக்களைவிட்டுஅடித்துவைக்கோலைத்தூற்றி மந்தரகிரிபோலக்குவியல்செய்து சருவமனிதர்களுக்குங்கொடுத்தாலும் நெல்குறையாது மருதநிலத்தில்-எ-று. (௪௨)

கயலினமென்றுமதடியர்தங் கண்ணிழலைக்கண்டுகருவகயல்வந்தேறும், அயலினிவர்கொடும்புருவநிழலினைக்கண்டேசிலையெனறஞ்சிமீளும், மயலுதவுமாவதனந்தாமரைப்போதெனமருவி வண்டுசேரும், இயலும் வாசிநிழல் சண்பகப்போதெனவெருவியிரியல்போகும்.

(இ-ள்)வயலிற்களையெடுக்கிற பள்ளத்திகளுடைய கண்ணிழலைக்கண்டு சேற்கண்டைகள் நமமினமென்றுவந்துசேரும், பின்புஅருகில அவர்களுடைய புருவநிழலைப்பார்த்து வில்லென்றுபயப்பட்டோடும்ஆசையைக்கொடுக்கிற அவர்களுடையமுகத்தைத்தாமரைப்பூவென்று நினைத்துவண்டுகள்வந்துசேரும்-அதன்பின்பு அவர்களுடைய நாசியினிழலைப்பார்த்துச் சண்பகப்பூவென்று ஓடிப்போகும்-எ-று. (௪௩)

பெரும்பழனத்துழத்தியர்தங்கணைககாலை வராலெனப்போய்ப் பிடித்துப்பள்ளர், திருமபவுமங்கவர்புறங்கால் கமடமெனப்பிடி மருதத்திணைகடோறும், குரும்பையெனுமுலைச்சியர்கண்முகத்தினுக்கும் விழியினுக்குக்குலைந்தோமென்று சுரும்பினுடன்கலுழவன போற்றுமரையுங் குவளையுந்தேன் சொரியுமாதோ.

(இ-ள்.)பெரியவயல்களிற களையெடுக்கிற பள்ளத்திகளுடையகணைக்காலை வரால்மீனென்று பள்ளர்பிடித்து வெட்கத்தையடைந்துமறுபடியும அவர்பெண்களுடைய புறங்காலையாமையென்றுபிடிக்கு மருதநிலந்தோறுமதென்னங்குரும்பைபோன்றமுலைகளையுடைய பெண்களதுமுகத்திற்கும், கண்ணுக்குந்தோற்றுப்போனோமென்று வண்டுடனே சொல்லியழுகிறதுபோல்தாமரைப்பூவும,நீலோற்பலமும்,தேனைச்சொரியும்-எ-று. (௪௪)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

நீழலையுஞ்சுளிக்குமேதி நெடும்புனல்குடையவன்ன
மழலைவண்டானத்தோடு மருதவண்டானத்தோடு
மழலவிரமணிப்பூண்பள்ள ரரிகிணைக்கிசையவூதுங்
குழலிசையறுகான்மாதர் குழலிசையறுகாற்கூட்டம்.

(இ-ள்.) எருமைகீரிலேபோய் விழுந்துகலக்க அன்னம் இளமையாகிய நாரையுடனே மருதநிலத்தில் வளம்பொருந்திய தானத்தையுடைய சோலையில்ஓடும் பிரகாசம்பொருந்திய இரத்னாபரணங்களையுடைய பள்ளர்கள் அடிக்கின்ற அரிகிணையென்னும்வாத்தியத்திற்கு இசையும்படியாகஊதுகின்ற புல்லாங்குழலிசை இல்லாதபோது பெண்களுடைய கூந்தலிற்பொருந்தியவண்டுகள் இசையும்படியாகவூதும்-எ-று. (௪௫)

மூசுவண்டினங்களெல்லா மூடிந்தசங்கிலிகளாகக்
காசுசெற்கதிர்களெல்லாங் கன்னசாமரைகளாகத்
தேசுவாய்க்கவளம்பெற்றுத் தேறுகப்பாகைச்சிந்தி
வாசவன்களிறுபோலுமருதம்வீற்றிருந்தமாதோ.

(இ-ள்.) ஒழுங்காய்மொய்த்துக்கொண்டிருக்கிற வண்டுகூட்டங்கள் சங்கிலியாகவும், இரதம்போலு செறகதிர்கள்சாமரைபோன்றதா பிரகாசம்பொருந்த வளப்பம்பெற்றென்கிறபொருளைச்சிலேடை கொடுக்கும்-அழகியவாயினாலே கவளம்பெறுதலாலும், பருவங்கொண்டதேனாகிய அமிர்தத்தைச்சிந்தியென்னும் பொருளைக்கொடுக்கும் தேறித தன்கண்ணிருக்கின்றபாகனைத் தள்ளிக்கொள்ளுதலாலும், தேவேந்திரனேறுகின்ற ஐராவதமென்னும் யானைபோல மருதநிலம் வீற்றிருந்தது-எ-று. (சுசு)

தேசுவாய்க்கவளம்பெற்று என்றதைப் பிரகாசம்பொருந்தவளப்பங்களைப்பெற்று என்றும் யானைக்குப்பிரகாசத்தையுடைய கவளம் பெற்று எனப்பொருள்கொள்க-தேறுகப்பாகைச்சிந்தி என்றதை சிறந்த தேனாகிய அமிர்தத்தைச்சிந்தியென்றுகொண்டு யானைக்கு தேறித்தன் கண்ணிருக்கின்றபாகனைத்தள்ளியென்றுகொள்க.

தரவு- கொச்சகக்கலிப்பா.

பண்ணார்கமலப் பழனப்பதிநீங்கி
மண்ணோர்போற்றும் வடவீதியிற்குறுகி
யண்ணாமலையா னடிக்கமலஞ்சென்றுதொழ
விண்ணார்கொடிநெடுந்தேர் வீதிகளின்மேவினள்.

(இ-ள்.) வண்டுகளிசைபாடாநின்ற தாமரைப்புஷ்பங்களையுடையமருதநிலத்தைவிட்டுநீங்கிப் பூலோகத்தாரவணங்குகின்ற வடக்குவீதியிலெழுந்தருளி அருணாசலேசருடைய பாதாரவிந்தங்களைத்தப்பாமல்வணங்க ஆகாயத்தையளாவியகொடிகளையுடைய தேரோடுகின்றகிழக்கு வீதியிலவந்தாள் பார்வதி-எ-று. (சுஎ)

கலி விருத்தம்.

உச்சகோபுரத் துச்சிமேவிலோர்
வச்சிரத்தினன் மதியின்மாசுபோம்
வச்சிரமணிச் செம்மையால்தினன்
பச்சைமாவெலாம் பவளமாகுமே.

இ-ள். யாவரும்விரும்பப்பட்டகோபுரத்தின துசிகரத்தினருகில்சந்திரன்வரும்போது அக்கோபுரத்தில் இழைக்கப்பட்டிருக்கிற வைப்பற்ற வச்சிரங்களினாலே தனதுகளங்கத்தை நீங்குவான் இன்னும் அக்கோபுரத்தில் இழைத்திராநின்ற மாணிக்கங்களுடைய சிவந்தவொளியினால் அதனருகில்வரும்போது சூரியன் இரதத்திற்கட்டியபச்சைக்குதிரைகளெல்லாம் பவளக்குதிரைகளாகத்தோன்றும்-எ-று. (சுஅ)

வேற்றுமேறுசேர் மேடைமீதினும்
போற்றுகார்மதிற் புரிசைமீதினும்

இங்கிவன்செல்போதி விளக்தருப்பைகொய்துமுனி
புங்கவர்கள்சூழாது வருமுனிவன்பூத்தலர்ந்து
துங்கவனக்கற்பகம்போ ன்றுதலைவிதவனங்
கங்களவனமல்லவென்றுசநகையுற்றுநோக்கினான்.

(இ-ள்) இந்தப்பிரகாரம்சதானந்தா போகிறபோது இளமையாகிய த வத்தைச்செய்து அநேகமுனிவர்கள்சூழக்கௌதமர் வருகிறதற்குமு ன்பே இவ்விடத்தில எல்லாவிருக்ஷங்களும் புஷ்பித்துக் கற்பகவிருட் சம்போலக்காணுகிறபடியினாலே நமமுடையவனமல்லவே இது - அரு ணாசலமென்றுசந்தேகப்பட்டுப்பார்த்தார்-எ-று. (௫௧)

இத்தலத்தில்வந்தவா றென்றுரைத்துமாதவற்குப்
பதத்தருவந்த முனியும்பாராசரனு
மத்திரியுமப்புதமை யாராயுமெலலையிற்றன்
புதல்வனைக்கண்டேவா வென்னபுகலென்றான்.

(இ-ள) இந்தஇடத்தில்வந்த பெரியோர்கள்யாரென்றுவிஷ்ணுவுக்கு பாதத்தாமமிருகாச் சாபங்கொடுத்தபிருகுரிஷியும், பாராசருமம, அத்திரி யென்பவரும், அபபுதமைவிசாரிக்குமிடத்தில் தம்முடையபிள்ளை ச தானந்தனைக்கண்டு இவ்விடத்திலுண்டாகியவிசேஷம்என்னவென்று கேட்டார்கௌதமர்-எ-று. கலிவிருத்தம். (௫௨)

தாதையிவைகேளிறைவர்தங்களையளிக்குஞ்
சோதியிவணெய்தினனைத்தொழுதுசொன்னா
னாதமறைதேடுமவனங்குடிசைமேவற்
கேதுதவமேதுதவ மேதுதவமென்றான்.

(இ-ள.) சதானந்தனானவர் தன்தகப்பனாராகியகௌதமனைப்பார்த்து பிரம்மாமுதலாகிய ஐவரையுந்தன்னிடத்திலுண்டாகிய தேஜோ மயமாகியபராசத்தி இவ்விடத்தில்வந்திருக்கிறாளென்று வணங்கிச்சொ ல்ல நாதசொரூபமாகிய வேதங்கள்தேடுதற்கரிய அம்மைநமமுடையகு டிசையில்வர என்னதவம்செய்தோமென்றார்கௌதமர்-எ-று, (௫௩)

ஓடினனிணைத்துமக னுச்சியைமுகந்தா
னாடினன்மகிழ்ச்சியெனு மாழ்கடல்புகுந்தான்
வாடினனெடுந்தருப்பை பார்மிசையெறிந்தான்
வீடினதுநந்தம்வினை வேரினுடனென்றான்,

(இ-ள்) கௌதமர்இந்தவார்த்தையைச்சொன்ன சதானந்தனைக் கட்டி யணைத்துஉச்சிமுகந்து ஓடினார்திருக்கூத்தாடினார்சந்தோஷமென்கிறசமு த்திரத்திலாழ்ந்தார் வாடினார்தருப்பையைப் பூமியிலேயெறிந்துவிட்டா ர என்னுடையபாவம்வேருடனேகெட்டுப்போயிற்றென்றுசொன்னார்-

அத்திரிமுதற்றலைமை யந்தணர்களெல்லா
கைத்தலமெடுத்தனர் நடித்தனர்களிப்பால்
வித்தகியிருக்குமிட மேவியெதிர்கண்டார்
பத்திவலையிற்படு பதங்களில்விழுந்தார்

(இ-ள்) அத்திரிரிஷிமுதலாகத் தலைமைபெற்ற ரிஷிகளெல்லாம் இர ண்டுகைகளையுந் தலைமேல்வைத்துக்கூத்தாடினார்கள் சந்தோஷத்துட

னே பார்வதியிருக்கிற இடத்தையடைந்து எதிரேகண்டு பத்தியாகிய வலையிலே அகப்பட்டுக்கொள்ளுகிற பார்வதியினுடைய பாதத்தில்வீழுந்து நமஸ்கரித்தார்கள்-எ-று ௬௩

நின்னிலைமைகன்னியிறை நீள்பிரமசாரி
என்னுமுறையன்றுமுத லின்றுவரையெல்லா
முன்னிடையுதித்துல குயிர்த்தொகைக்கெல்லா
மன்னையெனுமுன்பெருமை யாரறியவல்லார்

(இ-ள்) தாயேநீயோகன்னிகைசுவாமியோ நித்தியபிரமசாரியென்று சிருஷ்டிதொடங்கி இதுவரைக்கும்வேதங்களெல்லாஞ் சொல்லிக்கொண்டிருக்கின்றதுகளா அப்படியிருக்க உன்னிடத்தில் உலகங்களிலிருக்கின்ற எல்லாவுயிர்களுந்தோன்றித்தாயென்றுசொல்லும் அப்படிப்பட்ட பெருமையை ஆரறியப்போகிறார்கள் எ-று ௬௪

நித்தனைமுதற்றருவை நித்தனதிடத்தே
சத்தியெனநீவருவை சத்திசிவமென்றே
இத்தகைமைகொண்டுயிர்கள் யாவையுமளிப்பா
யத்துவிதமாகுமுனை யாரறியவல்லார்

(இ-ள்) நித்தியமாகவிருக்கிற சிவனை முதலில் உண்டாக்குவாய் அந்தசிவனிடத்திலே சத்தியாகவருவாய் சத்திசிவமென்கிற தன்மையைக்கொண்டு உயிர்களையெல்லாம்பெறுவாய் அத்துவித சொரூபமாகிய உன்னையாரறியப்போகிறார்கள்-எ-று ௬௫

மெய்ப்பொருண்மகேசனரன் வேதனரியாலும்
மைப்பருமகேசியுமை வாணிதிருவாலை
இப்படியுமன்றியவ னெப்படியெடுத்தா
னப்படியுமானவுனை யாரறியவல்லார்

(இ-ள்) பரமசிவனானவர் மகேஸ்வரர் உருத்திரர் - பிரமா-விஷ்ணு ஆனால் நீ மகேஸ்வரி-உருத்திரி-சரஸ்வதி-லட்சுமியாகிய சத்திகளாய் இப்படியுமல்லாமல் அந்தச்சிவன் எப்படிப்பட்ட உருவங்கொண்டாரோ அதற்குத்தகுந்த உருவங்கொளவாய் உன்பெருமையை ஆரறியவல்லவர்கள்-எ-று ௬௬

நெஞ்சுருகிமாதவர்க ணின்றிவைபுகழ்ந்தார்
வஞ்சியிடைகோதமனும் வந்தனன்வரும்போ
தஞ்சலிபுரிந்தன னதற்குமுனமேமின்
கஞ்சமலரன்னவிரு கால்களில்விழுந்தான்

(இ-ள்)மகாதவத்தையுடையரிஷிகளெல்லாம் நெஞ்சுருகி நின்று இப்படிதோத்திரஞ்செய்தார்கள் அந்தச்சமயத்தில் பார்வதி சமீபத்தில் கௌதமர்வரும்போதே இரண்டுகைகளையுந் தலையிலேவைத்துக்கூப்பி தாமரைமலரையொத்த அம்மனது இரண்டுபாதத்திலும் நமஸ்கரித்தான்-எ-று

அன்பினுயர்கோதமனு மன்னையைவணங்கி
யின்புறவரைப்பனைய னெண்டிசைபரப்போர்

தன்சிரமிதிக்கரிய தாளிணைகளின்றென்
புன்றுடில்மிதிக்கவென புண்ணியமுடித்தேன்

(இ-ள்) பகதியினாலேஉயர்ந்த கௌதமரிஷியும்பார்வதியம்மனைவணங்கிச்சொல்வான் பிரமாஅஷ்டதிக்குப்பாலகா சிரசிலேவைத்தற்கு அருமையான பாதமிரண்டு மடியேனுடைய புன்மைபொருந்திய சிறுவீடு மிதிக்க என்னபுண்ணியம் செய்தேனோ-எ-று ௬அ

இந்தமொழிசொற்றவு மிளங்கொடியுமவேலன்
றந்தியினிடசென்றிடுவணங்கதுதவிர்ந்தால்
சிந்தையதின்முன்னிடையில் வந்துகுறைதீர்வேன்
மைந்தவெனவோதினன் மறுத்துமிவைசொல்வாள்

(இ-ள்) இந்தவார்த்தையைச்சொன்ன அளவில் இளமையாகியகொடிபோன்ற அம்மையும், பிள்ளையாகிய கௌதமனே எனக்கோர் குறைவந்தால் சுப்பிரமணியனிடத்திலும் கணபதியிடத்திலுஞ் சென்று தீர்த்துக்கொள்வேன் அவ்விடம்விட்டால் என்பேரில் அன்பு வைத்த உன்னிடத்தில்வந்து தீர்த்துக்கொள்வேனென்று சொல்லி மறுபடியுஞ்சொல்வாள்-எ-று ௬௯

நாயகன்மொழிந்திட நடந்தபடியெல்லாம்
பாயிரமெனும்படி பகர்ந்தனளவர்க்குத்
தாயிவைமொழிந்தளவினிற்சதமகற்கன்
றாயிரம்விழிதந்தி ளளித்தமுனிசொல்வான்

(இ-ள்) பரமசிவனானவர் சொன்னபடி பூமியில்வந்து தானடந்தசமாசசாரமெல்லாம பாயிரத்தோடுகூடிய நூல்போல முறையாகவிரித்து எவருக்குந்தாயாகிய பார்வதிசொன்னபோது முன்காலத்தில் தேவேந்திரனுக்கு ஆயிரங்கண்ணுண்டாகச் செய்த கௌதமர்சொல்வார் என்றவாறு ௭௰

இத்தலமுதற்றலமிதன்பெயர்தலேச்ச
முத்தமயிதிற்றரு மொன்றுபலவாகும்
மெய்த்தவமியற்றியிடில் வெள்விடையின்மேல்வந்
தத்தனுமிடப்புற மளித்தருளுமென்றார்

(இ-ள்) இத்தஸ்தலம் முதன்மையானஸ்தலம் இதனுடையபேர் தலேச்சரம் இதுமிகவு முத்தமமானது இதில் ஒருபுண்ணியத்தைச்செய்தால் ஒன்றுபலவாய் விருத்தியாகும் இதிலிருந்து கொண்டு நீமெய்மையாகிய தவஞ்செய்தால் வெண்மைபொருந்திய ரிஷப வாகனத்தின்மேலெழுந்தருளிப்பரமசிவன் உனக்குஇடப்பாகம்கொடுப்பரென்றார் கௌதமர்-எ-று ௭௧

மாலயன்வசுக்கண் மகவான்முனிக்கணத்தோர்
சாலைகள்சமைத்ததில் தனித்தவமுடித்தார்
காலமிடகன்றுசெயல் கைப்பலமிதென்றான்
மூலமுதல்வல்லியு முடிப்பணிதுவென்றாள்

(இ-ள்) வாராய்அம்மையே விஷ்ணுபிரமா அஷ்டவசுக்கள் தேவேந்திரன் அனேகமுனிவர்கள் அவரவர்கள் இடஞ்செய்துகொண்டு ஒப்பற்றதவஞ்செய்து நினைத்தகாரிய முடித்துக் கொண்டார்கள் நீவந்த

காலமுமிடமுநன்மையாகும் இவ்விடத்தில் நீதவஞ்செய்தால்கைப்ப லமாகி முடியுமென்று கௌதமர்சொல்ல எல்லாப்பொருளுக்கு மூலமாகிய அம்மனுந்தவஞ்செய்து என்கருத்தைமுடித்துக்கொள்ளுகிறேனென்றாள்-எ-று ௭௪

எண்சீரடி ஆசிரியவிருத்தம்

கோதமனேமுதலாய முனிவர்க்கெல்லாங் குளிர்ந்தமொழி பு ந்துவிடை கொடுத்துச்சோணபூதரமாமதன் குணபாற்பன்னசாலை நிதமைப்பித்தகமகிழ்ந்து புறம்புகாக்க, மாதரொழு வயிரவரைத்து நா லுபாலின் வாயிலையெண் வயிரவர்கண் மகிழ்ந்துகாக்க, வாதரவினிரு த்திமைந்தர் மருங்குகாக்க வந்தரியுட்புறங்காக்க வமைத்தாள்மன்னே

(இ-ள்) கௌதமாமுதலான முனிவர்க்கெல்லாம் பிரியவசனஞ்சொல்லி உத்தரவுகொடுத்து அருணாசலத்துக்குக் கிழக்குப்பக்கத்தில்பன்னசாலை புதிதாகச்செய்வித்து சத்தமாதர்களைப் புறக் காவலாகவைத்து நான்குவாசலையும் எட்டுவயிரவர்களைக்காக்கவும் விநாயகர் சுப்பிரமணியர் தன்இரண்டுபக்கமுங்காக்கவும் துர்க்கை உட்பக்கங் காக்கவுஞ்செய்தாள் பார்வதி-எ-று ௭௫

கொந்தளகஞ்சடைபிடித்துவிரித்துப்பொற்றோட் குழைகழுத்தி ற்கண்டிகையின் குப்பைபூட்டி, யுந்துமாவுரிகிர்ப்பட்டாடைநீக்கியுரித் தமாவுரிசாத்தியுத்தூளத்தால், விந்தைதிருநீறணிந்து கனற்குட்காய்ந் துவிளங்குமூசியிலொருகால்விரலையூன்றி, அந்திபகலிறைபதத்தின் மனைதையூன்றியரியபெருந்தவம்புரிந்தாளகிலமீன்றாள்

(இ-ள்) புஷ்பங்களைத்தரிக்கின்ற கூந்தலைச் சடைசெய்து விரித்துத் தோள்கழுத்து காதுகளில் ருத்திராட்சமாலைகளைத்தரித்து ஆடுகின்ற பாம்புரிபோலிருக்கிற பட்டாடை யுடுத்துகிறதுவிட்டு மாவுரிதரித்து செயத்தைக்கொடுக்கின்ற விபூதியைச் சருவாங்கமுந்தரித்து நெருப்பில்காய்ந்து பளபளவென்று பிரகாசிக்கும் ஊசியில் ஒருகால்பெருவிரலையூன்றிக்கொண்டு இராப்பகலாக மனதிலே பரமசிவனைத் தியானமாகநிறுத்தி அரிதாகிய பெரியதவத்தைச்செய்தாள் உலகத்தைப்பெற்ற பார்வதியம்மன்-எ-று ௭௬

இளைத்தகொடி மருங்குவளைந் தெரியினுப்ப னினியதவ மியற்று தலைகண்டிளைத்துவாடிக் களைத்துமனந்துடித்துவிழி புதைத்துவாணி கண்ணீரின் மூழ்கினாள் கமலத்தாளும், முளைத்துமனந் தளர்ந்த ழுதுவிழுந்தாண்மற்றையுயிர்களெல்லாங்கரைந்துகரைந்துருகாநின்ற, வளைத்துவளைத்துரைப்பதென்றாய் வருந்துமானால் வயிற்றினுள்ள கருப்பமெல்லாம் வருந்திடாதோ

(இ-ள்) மிகவுஞ்சிறிதாகிய கொடிபோன்ற இடையானது வளைந்து அக்கினிமத்தியிலே இனிமையான தவத்தைச்செய்கிறதைப் பார்த்துப் பார்த்து இளைத்துவாட்டத்தையடைந்து களைத்துமனதுதுடித்து இரண்டுகண்களையுமூடிக்கொண்டு சரஸ்வதியானவள் கண்ணீரால்மூழ்கினாள் இலட்சுமியானவள் மனதுவருந்திச் சஞ்சலப்பட்டு அழுது விழுந்தாள் மற்றசீவராசிகளெல்லாம் மனங்கரைந்து உருகியதுகள் நாவிலைப்பிரித்துச் சொல்லவதினால் என்னபயன் தாயானவள் வருந்து

வாளாயின் வயிற்றிலுள்ளகருவாகிய சீவனெல்லாம் வருத்தத்தை ய டையாதோ-எ-று ௭௫

முன்பனியிற்கருகுபடாக்கமலம்போல முகநதோன்றப் பனிகய த்துண் மூழ்கிநிற்கும், பின்பனியிலதிசீதவிடத்திற்சேரும்பெருமலமு க்குணமீனென்னப் பேணிநிற்கும், அன்பனிடம் பெறுமளவு மிது ரால் வேண்டு மரியதவமபுரிந்தனளவவிடத்துவேந்தன், வன்பனி ற்றுயினை மீமான்முதலாந் தேவர்மறைபுகுந்ததவச சாலை மருங்கிற் சார்ந்தார்

(இ-ள்) முன்பனிக்காலத்திலே கருகிப்போகாத தாமரைப்பூப்போ லமுகமாத்திரந்தெரியக்குளிரசசிபொருந்திய தடாகங்களிலே நின்றும் பின்பனிககாலததிலே அதிகசீதளம்பொருந்திய இடத்திலேயிருந்தும மழைபெயகிறபோது அதில் ஒருமீன்போலச்சஞ்சலப்படாது நின்றும் பரமசிவன் இடப்பாகததைப் பெறுகிறவரைக்கு மிதுபோலவேண்டி யதவததைசசெய்தாள் அநதவிடத்தில் பிரமதேவனும வலிய சர்ப்பத தில நித்திரைசெய்கின்ற விஷ்ணுமுதலாகிய தேவர்களும் தேவகோ ஷ்டம்பொருந்திய தவச்சாலையைவந்து அடைந்தார்கள்-எ-று ௭௬

அந்தரியுமாயவனா முதலாந்தேவ ரனைவருக்கு முபசார மளித் துநீங்கள், வந்தவாவியம்புமென மகிடனுலேவருந்தியதுந் தளாந்ததுவும் வகுத்துச்செ ன்னா, சுந்தரியுங்குமரியுடன் சுடரும்வாளாற்று டுகளதின் மகிடனுாநதொலைப்பாயென்றாள், விாதையதுபுரிவனெ னப் பணிந்தாளன்னை விளம்புதல்கண் டகமகிழ்ந்து விடைகொண் டாரே

(இ-ள்) பார்வதியானவள் விஷ்ணுமுதலான தேவர்களெல்லாருக்கு முபசாரஞ்சொல்லி நீஙகளிவ்விடததிறகுவந்தவகைசொல்லுங்களென றுகேட்க அவர்கள் மகிடாசுரனுலே தாங்கள்துன்பப்பட்டுத் தளாசசி யண்டந்தவகை விபரமாசச்சொன்னுர்கள் அதற்குப்பார்வதியானவள் துர்க்கையைக்கூப்பிட்டு நீகததியினுலே யுததகளததிலே மகிடாசுர னவல்லமைகெடக் கொன்றுவிடென்றுசொன்னுள் அதற்குத் துாக்கை அப்படியே செய்வேனென்றுபணிந்தாள்தாயாகியபாாவதி இந்த வார்ததையைசசொன்னஅளவில் விஷ்ணுமுதலானவர்கள் சநதோஷ த்தையடைந்து வணஙகி விடைபெற்றுகெகொண்டாாகள் எ-று ௭௭

கலிவிருத்தம

கோதமாச்சிரமந் தனனிற்கோல்வலே

தீதில்ததவஞ் செயததுசெப்பினேன்

மேதிமாமுகற் காய்ததும்வெள்விடைச்

சோதிபாகமடைநததுஞ்சொல்லுவேன்

(இ-ள்) சத்திதேவியானவள் கௌதமருடைய ஆசிரமத்தில் குறை யில்லாத தவததைசசெய்ததுசொன்னேன பிறயாடு மகிடாசுரனைக் கொன்றதும், ரிஷபவாகனத்தையுடைய சிவனுடையஇடப்பாகததை ப்பார்வதியார் அடைந்ததுஞ்சொலவேன்-எ-று ௭௮

நான்காவது-திருககண்புதைத்தசருக்கமுற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௩௩௨.






சிவமயம்.

ஐந்தாவது

பார்வதியார்

# இடப்பாகம்பெற்றசருக்கம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

அஞ்சனக்கிரியில்வாழு மசுரன்றனைர்க்குந்தீ
னஞ்சமேயனையானந்த நமனுக்குமனையவந்தோன்
செஞ்சிகையெரியைதீய்க்கும் தீமையானளகைநாட்டின்
விஞ்சையான்வருந்தவுள்ள வளமெலாங்கவர்ந்தவீரன்

(இ-ள்) நீலகிரியில் வாசஞ்செய்துகொண்டிருக்கிற அசுரனனவன் எல்லாரிலும அதிகபராக்கிரமத்தையுடையவன் விஷத்தினுக்குச்சமானமானவன் அந்தயமனுக்கும யமனானவன்சிவப்பாகிமேலெழுகின்ற கொழுந்தையுடைய நெருப்பைசசுடத்தகுந்த தீமையையுடையவன் அளகாபுரியில குபேரன் தரித்திரத்தையடைய அங்கேயிருக்கிறவளங்களெல்லாங் கொள்ளையிட்டவன்-எ-று

தாமரைக்கண்ணன்றங்கு மாவினைத்தலைவால்கூட்டி
மாமணிக்கவண்போற்கொள்வன் வானிலாகசத்தைவாங்கி
வேமழற்குஞ்சிமைந்தர்க் குதவுவன் விமானத்தோடே
சோமனைப்பிடித்துக்கையாற் பிழிந்தமுதருந்துஞ்சூரன்

(இ-ள்) விஷ்ணுவித்திரைசெய்கிற ஆதிசேடனைத்தலையையும், வாலையும் ஒருகையினாலே சேர்த்துப்பிடித்து அதன் சிரமணியைக் கவணிலாகவெறிந்து விளையாடுவான் அக்கினியைத்தனிவிட்டு அவனேறுகின்ற ஆட்டை நெருப்பைப்போல சிவப்புமயிரையுடைய தன்பிள்ளைகளுக்கு ஏறக்கொடுப்பான் சந்திரனை அவனேறுகிறவிமானத்தோடே கையினாலே பிடித்துப்பிழிந்து அவனுடம்பிலிருந்துவருகிற தேவாமிர்தத்தைப்பானம்பண்ணுகிறசூரன்-எ-று ௨

கருகியமகவான்வெள்ளைக் களிற்றின்மேற்றிரிவன்பின்னைப்
பரிதிதேர்த்தனிப்பசசைப் பரிசெலப்பவனிபோவா
னிருதியைச்சுமக்குமாளி யேறுவனினைக்கின்மூழ்கிக் வான்
குருதிகொப்பளிக்கும் வாளோன் றெடுத்துயிரனைத்துங்கொல்

(இ-ள்) உயர்வாக நினைக்கப்பட்ட தேவேந்திரனுடைய வெள்ளையானைமேல் திருவோலக்கம்வருவான் சூரியனுடைய தேரிலேறிக்கொண்டு பச்சைக்குதிரைகளேழும் நடக்கப் பவனியாகப்போவான் நிருதியைச் சுமக்கின்ற ஆளியின்மேலேறிக்கொள்வான் நிணங்களாலே மூழ்கப்பட்டு இரத்தங்களைக்கொப்பளிக்கும் ஒருவாளாயுதமெடுத்து சருவத்திரசீவஜந்துக்களையும் கொல்வான்-எ-று ௩

அன்னவன்மகிடமான வாழ்திறலஞ்சிக்காலத்
தென்னவன்மகிடமேறுன் காலினாறிரிந்தானென்று
லென்னவன்கொடுமைநம்மா லியம்பலாமிலகுஞ்சோதி
மன்னவன்கிரியைச்சாய்த்தான் மீனுக்காவாரிதூர்த்தான்

(இ-ள்) அப்படிப்பட்டஅசுரன் எருமைமாட்டுமுகத்தையுமுடையவனானபடியினாலே தெற்குத்திக்கிலிருக்கின்ற யமனானவன் எருமைக்கடாவின்மேலேறுமற் காலினால்நடந்து திரிந்தானென்றால் அந்த மகிடாசுரனுடைய கொடுமை நம்மாலேயப்படிச்சொல்லக்கூடும் சோதிசொரூபமாகிய சிவனிருக்கிறகைலாயத்தையுஞ் சாயச்செய்தான் மீனை வேண்டியதற்காகச் சமுத்திரத்தையுந்தூர்த்தான்-எ-று ௪

மயனெனுந்தச்சன்செய்த மகிடமாபுரத்திலன்று
னயனறுகரிசிநல்க விருக்குநாளவனுக்காய
பயனுறுநுகர்ச்சிவேண்டி யாயிரம்படைக்கையாளர்
கயமுதல்விலங்கைநாடி வேட்டையாக்க னிறசென்றார்

(இ-ள்) மயனென்கிற தேவதச்சனால் இரத்தினகசிதமாகச் செய்யப்பட்ட மகிடபுரத்தில் அந்தஅசுரன் பிரமாவானவர் நித்தியம் அறுகும் அட்சதையுங்கொடுக்க வாழ்த்துக்கொண்டிருக்கிறநாளில் அந்த அசுரன் தின்னுகிற மாமிசத்துக்காக ஆயுதபாணிகளாகிய ஆயிரம் பேர்கள் யானைமுதலாகிய மிருகங்களைத்தேடி வேட்டைமார்க்கமாகக் காட்டுக்குப்போனார்கள்-எ-று ௫

தானவர்சென்றுவஞ்சிதவஞ்செய்கானகத்தைச்சூழ
வானவர்பணியுமட்டவயிரவரொகைதந்தாரால்
போனவாறிர்தவாறுமபுரிசூழற்றவருநூதூத
ரானவரவுணர்கோவுக்கடிபணிந்தறிவித்தார்கள்.

(இ-ள்.) அப்படி வேட்டையாட வெளிப்பட்ட ஆயிரமசுரர்களும் ...ந்து பார்வதி தவஞ்செய்துகொண்டிருக்கிற வனத்தைச்சுற்றிக்கொ...ள அதைக்கண்டு தேவர்கள் பணிகின்றகாவலாகவிருந்து அஷ்டவயிரவர்களும் அந்தஆயிரம்பேரையுங்கொன்றார்கள் அவர்கள் இறந்துபோனதும் அம்மன் தவசுபண்ணுகிறதும் பாதத்தைவணங்கிததூதர்கள் மகிடாசூரனுக்குத்தெரிவித்தார்கள்-எ-று. ௬

போற்றிபங்கவர்கள்சொல்லப் புகைகாகைபிறந்ததங்கி
தூற்றியவிநகணண்ட கோளமுஞ்சுழன்றதங்கே
நாற்றிசையுள்ளவேழ நடுங்கியதிமையோர்கூட்டங்
கூற்றமுங்கரந்ததால காலமுங்குளிர்ந்ததன்றே

(இ-ள்) தூதர்கள்வணங்கித்தெரிவித்தஅளவில் புகையும் சிரிப்புமுண்டானது இரண்டுகண்களும் நெருப்புகளைப் பறக்கவீசியதுகள் அண்டகோளமுமகிழுங்கிறெண்றுசுழன்றது அஷ்டதிக்கிலிருக்கிறயானைகளும் தலையைத்தொங்கப் போட்டதுகள தேவர்கூட்டம நடுக்கத்தையடைந்தது யமனும்ஒளிந்துக்கொண்டான் ஆலகாலவிஷமும் குளிர்ச்சியடைந்தது-எ-று ௭

அப்படிமகிடன்சீறு மளவினிகும்பனென்போன்
செப்பிடுமுனதுகோபம் பொறுப்பரோசிறியரென்றே
முப்புடையிளநீரென்ன முலைச்சிவாழ்வனததுளாரைக்
கைப்படையதனாற்கொல்வேனெனச்சொலிக்கடிதுபோனான்.

(இ-ள்) அந்தப்பிரகாரம் மகிஷாசூரன் கோபிக்குமளவில் நிகும்பாசூரனென்கிற படைத்தலைவனவாருமையாராசனே உமதுடையகோபத்தை அற்பமாகியவர்களார பொறுப்பார்கள் என்றுசொல்லித் தென்னிளநீர் போதததனதனதையுடைய பார்வதிதவஞ்செய்கிற வனத்திலிருப்போரைக் கையிலிருக்கின்றவாளால் கொன்றுவருகிறேனென்று சீக்கிரத்தில் புறப்பட்டுப்போனான் எ-று ௮

குடதிசைக்கடலைசசீறிக் குணதிசைக்கடல்சென்றன்ன
நெடியதேர்கரிமாசேனை யெழுந்தனனிகுமபனென்போன்
வடகிரிதனக்குங்கும்ப மாமுனிமலைக்குநேரே
இடைபெருகரியமேரு வெழுந்ததாமென்னச்சென்றான்.

(இ-ள்)மேற்குச்சமுத்திரத்தின் மேற்கோபித்துக் கிழக்குக்கடல்சண்டைசெய்யப் புறப்பட்டதுபோல் பெரியதேர்களும் யானைகளும குதிரைகளும காலாள்களும் புறப்பட்டதுகள் நிகும்பாசூரனைவன் மகாமேருவுக்கும் அகஸ்தியரிருக்கின்ற பொதியமாமலைக்கு மத்தியிலே கிறைந்த ஒருபெரியமேரு எழுந்ததென்று சொல்லும்படியாகப் போனான-எ-று

### அறுசீரடியாசிரியவிருத்தம்-வேற்றுவண்ணம்

எழுந்தவனுமரகதநேர் துரககமாயிரம்பூண்டவிரதமேறி,வழிந்த கரிமதக்கடலை யெழுந்ததுகளடக்கவுமை வனத்திற்சென்றான், கொழுந்துவிடுங்கனலனையபாவரவுகணடுபலகோடி குன்றம்வீசி,தழைந்த நத்-த் தாக்கணங்குநோக்கணங்கும் பொருதெதிரே தடுத்தாரன்றே-

இ-ள் இந்தப்பிரகாரமாகிதம்பாசுரன் பச்சைக்குதிரை ஆயிரங்கட்டியதேரிலேறிக்கொண்டு அப்பொழுது எழும்பிய சிறுஅணுக்கள் முன்போகாநின்ற யானைகளின்மதஜலம் சமுத்திரமாகத் தேங்கியிருப்பதைவறச்செய்ய பார்வதிதவஞ்செய்யும் வனத்திற்குப்போனான் கொழுந்துவிட்டெரியும் நெருப்பொத்த அசுரப்படைகள்அநேகமலைகள்விட்டெறிய இவர்கள்வருகிறதுகண்டு அம்மனிடத்திலிருக்கிற தாக்கணங்கு நோக்கணங்கு என்னுமிருவரும் ஆயுதபாணிகளாகப்போய எதிரேதடுத்தார்கள்-எ-று ௰

சண்டனுருத்திரன்சோமன் கபாலிசிகர்சங்கரன் கோதண்டன் வீத, னெண்டரியசித்திராங் கதனென்னும்வயிரவர்களிருநால்வோரு, மண்டமுகடுடையநகத் தானைகளைத்தொலைத்திட்டவரிகளைபோலக், கண்டகனுஞ்சாரதியுந் தேருமன்றிச சேனையெல்லாங் கணத்திற்சாய்த்தார்.

(இ-ள்)சண்டன்ருத்திரன்சோமன் கபாலிதனக்குத்தானே ஒத்தசங்கரன் கோதண்டன் வீதன் சித்திராங்கதன்இவ்வெட்டுவயிரவர்களும் அண்டகோளமுடைபட யானைகளைக்கொல்லுகிற சிங்கங்கள்போலக்கர்சசித்துகிதம்பாசுரனும் அவன்சாரதியும்தேருந்தவிரமற்றச்சேனைகளையெல்லாம நொடிப்பொழுதிலே கொன்றார்கள். ௧௧

அட்டவயிரவர்படையா லணங்குகளாற்றனது படையழிதலைக்கி,வட்டநெடுந்தேர் முடுக்கித் தாக்கணங்கின் முகத்திலெண்ணிலவாளிகோத்தான், விட்டகணைகளைவிலக்கித தேரோட்டுஞ்சாரதியை வீழ்த்திவாளி, தொட்டகரங்களைப்பிடுங்கி யவனுயிரைக்குடித்தந்தச்சூரமாது.

(இ-ள்)எட்டுவயிரவர்களுடைய ஆயுதங்களினாலும் இரண்டுபெண்களாலும் தன்னுடையபடைமுழுவதும் இறந்துபோகின்றதைப்பார்த்து கிரும்பாசுரன் வட்டமாகிய நெடியதேரைவிட்டுக் கொண்டு தாக்கணங்கென்பவளுடைய முகத்திலேகணக்கில்லாத பாணங்களைவிட்டான் அந்தபாணங்களைவிலக்கித்தேர்நடத்துகிறசாரதியைகொன்று அம்புதொடுத்தகைகளையறுத்து அவனுடையதலையையும் அறுத்துக்கொன்றாள் தாக்கணங்கு-எ-று ௧௨

ஓடினசெங்குருதிநதியுடலிழந்துவிழுமவுணருயிர்கள் போல,வாடினவெண்குழைத்தலைக ளனுதினமுமருந்துகின்ற வலகைபோலச்-குடினர்கள்வயிரவரும் தாக்கணங்கு நோக்கணங்கும் தும்பைவாகை,வீடினர்க ளவுணரென மகிடமுகற் குரைத்தனர்போயவிரைந்துதூதர்,

(இ-ள்.) வயிரவர்களாலும் இந்த இரண்டுபெண்களாலும் தேகமறு பட்டுசிகிர்தநிறபோருமசுரருயிர்போல் இரத்தநதியானது ஓடியதுமி தமிபம்மாமிசத்தைத்தின்று கூத்தடுகிறபேய்போல்கவந்தங்கள் கூத் தாடியதுகளவயிரவர்முதலாகியவர்கள் தும்பைவாகைமாலை சூடிக்கொ ண்டார்கள் அசுரர்களிறந்துபோனார்களென்று மகிடாசுரனுக்குதூதர்கள் சீக்கிரத்தில் போய்ச்சொன்னார்கள்—எ-று. (௰௩)

கேட்டளவினமகிடமுகன் கயிடவன்றன்முகநோக்கிக் கிளத் வானோர்,காட்டிலுறைசிறுபேயுஞ் சனவருநமபெரும்படையைக் கழி கதுவென்றல,நாட்டநுகலயனரியுமெனக் கினிமேறறிறைகொடுக்க வ னுவாரோவ, நீட்டினகைபுரிந்தெழுந்தா னேறினனுயிரஞ்சரிகு ழிரத மீதில்.

(இ-ள்.) மகிடாசுரன் இந்தவார்த்தைதனைக்கேட்ட அளவில் தன்னரு கிலிருக்குங்கயிடவன் முகத்தைப்பார்த்துச்சொல்வான ஒருகாட்டிறசஞ் சரிக்கின்றசிறியபேய்களும்சனங்களும்நமமுடைய பெரியசேனைகளைக் கொன்றதுகளென்றால் சிவன்பிர்மாவிஷ்ணுமுதலானவர் ள் சொன்ன படிகேட்பார்களோவென்று அதிகமாகியநகைகொண்டு எழுந்திருந்து ஆ யிரம்யானைகளைக்கட்டியதேரிலேறிக்கொண்டான்—எ-று. (௰௪)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

பகிரொருகோடியானைப் பலத்தராய்க்காந்தநீலன்
முதுகான்குருதியண்ட னீசகன்சண்டன்முண்டன்
மதுகயிடவன்றீகண்ணன் புகைக்கண்ணன்மாலியென்றும்
தகிகொளாயிரண்டுபேருந் தேர்களைத்தூண்டிச்சென்றார்.

(இ-ள்.) மகிடாசுரன்தேரின்மேலேறினவுடனே பதிகொருகோடியானைப் பலத்தையுடையவராகியகாந்தன்-நீலன்-முதுகான்-குருதி-அண்டன் - நீசன்-சண்டன்-முண்டன்-மதுகயிடவன்-தீக்கண்ணன் - புகைக்கண் ணன்-மாலியென்று-துதிக்கப்பட்டபன்னிருவரும்தங்கள்தங்களிரதங் களைநடத்திக்கொண்டுபோனார்—எ-று. (௰௫)

கரிமுகத்தவர்நிவாத கவசர்கள்காலகேயர்
பரிமுகத்தவுணர்மேதிப் பணைமுகத்தவர்கள்பற்றி
எரிமுகத்தவுணர்சீறி யெழுமபுலிமுகத்துக்களவ
ரரிமுகத்தவுணர்வெள்ள மாயிரஞ்சென்றவன்றே.

(இ-ள்.) யானைமுகத்தையுடையவர்கள்-நிவாதகவசர்கள் காலகேயர் கள்-குதிரைமுகத்தையுடையவர்கள் எருமைமாட்டின்முகத்தையுடைய வர்கள்நெருப்பெரிந்துகொண்டிருக்கிறமுகத்தையுடையவர்கள் புலிமுகத் தையுடையவர்கள்சிங்கமுகத்தையுடையவர்களாகியஅசுரர்கூடிய ஆயிர ம்வெள்ளம்நடந்தார்கள்—எ-று. (௰௬)

பாய்பரியதனிற்பாகி பரிகளிற்கரிகள்பாகி
காய்கரியதனிற்பாகி கடும்பரிக்கொடுந்தேர்செல்லப்
பேய்கருங்கொடிகளாடப் பிணங்கிவெண்கொடிகளாட
வேயகனப்பறைகளார்ப்பக் குறுகிலன்விகதைகாணின்,

(இ-ள்.) இப்படி ஆயிரம்வெள்ளங்காலாட்கள் புறப்பட்டவுடனேஐந் நூறுவெள்ளங்குதிரையும்இருநூற்றைம்பதுவெள்ளம்யானையும் நூற்றிருபத்தைந்துவெள்ளம்தேருமாட்டகப்பேய்களும்காக்கைக்கூட்டமும்விருந்தகம்படுமென்றுகளித்துக்கூத்தாட வெள்ளைக்கொடிகளாடப்புள்ளாங்குழல்பேரிகைமுதலானதுகளமுழங்கமகிடாசுரன் அம்மனிருக்கிறகாவல்வந்துசேர்ந்தான்—எ-று. (௰௭)

அடலவன்வரக்கண்டஞ்சி யடைந்தனமைக்கபயமென்று
மடருறுமுனிவர்கூற வுமையவள்பயங்கெடுத்து
விடலுடனருகுநின்ற விந்தையைவிரும்பிநோக்கி
கடகமேந்தாண்மடிவாயென்றாள்விடைகொடுமெயர்ந்தாள்கன்னி

(இ-ள்.) வல்லமைபொருந்தியமகிடாசுரன் வருகிறதைப்பார்த்துபய ப்பட்டுஓடிவந்துபார்வதிக்கு அபயமென்றுமுனிவர்கள் முறையிட்டுச சொல்லஅம்மனானவள் அவர்களுடையபயங்களைத்தீர்த்துத தன்சமீபத் தில்நின்றபெருமைபொருந்தியதுர்க்கையைப்பார்த்து உன்னுடையகத் தியினாலேஅந்தஅசுரனைக்கொன்றுவிடென்றுசொல்ல உத்தரவுபெற்று ப்புறப்பட்டாள்துர்க்கை—எ-று. (௰௮)

ஆளிமேற்கன்னிசெல்ல வருணனாயகிமுன்செல்லக்
காளிதுந்துமிபின்செல்லச சுந்தரிகணங்கள்செல்ல
ஞாளிமேல்வடுகர்செல்ல நான்முகிமுதலாமாதர்
தாளிமேற்செல்லத்தங்கள் விடையின்மேற்றாசிசென்றார்.

(இ-ள்.) துர்க்கையானவள் ஆளிவாகனத்திலேறிக்கொண்டுபோகஅருணநாயகியென்பவள்முன்னேபோகவும்காளிதுந்துமிஎன்கிற இருவரும்பின்னேபோகவும் பார்வதியினதுகணங்களும் சுவானவாகனத்தில் வயிரவர்போகவும்அபிராமிமுதலாகியமாதரெழுவரும்தங்கள் தங்கள்வாகனங்களேறிக்கொண்டு தாசிப்படையாகத் துகளெழும்பப் போனார்கள்—எ-று. (௰௯)

சென்றிதோமரத்திற்குன்றிற் சிலைகளிற்படையிற்கையிற்
கன்றிடமகிடன்சேனைப் பாதியைக்கணத்திற்சாய்த்தார்
வன்றிறன்மகிடன்சேனைத் தலைவருமகிடன்றானுங்
குன்றெனவெதிர்த்தகன்னி படையெலாந்தாக்கிக்கொன்றார்.

(இ-ள்.) இப்படி துர்க்கைசேனைகள்போனவுடனே உலக்கையினாலு ம்மலைகளாலும்வில்முதலாகியஆயுதங்களாலும் கைகளினாலும் கோபத் துடனேபோர்செய்கிறமகிடாசுரனுடையபாதிசேனையை ஒருநொடிப் பொழுதிலேகொன்றுவிட்டார்கள்மகிடாசுரனும் அவனுடையசேனைத் தலைவர்களும்மலைபோலெதிர்த்துதுர்க்கையின்சேனைகளையெல்லாந் தாக்கிக்கொன்றுவென்றார்கள்—எ-று. (௨௰)

துந்துமிமுதலாநால்வ ரிடைத்தனர்சூலியான
சுந்தரிவராகியாறு முகத்தகடிசிரிக்கையா
ளிந்திரியமறைபாவென்னு மெழுவருமறைந்தார்ஞானி
யுததிரியிடைந்தார்கன்னி மனந்தளர்ந்தனமரியவன்றே.

(இ-ள்.) அசுரனது படைகளை நிர்த்தியுத்தஞ்செய்த அளவில் துந்துமி-காளிமதங்கி-சண்டி-என்கிறநான்கு சத்திகளுந்தோற்றார்கள்-சூலி-நீலகண்டி-வாராகி-சண்முகி-திரிக்கையாள்-இந்திரையென்கிற ஏழுமாதரும்யுத்தஞ்செய்யமாட்டாமற்காட்டிலொளித்தார்கள் சுவான வாகனத்தையுடையவயிரவர்களுந்தோற்றார்கள் ஆர்க்கையானவள் மனந்தளர்ந்துஉமாதேவியேயென்றுதியானித்துநின்றாள்—எ-று.

உறுதுணையுமையேயென்னும் பொழுதில்யோகினிகள்வானி
லறுபத்துநாலுகோடி யதிர்த்தெழுந்தழலின்மாரி
இறுதியாயசுரசேனை யிடிமழைசொரிகையாலே
குறுகியமகிடன்சேனைத் தலைவருங்கொதித்துச்சென்றார்.

(இ-ள்.) ஆர்க்கையானவள் அம்மனே துணையென்றபோது அறுபத்துநான்குகோடியோகினிகள் ஆகாசத்திலார்ப்பரித்தெழுந்து நெருப்புமழையையும்இடிமழையையும் சொரிந்தபடியினாலே மகிடாசுரனுடைய சேனைகளெரிந்துபோனதுகள் அப்பொழுதுசேனைத்தலைவர்கள்கோபித்துச்சண்டைசெய்தார்கள்—எ-று. (௨௨)

கலிவிருத்தம்.

அருசிகன்றனைச் சென்றனளாரணி
மருவுகாந்தனை மாய்த்தனள்வாரணி
காரனைவென்றனள் வேலுடைக்காரணி
நாகனுருயி ருண்டனனாரணி.

(இ-ள்.) அப்படிமகிடாசுரனுடைய சேனைத்தலைவர்கள் எதிர்த்தவுடனே அபிராமியென்பவள் அருசிகனென்பவனைக்கொன்றாள் வாரணியென்பவள் காந்தனென்பவனைக்கொன்றாள் சண்முகியென்பவள் காரனென்னும் அசுரனைக்கொன்றாள் காரணி நாகனென்னும் அசுரனைக்கொன்றாள்—எ-று. (௨௩)

சூலபாணி தொலைத்தனன்மிண்டனைக்
கோலமாமுகி சண்டனைக்கொன்றன
ளாலவூணி மதுவையழித்தன
ணீலனுருயி ரிந்திரைநீக்கினள்.

(இ-ள்.) சூலக்கையாளென்பவள் மிண்டனென்பவனையும் வராகிசண்டனென்பவனையுநீலகண்டிமதுவென்னுமசுரனையும் இந்திரை நீலனென்பவனையுங்கொன்றார்கள்—எ-று. (௨௪)

துந்துமிக்கொடி சோணிதனூனனை
தந்துமிக்கும் படிக்கதையாட்டினள்
நந்துமிக்க நிகர்க்கருணாசலை
வந்துமிக்கெரிக் கண்ணனைவாட்டினள்.

(இ-ள்.) துந்துமிக்கொடியை யுடையவள்சோணிதனூனனென்பவனைத் தலையறும்படி தண்டாயுதத்தாலடித்தாள் சக்கரத்தைக் கையிலேதரித்த அருணாசலையென்கிறசத்தி அக்கினிக்கண்ணனைக்கொன்றாள்—எ-று.

கயிடவன்புகைக் கண்ணனிருவருஞ்
செயிரின்மாளாச் சிந்தினன்சுந்தரி

மத்துமேனியோடேகூடிய அதகிமாம்போல்—எ-று. (௬௫)

வீழ்ந்தபின்பரி வேடமதாயெதிர்ப்
போர்ந்தவன்கதை கொண்டுபுடைத்தனன்
சோர்ந்தவன்கதை யுமமவன்சென்னியு
மார்த்தகங்கொண் டறுத்தனனாளி.

(இ-ள்.) அப்படிவிழுந்துஇறந்துபோனவுடனேகுதிரைமுகமாகி எதிரேவந்துதண்டாயுதத்தினாலேஅடித்தான் அடித்ததண்டாயுதத்தையும்அந்தஅசுரனுடையதலையையும்சக்கிரத்தினாலேஅறுத்துத்தன்னினது ஆக்கையும—எ-று. (௬௬)

அக்கதன்பி னழலுருவாயினன்
கங்கையாயினன் காரிருளாயினன்
பங்கயாசனனுமாயினன பங்கய
மங்கைநாயக னுமாயினன்மாயையாய்.

(இ-ள்.) அதன்பின்பு அசுரன் நெருப்புருபங்கொண்டுவந்தான் அதன்பின்புசலப்பிரளயருபங்கொண்டும் அந்தகாரமாகியும்தாமரைப் புஷ்பத்திலிருக்கிறபிர்ம்மாவாயும் இலட்சுமிபுருஷராகியவிஷ்ணுவாகியும் எதிர்த்தான்மாயையினாலே—எ-று. (௬௭)

ஈதுகண்டவ ளென்செய்வன்மாயையால்
வாதுசெய்தன னென்றுதளர்ந்துமை
பாதநெஞ்சினிற் பற்றினள்பற்றிய
போதிலோர்மொழி விண்ணிறபுகன்றதே.

(இ-ள்.) அப்படிஅசுரன பலபலருபங்கொண்டவுடனே பார்த்து மாயையினாலேயுன்பப்படுத்துகிறான்என்னவுபாயஞ்செய்தாலும்சாகிறதில்லைஇதற்கென்னசெய்வேனென்றுதுர்க்கையானவள் பார்வதிதேவியினுடையஇரண்டுபாதத்தையும்மனதிலேதியானித்தாள் அப்படிதியானித்தவுடனே ஆகாயத்தினின்றும் அசரீரிஒருவாக்கியஞ் சொல்லியது—எ-று. (௬௮)

மாயவேடங்க ளன்றிமகிடமே
மாயபோதி லவன்றலைத்தள்ளியே
தூயதாளின் மிதிக்கற்றொலைந்திடு
மீயமாயையெனச்சொலத் தேறினாள்.

(இ-ள்.) அநேகவிதமானமாயவேஷங்களல்லாமல்சுபாவமான எருமைமுகருபங்கொண்டபோதுஅவன்தலையைஅறுத்துஅகற்றிமேதள்ளி உனதுடையபரிசுத்தமாகிய காலினாலேமிதித்தால் தீமைபெருந்திய மாயைதொலைந்துபோமென்றுசொல்லத்துர்க்கையம்மன்தேறினாள்-எ-று.

மட்டின்மாயை வடிவின்மலைந்துபின்
னெட்டிலைத்தலைச் சூலத்தினிக்கினாள்
துட்டன்மேதிய தாய்ப்படைதொட்டனன்
வெட்டிவீழ்ந்தத யடியின்மிதித்தனள்.

(இ-ள்.) அளவில்லாத மாயருபங்கொண்டுவோ செடுமைபொருந்திய அவனுடைய சூலத்தினாலேகுத்திக்கொன்றான் பின்பு அந்தத்துஷ்டன் பழைய எருமைக்கடாமுகத்தை யுடையதனுகிஆயுதங்களைப்பி

ரயோகஞ்செய்த அளவில் அதகளைவிலக்கி வாளாயுதத்தால் தலையை வெட்டிததள்ளிக் காலினலேமிதித்துக்கொன்றாள் துர்க்காதேவி எ-று.

ஒப்பிலாபபத மூன்றுமிதித்திடில்
தபமோலைய தவிர்ப்பதுபாரமோ
வப்பதத்தை நினைக்கினுமாணவஞ்
செப்புகாமிய மாயையுந்நீக்குமே.

(இ-ள்.)துர்க்கையம்மன்பாதத்தைநினைத்தாலும்அதைநினைததவருடைய ஆணவமாயை காமியமென்கிற மும்மலங்களையும் நீக்கிவிடும் அப்படிப்பட்ட ஒப்பில்லாதபாதம் பரிசமாகும்படி மஹிஷனை மிதித்தால் பொய்யாகிய மாயைமாததிரந் தவிர்ப்பதுபெரிதோ—எ-று. (௬௧)

போதவாணவர் பூமழைபெய்தனர்
மேதிமாமுகன் மெய்க்கதியுற்றனன்
நீதிலாவவன் செங்களந்தன்னிலோர்
சோதிலிங்கமிருந்ததுதோன்றவே.

(இ-ள்.)தேவர்கள்மிகவும் புஷ்பவருஷம்பொழிந்தார்கள்மஹிடாசுரனும் அம்மன்கையினுலிறந்ததினுலே மெய்ம்மையானமோட்சத்தைச்சேர்ந்தான் யாதொருகுற்றமுமிலலாதஅவனதுசிவப்பாகிய கண்டத்திலே ஒருபடிசலிங்கமிருந்தது—எ-று. (௬௨)

கண்டமட்டிலக் காக்கொளக்கர்கவ
கண்டமட்டிற் புறந்தகடாமகன்
கண்டமட்டிலிருந்தகடவுளைத்
கண்டமட்டியெடுத்தனள்கன்னியே

(இ-ள்) நவகண்டமட்டும் ஆண்டமஹிடாசுரனுடையகழுத்தைச்சேக்காகவைத்துத் துர்க்காதேவி அறுக்கஅந்தக்கழுததிலிருந்தபடிகலிங்கத்தை கண்டபோதே கையினுலெடுத்தாள்—எ-று. (௬௩)

கொண்டுசென்றுமை கோகநகப்பதங்
கண்டுபோற்றிகடவுளையீந்தனள்
வண்டுவார்குழல் வாங்கினள்செங்கையை
அண்டர்நாயகன் விண்டலனுங்கையால்.

(இ-ள்.)அப்படிப்பட்டபடிகலிங்கத்தையெடுத்துக்கொண்டுபோய் உமாதேவியினதுபாதங்களைத்தொழுதுநடந்தகாரியமெல்லாஞ்சொலலி. த்சுவாமியைக்கொடுத்தாள வண்டுகளசூழ்ந்திருக்கின்ற கூந்தலையுடையபார்வதியம்மன் கையினுலேவாங்கினுள்தேவர்களுக்கெல்லாம்நாதராகவிருக்கின்றசுவாமியும் அம்மன்கைமேல் வைத்திருக்கிற ஆசையினுலே கையைவிடாமற கெட்டியாகஇருந்தார்—எ-று. (௬௪)

தாயுமந்தது கண்டுமகிழ்ந்திறை
ஞயவெங்காம பற்றியதெனை
வாலையங்கை புதைத்துமகபதிக்
காயிரக்கண் ணளிததவன்கூறுவான்.

(இ-ள்)பார்வதியாமவள் அந்த ஆச்சரியத்தைப்பார்த்து மகிழ்ச்சியடைந்துசுவாமிபூனாடீன்கையைவிடாமலிருந்தது எதனுலேயென்

றிகேட்கந் தேவேந்திரனுக்கு ஆயிரங்கண்கொடுத்த கௌதமரானவர் வாயைக்கங்கையினாலே பொத்திக்கொண்டு அம்மனுக்குச் சொல்லத்தொடங்கினார்—எ-று. (௬௫)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

முன்னகத்தியனமுதலாமுனிவர்களைம்பதின்மர்வரமுனிபாற்செ ன்னவனவரன்னவமதிப்பாலவமதிப்பாயிருந்திடவுமவனைநோக்கி ப்பொன்னனையதவமுனிவர்வெகுண்டுனைப்பரசெமையிகழ்ந்தபுன்மை யாலே, இன்னரியகருங்கடாவாயினிப்பிறக்கக்கடாவாயென்றனைச் சொன்னார்.

(இ-ள்) முற்காலத்திலே அகஸ்தியர்முதலான ஐம்பதுரிஷிகள் கூடிவரமுனியென்பவருடைய ஆசிரமத்திற்குப் போனார்கள் அந்தவரமுனியானவர் தம்முடைய தபோபலத்தினாலே மரியாதையாக உபசாரஞ்செய்யாதிருந்தார் அப்போது-அவரைப்பார்த்து பொன்போலும் அரியதவத்தையுடைய எல்லாமுனிவர்களும் கோபித்து எங்களுக்கு அவமரியாதை செய்தபடியினாலே யாவரானும் குறைவுசொல்லப்பட்டாய் நீ எருமைக்கடாவாகப்பிறப்பாயென்று அவர்களவருக்குச்சபித்தார்கள் )

அந்தவைம்பதின்மருமன்றுரைத்தமொழிக் கொடுமையைக்கண் டச்சமாகியிருந்தவனுமெழுந்துபணிந்தெனதுபிழைபொறுத்தருளவீ சென்றனந்தப்பெருந்தவர்புடனுரைப்பாமகிடமுகத்தவுணனென னப்பிறந்துபின்னர், இருந்தவாணிடமேவவடித்தவம்புரியுமுமைகணைதி ர்ப்பாளென்றார்.

(இ-ள்) அரியதவத்தினையுடைய ஐம்பதுமுனிவர்களும் அன்றுசொல்லியசாபத்தின் குரூரத்தைக்கேட்டுப் பயப்பட்டுப்பெருமைபொருந்திய தவஞ்செய்த வரமுனியும் எழுந்து வந்தனஞ்செய்து முனிவர்களே தெரியாமல்நான்செய்தபிழையைப்பொறுத்துக்கொள்ளுங்களென்றார் அந்த முனிவர்கள் நீ எருமைமுகம்பொருந்திய அசுரனாகி அருணாசலத்தில் சுவாமியினது இடப்பாகத்தைப்பெறும்படி தவஞ்செய்துகொண்டிருக்கிற அம்மனுமையவள் உம்முடையசாபத்தைநொடிப்பொழுதில் தீர்ப்பாளென்றுசொன்னார்கள்—எ-று. (௬௭)

ஆங்கவர்சொற்படியிலவனசுரர்பொருங்குலத்திலுதித் தரசனாகி யோங்கியபேர்மகிடனெனக்கொடுங்கோன்மைபுரிகுதலுமொருநாள்வே ட்டைத், தீங்குதெரிவனத்திலடைந்தழுபசியாலிளைத்தோடித்திரிந்தா னங்கே, நைசரியவருச்சனைசெய்மன்னதனைன் றொருமுனிவனைப்ப ட்டானே.

(இ-ள்) அந்தமுனிவர்கள் சொன்னபிரகாரம் வரமுனி அசுரர்குலத்திற்பிறந்து இராஜாவாகிமகிடாசுரனென்கிறபெயரையடைந்துகொடுங்கோலாட்சிசெய்துக்கொண்டுவருகையில் ஒருநாள்வேட்டையாடும்படியாகவனத்தில்வந்து மிகுந்தபசியினாலே இரையொன்றும் அகப்படாமல் ஓடித்திரிந்துகொண்டிருந்தான் அவ்விடத்தில் நீகைக்குத்தகரியதவஞ்செய்கின்றமன்னதரிஷியங்கிறவன் எதிர்ப்பான்—எ-று. (௬௮)

மன்னதனுமவனையிவன்காத்தி லிங்கத்துடன்விழுங்கி மகிழ்ந்துபோ
னான்,பின்னதனாலவன்மிடற்றிற்சிவனுருவமிருந்ததந்தப்பெருமையாலே,
யுன்னதமாயினஞ்சிவனுமூறுசெய்தவுடனுமிறைபருவமென்றே,வன்
னதனால்வினையடைந்ததுதவுருநவதீர்த்தமாடியென்றான்.

(இ-ள்) எதிர்ப்பட்டஅந்தமன்னதனென்கிறரிஷியைக் கையிலிரு[illegible]
ம்இலிங்கத்தோடேஇந்தமகிடாசூரனெடுத்துவிழுங்கிவிட்டுப்போனா[illegible]
பின்புஅவனைகண்டத்திற்சிக்கிக்கொண்டு படிகலிங்கமிருந்தபடியினாலே
யிருந்தபெருமையடைந்தான் அந்தஇலிங்கமிருந்தகண்டத்தையுடைய
னும் சிவசொரூபமன்றோ அவனைகொன்றபடியினாலே பாவம்சம்ப
வித்தது நவதீர்த்தங்களாடினால அந்தபாவம்போகுமென்றார்கௌதமர்

அன்புமுனியுரைத்தளவிலொருமொழியந்தரத்திலெழுந்தரியதீர்த்த
மொன்பதுமவ்விடத்திலவருமவை வருமாறியற்று மௌனவுமையும்வில்
லை,தன்பதுமமுகநோக்கி யுனதுகைவாளினதுகங்கைதருவாயென்று
ள, வன்பணிலமெடுத்தாளூ தொழுதுகைவாளிலத்தெறிந்துவாங்கும்
போதில்.

(இ-ள்) மிகவும்பத்தியையுடையகௌதமர்இந்தப்பிரகாரஞ்சொன்
னஅளவில் பாவந்தீர ஆடுதற்கு ஒன்பதுதீர்த்தமும்இவ்விடத்தில் வரு
மபடிச்செய்யென்று ஆகாயத்திலிருந்து ஒருவார்த்தைபிறந்தது அதை
கேட்டுபார்வதியும துர்க்கையினதுமலர்போன்ற முகத்தைப் பார்த்து
உன்னுடையகையிலிருக்கிறவாளினாலே பூமியைபிளந்துகங்கைவரும்ப
டிசெய்யென்று சொல்ல ஜயசங்கைபிரசரித்த துர்க்கையும்வணங்கிவா
ளாயுதத்தால்பூமியிலேவீசியெடுத்தபோது-எ-று. (௫௰)

நவநதியும்பிறவுளநன்னதிகளுமச் சொகந்தீரநல்லதான
சுவையதிகமுதவுபலதடாகங்களுமங் கெழுந்தவந்தசுனையினாடே
பவமகலவொருமாதமுமுழுகியிருந்தாள் கரத்தைப்பற்றிநீங்காச் [று
சிவவடிவமகன்றதுதன்னுளமகிழ்ந்து கரையில்வந்தாடேவர்போற்

(இ-ள்) ஒன்பதுதீர்த்தங்களும்மற்றுமுள்ளநதிகளும் விடாயாறும்
படிஉதவிசெய்யும கலசருசியைக்கொடுக்கின்ற அனேகம்தடாகம்உண்
டானதுகள் அந்தநதிகளில் ஒருமாதவரைக்கும் அம்மன்குற்றம் நீங்கு
ம்படி ஸ்நானஞ்செய்துக்கொண்டிருந்தாள கையைப்பற்றிக்கொண்டு வி
டாமலிருந்த லிங்கமுமநீங்கியது அப்போதுதேவர்களபோற்றும்படி ம
னதுசந்தோஷித்துஅம்மன்கரையில்வந்துசேர்ந்தாள்-எ-று. (௫௧)

அருவருவாமொருசிவனையதன்கரைமேற்புறத்திருத்தியருச்சித்தாளம்
இருவினையுந்தவிர்ப்பானுக்கென்பாவந்தீர்த்தானென்றியற்பேரிட்டாள்
திருமருவும்பெருஞ்சுனைக்கு மினியகட்கதீர்த்தமெனத்திருப்பேரிட்டா
ள், குருமணியையருணகிரிப்பெருமானைத்தொழக்கனகக்கோயில் சார்ந்
தாள்.

(இ-ள்) அருவமாகியும்உருவமாகியும்விளங்குகின்றஒப்பற்றசிவனை
அந்தநதிக்கரையிலேஎழுந்தருளச்செய்து அர்ச்சனைசெய்தாள்நம்முடைய

யங்கல்வினை நீங்கிய இரண்டாயுடைய அருணைநகரையாமகரு எனபாவந்தீர்த்
தானென்றுபேரைத்தரித்து அழகுபொருந்திய அந்தக்கோலக்குக் கட்க
திர்த்தமென்றுபெயரிட்டாள் நிறம்பொருந்தியமணியொத்தவளை அரு
ணைநகரத்திலெழுந்தளியிருக்கின்றபரமசிவனை வணங்கும்படியாகபொன்
னாகியகோவிலுக்குப்போனாள்-எ-று. (௫௨)

முருகுமலரயன்றடத்திற்படிந்துவெண்ணீரணிந்துசெங்கைமுடியிற்
கூப்பி, யருகுவருங்கோதமன்சொற்படிதொழுதட்புகுந்துகணநாமு
தைககண்ணுற், றுருகிநிலமுறவிழுந்துபணிந்தெழுந்துபரவசமாய்ப்பா
டியாடி, பருகியுவந்தழுதுயர்த்து வலமபுரிந்து தனதுகுறையுரைத்துப்
போற்றி.

(இ-ள்) வாசனைபொருந்தியதாமரைமலரிலிருக்கிறபிர்மாவினுடைய
தீர்த்தத்தில்முழுகிவிபூதிதரித்துச்சிவந்தகைகளைசிரசில்வைத்துகரும்
பிட்டுத்தன்னருகேவருகிறகௌதமர்சொன்னபிரகாரம உள்ளேபோய்க்
குளிர்ச்சிபொருந்தநமஸ்காரஞ்செய்து எழுந்திருந்துபரவசமாகிப்பாடி
யாடிஉருக்கமடைந்துகளித்துஆனந்தக்கண்ணீர்பெருகிப்பெருமூச்செ
றிந்துவலமாகவந்துதன்னுடையகுறையைசொல்லிவணங்கினாள்-எ-று

கார்த்திகைத்திங்களிற்றிருநாளாக மற்றின்படிநடத்திக்கனற்கண்ணனை
தோத்திரம்பண்ணுதலுமொருசுடர்மலைமே லெழுந்தச்சுடரினூடே [த
லைதெரியபலகோடியிரவியெனவொருசேதி யெழுந்துமின்னே
வாய்த்தமலைவலமாகநடத்தியெனவுரைத்துடனே மறைந்ததன்றே.

(இ-ள்) கார்த்திகைமாசத்தில் ஆகமப்பிரகாரம்திருநாள்செய்துநெ
ருப்புக்கண்களையுடைய சிவனைப்பணிந்தவளவில் மலைமேலேஒருபிரகா
சமுண்டாகி அதிலேசொல்லுதற்கரிய பலகோடி சூரியப்பிரகாசமாயசு
வாமியெழுந்துபெண்ணே இந்தமலையைவலமாகநடந்துவாவெனறுசொ
ல்லிமறைந்துவிட்டார்-எ-று. (௫௪)

காரிதனைச்சிலையாக்குமுனிவனுமப் படிவலமாநடத்தியென்றான்
வாரியெனமறைபுகழ்க் காரிகையுநடந்தண்டன்மலர்க்கைகூப்பி
பேரிகையுங்காகளமுஞ் சல்லரியும்மல்லரியும்பெரியவாணி
றாயமுகந்துந்துமியுமத்தளமுங் குடமுழவுந்துவைத்தவன்றே.

இ-ள்) அகலிகையாகியபெண்ணைக்கல்லாக்கியகௌதமரிஷியும்அம்
மாஅப்படியே வலமாகப்போவென்றுசொல்லச் சமுத்திரம்போல்வேத
கோஷமுழங்கவும் ஆகாயத்தில்பேரிகை காகளம் சல்லரி மல்லரி மு
க துந்துமி மத்தளம் குடமுழா முதலானவாத்தியங்கள் முழங்கவும்பா
ர்வதிஇரண்டுகையுங்கூப்பிக்கொண்டுநடந்தாள்-எ-று. (௫௫)

அரம்பையுருப்பசிமுதலாமகபதிநாட்டரிவையர்க ளாடல்காட்டக்
குரும்பையெனநெருங்குமுலை வரையரமங்கையர்மலரின்குப்பைகொட்
டரும்புகனிக்கனியமொழிப்புலமங்கையரிருட்டுக்கவரியாட்ட [டக்
கிரும்புருகக்கரைபுரியு பரவகிருர்பணிவிளக்க மெடுத்துநீட்ட.

(இ-ள்) இந்தப்ரகாரம்பார்வதியம்மையாரும்போதுஇரம்பையூர்வசி முதலாகியதெய்வலோகத்துப்பெண்கள் நாட்டியமாடதென்னைக் குன்று யையொத்த தனத்தையுடையமலையரமகளிர் அம்மன்கூடநடந்து வருமிடத் து பாதம்பூமியிலேபட்டு உறுத்தாமலிருக்கப்புஷ்பங்களைகுப்பைபோ[ல] கொட்டக் கறுப்பஞ்சாறுபோலும் வார்த்தையையுடைய கிராதப்பெண்க ள்சாமரம எடுத்துவீச இரும்புகூடஉருகும்படி கைசெய்கிற நாகலோ கத்துப்பெண்களஇரத்தினதீபங் கையிலேபிடித்துக்கொண்டுவர-எ-று.

இதுமுதலிரண்டுபாடல் குளகம்

முன்னடகமண்டபமயிலும்புலோமிசையுமுறாதுவளமுளரிமானு
கண்டகமும்வழிபாலுமொழித்துவரலகடன்கைகணிட்ட
அண்டர்குலமடந்தையருமுநிவர்குலநிதையருமருவிப்பூந்தேன்
வண்டவிழுஞ்சேரகறுமலரினறுந்துகள்சொரிந்துவழிகளாக்க

(இ-ள்) தாமரைப்புஷ்பமாகியமண்டபத்திலிருக்கிற லட்சுமியும்இந்திராணியும்வெண்டாமரைப்பூவிலிருக்கிறசரஸ்வதியும போகிறவழியிலிருக்கிற முள்ளுகளையும்கல்லுகளையுந்தள்ளிக்கொண்டுவரப் பூமிதேவி கைகளைநீட்டிச சாக்கிரதையாகத்தாங்க தேவஸ்திரீகளும் முனிவர்களுடையஸ்திரீகளும புஷ்பத்திலிருக்கிற தேனருவியினாலே வழிசேற்றை நீக்கிபுஷ்பத்துக்குள்ளேயிருக்கிற பராகபொடிகளைக்கொட்டி நல்லவழியாகச்செய்ய-எ-று. (௫௭)

கன்னிகைதுன்னிருசரணம்பொறுக்கருள்வாயெனவங்கைகங்கைகூப்ப
மன்றனதிசையணுகிபழக்கி||யையெதிர்முகமாவணங்கிபோற்றி [ன்
தென்றிசையுநிருதிபெறுந்திசையினையுங்கடந்துகுடதிசைக்குச்சென்று
குன்றவிலாப்புகழானுமழவிடைமீதினிற்காட்சிகொடுத்துப்போனான்.

(இ-ள்) கன்னிகையானவள் அம்மாபார்வதி உன்பாதமிரண்டு பூமியிலே படுக்கன்றிப்போயவிட்டது பொறுக்கவேணுமென்று இரண்டுகைகளையுங்கூப்ப அழகியஅக்கினிதிசையிலேவந்து அக்கினிமலைஎதிர்முகமாகத்தொழுது தெற்குதிக்கும்நிருதிமூலையுந்தாண்டிமேற்குதிக்கிற்போனான்குறைவில்லாதகீர்த்தியையுடையசுவாமியுமஇளமைதங்கியரிஷபவாகனத்தில எழுந்தருளிவந்துதரிசனங்கொடுத்துநடந்தார்-எ-று. (௫௮)

நாற்றிசையுட்போற்றிசெயும்புகழணியுண்ணுமலையாநடங்கால்போற்றி
கேற்றிசையுவகாறிசையுங்கடந்துவடதிசையணுகிவிரும்பியேத்தி [ற
எற்றிசையுமுறைதிசையுமகிழ்ந்துகுணதிசையடைந்தாளிளவைவெற்பி
சேற்றிசையுடனவழலைவலம்புரிந்தசெயல்போலநெறிந்ததன்றே.

(இ-ள்) நாலுதிக்கும்வணங்குகின்றகீர்த்தியையுடையஅருணாசலேசுர ரதுநடனபாதத்தைவணங்கிமேற்குதிக்கும் வாயுதிக்கும் தாண்டிவடதி சையில்மறுபடியுந்தொழுதுஈசானதிக்கிலேமுன்னீசானனுடைய திக்கைக் கடந்துகிழக்குதிசைக்குவந்தாள் அப்படிவந்தது இமவற்பர்வதத்தில் சிவமகலியாணஞ்செய்தபோதுஅமரர்க்கிணையவலம்வந்ததுபோலிருந்

கலித்துறை.

பானுகம்பன்கனச் சங்கொலிநெடியமால்பணிலத்
தானகம்பலை நாரதர்வீணையினரவம்
வானதுந்துமி கம்மலேதிசையெலாமறைத்த
தேனிறைந்திழி மலர்மழையிமையவர்சிதற.

(இ-ள்) பானுகம்பனென்பவன் தன்னுடைய ஆயிரங்கைகளிலுஞ் சங்கத்தைவைத்தூதுகிறவொலியும் விஷ்ணுவானவர் தமது சங்கத்தை வாயில்வைத்தூதுகிற சத்தமும் நாரதர் வீணையைவாசிக்கிறசத்தமும் ஆகாயதுந்துமியினுடைய சத்தமும் திக்குகளெல்லாஞ் செவிடுபடச்செய்தது கள் தேனிறைந்தபலருஷ்பங்களைத்தேவர்களசொரிய.-எ-று (௬0)

இது முதல்மூன்றுபாடல்களுக்குளகம்.

கற்றைவார்சடை யிளம்பிறைநெடுநிலாக்கமழப்
பற்றராமணி யிளவெயில்விரித்திடப்புவியைப்
பெற்றமாதினுக் கொருபுறமளித்திடப்பிடித்த
வெற்றநூலெனப் புரிபூணுண்மார்பகத்திலங்க.

(இ-ள்) கற்றையாகியநீண்டசடையில்தரிக்கப்பட்ட இளமையாகிய பிறையினதுநெடுமைபொருந்தியசந்திரிகைபிரகாசிக்கவும் ஆபரணமாகிய புற்றிலிருக்கின்றசர்ப்பத்தின்தலையிலிருக்கிறமணிகாந்தியை விரிக்கவும உலகமாதாவாகியபார்வதிக்குப்பாதிசரீரத்தைக்கொடுக்கிறதற்காகப் பிடித்தவெறுநூல்போலபுரியாகியபூணுலானது மார்பிறபிரகாசிக்கவும.

பிறப்பிலாமதன்மறைசியலரமளவிடாபபெரியோ
னிறப்பிலாவிடையிறையினமேலினிதெழுந்தருள
வறத்தினுபகியடிபணிந்திறைஞ்சினளனைத்துக்
துறைக்குமன்னனுமவளுடனிவையினவசொலலும்.

(இ-ள்) பிறப்பில்லாதமூர்த்தி அநேகவேதங்களாலும அறியப்படாதவர் இறப்பில்லாதபரமசிவன் ரிஷபவாகனத்திலெழுந்தருளத்தருமவளர்க்கின்றபார்வதி அந்தச்சுவாமியாதத்தைததொழுதுவணங்கினாள் எலலாவற்றையும்நீக்கியகடவுளானவர் ஆநந்தமுமடனேும் சொலவா.-எ-று.

பெண்ணுமாணுமா யுலகுயிர்பபொருளொலாமபிரிந்தோ
மண்ணுதாகிய பீடமுமிலிங்கமுமானோ
மெண்ணுநீயென நாமெனவிரண்டிலேமரமு
முண்ணலாவிய வயிரமுங்கோத்துடனுறைவோம்.

(இ-ள்) வாராயுமையேநீயும்நானும்பெண்ணுமாணுமாகிஉலகத்தில் அநேகம்சிவராசிகளைவேறுவேறு உண்டாக்கினோம் சமீபமாய் ஆவிடையாரும்லிங்கமானோம்நீயென்றும்நானென்றும்வேறுபேதமில்லைமரமும அதற்குளளேயிருக்கிறவயிரமும்போலநுங்குயகசேர்ந்திருப் பாம் (௬௩)

அங்கம்பாவும்பொருட்டுவிட்டிமயவெற்படைந்தா
யிங்குநாமுனக்கொருபுறமளிப்பதேயியற்கை
மங்கையேமெயிடப்புறத்துறைகனமகிழ்வுற்
றங்கையாலணைந்தருளினனுருகியொன்றானார்.

(இ-ள்) தேகத்தைவிட்டுநம்பொருட்டாக இமயபர்வதத்திலேவந்து பிறந்தாய் அவ்விடத்தில்நாம்உமக்கொருபாகங்கொடுப்பதுசுபாவமே ண்ணே நம்முடையஇடப்பாகத்திலேசேர்ந்திருவென்று சந்தோஷத்தினி யடைந்துகையினாலேஅணைத்துக்கொண்டார் இரண்டுதேகமும் உருகி ஒருதேகமானார்கள் அம்மனும்சுவாமியும்-எ-று. (கூ௪)

அடுத்தசெஞ்சடையொருபுறமொருபுறமளக
தொடுத்தகொன்றையோர்புறமொருபுறமலர்குவளை
வடித்தசூலமோர்புறமொருபுறமலர்க்குவளை
திடத்திலாகழலொருபுறமொருபுறஞ்சிலம்பு.

(இ-ம்) அப்படியிருவரும்உருகிச்சுவாமியினுடையபாதியும் அம்மனுடையபாதியும் ஒருதேகமானபோது ஒருபக்கத்திற்சிவந்தசடையும் ஒருபக்கம்கூந்தலும் ஒருபக்கம்கொன்றைமாலையும் ஒருபக்கம் புஷ்பமாலையும் ஒருபக்கம்சூலமும் ஒருபக்கம்நீலோற்பலபுஷ்பமும் ஒருபக்கம்வீரகண்டாமணியும் ஒருபக்கம்சிலம்பும் தோன்றியதுகள்-எ-று. (கூ௫)

பச்சைவன்னமற்றொருபுறமொருபுறப்பவளங்
கச்சுலாமுலையொருபுறமொருபுறமகவின்மா
ரச்சநீக்கியவரமுமொன்றபயமொன்றங்கை
இச்சையாமிவறுறுதல்கண்டிறைஞ்சினாரிமையோர்.

(இ-ள்) ஒருபுறம்பச்சைநிறமும்ஒருபுறம்பவளநிறமும்ஒருபுறம்இரவிக்கையணிந்தஸ்தனமும்ஒருபுறம்அழகுபொருந்தியமார்பும் ஒருபுறம் அபயமும் ஒருபுறம்வரமுமாகியஆசையோடுஇருவரும்பொருந்தினதைப் பார்த்துதேவரும்வணங்கினார்கள்-எ-று. (கூ௬)

இந்தமாக்கதைபடித்தவர்செவிகளிற்கேட்டோர்
சந்தனாசலமுனியினிற்றமிழ்க்கடல்கடப்பா
மைந்தரோமுதற்கிளையுடனுலகினில்வாழ்வார்
பந்தபாசமறறழிவிலாப்பரகதிபெறுவார்.

(இ-ள்) இந்தக்கதையைப்படித்தவர்களும் காதிலேகேட்டவர்களும் சந்தனவிருக்ஷங்கள்சூழ்ந்தபொதியமலையிலிருக்கிற அகஸ்தியரைப்போல தமிழ்க்கடல்கடப்பார்கள் சந்தானபாக்கியத்தோடுஞ்சுற்றத்தாரோடும் உலகத்தில்வாழ்வார்கள் தங்களைபந்தமாகச்சூழ்ந்துகொண்டிருக்கிறதீவினையைத்தள்ளிமோட்சம்பெறுவார்கள்-எ-று.

முனிவனேயெனப்பயந்தவனுரைத்ததிம்முறையென்
றனையமாமுனிக்குரைத்தலுமவனெழுந்திறைஞ்சிக்
கலாகலைச்சிராங்கதனுயர்கதிபெறுங்கதையை
வினவினன்முனிவினவலுமகிழ்ந்திவைவிளம்பும்.

கஞ்சுகம்போர்வைநீத்துக் கவிகையுஞ்செருப்புநீத்தே
யஞ்சுதல்வெகுளிசோக மக்கணத்தகற்றிவாசி
குஞ்சரமுதலாயுள்ள வாகனக்குறுகிடாமல்
விஞ்சியவடைக்காயுண்டி வழியிடைவெறுப்பதாக்கி.

(இ-ள்) அங்கத்தில் தரிக்குஞ்சட்டையும் போர்வையையும் நீக்கிக்குடைபிடித்துக்கொள்ளாமல் கால்களுக்குச் செருப்புப்போட்டுக்கொள்ளாமல் பயமும் கோபமும் சோபமும் நீக்கிக் குதிரை யானை முதலாகிய வாகனங்களிலேறாமல் தாம்பூலம் தரிக்காமல் போசனத்தையும வெறுத்து-எ-று. (உசு)

செங்கைவீசாமற்சோரா துவகையாற்சிரத்திற்கூப்பி
மங்கையர்பதிதர்நீச ருறுப்பினைவழிவுநோக்கா
தங்குறுமடியிளோசை செவிப்புமாதரசர்மாதர்
திங்களையிரண்டுசென்று நடந்திடுஞ்செயல்போற்சென்று.

(இ-ள்) கைகளை வீசிக்கொண்டு போகாமல் சோர்வில்லாமல்சந்தோஷத்தொடு சிரசிறகையைவைத்து கூப்பிக்கொண்டு,ஸ்திரீகளையும்பாவிகளையும நீசரையும் அவயவ ானரையும் பாராமல்நடக்கிறபோது அடியினுடையசத்தம் காதிற்கேட்காமல் மெளள இராஜஸ்திரீகள பத்துமாதத்துக் கருப்பத்தோடு நடக்கிறதுபோலநடந்து-எ-று. (உஎ)

இருவினையகற்றுமந்த மலையையெண் டிசையுமவீழ்ந்து
பரவியங்கதனைச்சூழ்ந்த கடவுளர்பணிந்துபோற்றி
யருவமாய்வலமாஞ்சித்த ரமரரைமனத்தார்போற்று
யுருகியங்கவற்மேற்கையாற் படுமெனவொடுங்கிச்சென்று

(இ-ள்) நலவினை தீவினை இரண்டையுமநீக்கும் அக்கிரியை எட்டுத்திக்கும்வணங்கி அந்தத்திக்கிலிருக்கின்ற சுவாமிகளையும்வணங்கிஉருவந்தெரியாமல்வலஞ்செய்துகொண்டு வருகிறசித்தர்களையும்தேவர்களையும் மனதினால் வந்தனஞ்செய்து அவர்கள்மேல்தங்கள் கைகால்கள் படுமென்றுபயந்து வழியினின்றும் ஒதுங்கிச்சென்று-எ-று. (உஅ)

வானமார்மலையைப்பொன்னிற் படிகமன்மணியாயெண்ணி
மோனமாய்நடக்கவல்ல திறைபுகழ்மொழியைக்கேட்க
வானவிச்செயலினாலே வலஞ்செய்தாலபத்தினண்ணி
யேனமுன்னறியான்றாளைப் பணிந்துதன்னிருக்கையெய்தி.

(இ-ள்) ஆகாயமட்டுமௌாவிய அந்தமலையைப் பொன்போலவும் படிகம்போலவும், இரத்தினம்போலவும் நினைந்து மவுனமாய்நடக்கவேண்டியது அல்லது சுவாமியின் ஸ்துதிகளைக்கேட்கவேண்டியது இப்படிப்

பட்ட தன்மையாகவலம்வந்து கோயிலுட்சென்று மெய்ஞ்ஞானவாகிய பன் னியறியாத சுவாமியினையபாதங்களை வணங்கித் தங்கியிருக்குமிடத்து க்கு வந்தான்-எ-று. (உ௬)

குன்றெனுங்குணத்தவர்குழ விருந்தனின் கனிபாரல்கொள்க
வன்றியேபுலவுசேர்த்த வடிசிலையுண்கசேர்
நின்றவத்தலத்தோர்செய்யு நிலைமைமிகதிதூரத்திற்
சென்றவர்வருத்தமாயெவ் வகைவலஞ்செயினுஞ்சீரம்.

(இ-ள்) மலைபோலுயர்ந்தகுணத்தையுடையவராகிய சிவபத்தர்கள் குழுவிருந்து மதுரமாகியபழங்களும் பாலுஞ்சாப்பிடக்கடவர் அப்படியில லாவிட்டால் மாமிசபதார்த்த மில்லாமல் அன்னத்தைப்புசிக்கக்கடவர் இப்படிப்பட்ட செய்கைகளை நிதிபொருந்திய அந்த ஸ்தலத்திலிருக்கிற வர்கள் செய்யவேண்டியது அதிகதூரத்திலநின்றும வந்தவர்கள் தங்க ளுடையவருத்தத்தினாலேஎவ்விதமாகவலஞ்செய்தாலும்நன்மையாகும.

தணடுதலிலாதஞானச் சனகவிசசயிலஞ்சூழ
வெண்டிசைபுரப்போர்தமமே ரின்றசிவவுருவங்கண்டார்
வணடிசைபெருகுமோதி மலைமகண்மலையின்கீழ்பால
கண்டனன்பவளவெற்பிற கயிலைவெற்பிறைவன்காட்சி

(இ-ள்) கெடுதலில்லாத ஞானத்தையுடைய சனகரிஷியே இம்மலையி னெட்டுதிக்கிலும் திக்குப்பாலகா எட்டுபேரும தங்களபேரினாலே இலிங்கங்களை ஸ்தாபித்துப் பூசித்திருக்கிறார்கள் வணடுகளினது ஒலி பொருந்திய கூந்தலையுடைய பாாவதியானவள கிரியின் கிழக்குத்திக்கி ல் பவளமலைபோல் ஒருலிங்கத்தை ஸ்தாபித்துப்பூசித்தாள-எ-று.

மணிவரைபரியிற்சூழ்ந்த வச்சிராங்கதனப்போது
புணர்பவந்தவிர்க்கத்தென்பால புழுகணியிறையைக்கண்டான்
தணிவிலாவினைகணிக்கத் தமியனேன்மலையின்மேற்பால்
அணிபண்ணுமலையானென்று மருவுருவிறையைக்கண்டேன்

(இ-ள்) அருணாசலத்தினிடத்தில் குதிரையின் மேலேறிக்கொண்டு வ ந்த வச்சிராங்கதபாண்டியன் அக்காலத்தில் தன்னையடைந்த பாவத் தைத்தீர்க்கத் தென்றிக்கில புழுகணியிறைவரென்று ஒருலிங்கத்தைஸ் தாபித்துப பூசித்தான் தணியாதபாவங்களை நீக்கிக்கொள்ள நானும அ ந்தமலையின் மேற்குத்திக்கில் அணியண்ணாமலையானென்கிற பேரிட்டு ஒருலிங்கத்தைஸ்தாபித்துப் பூசைசெய்தேன்-எ-று. (௩உ)

வாலவெங்கதிர்மேற்சோண வரைகடந்தொருநாட்பாய்ந்து
சாலுமத்துயரந்தீர்த் தனதுபேரிறையைக்கண்டா
னுலயபுழுதுக்கேவர் நாகர்நாட்டுறைவோர்சித்தர்
சீலமாமுனிவர்கண்ட சிவனுருத்தெரிக்கொணாதே

(இ-ள்) சூரியனானவன் அருணாசலத்தைத் தாண்டிப்போனதினால் வந்தபாவந்தீரத் தன்பேரிட்டு ஒருலிங்கத்தை ஸ்தாபித்துப் பூசைசெய்தான் அதுவல்லாமல் அந்த மலையிலிருக்கிற கோயில்கள் முழுதும் தேவர்கள் நாகலோகத்தார்கள் முனிவர்கள் இவர்களாலே ஸ்தாபித்துப் பூசைபண்ணப்பட்ட சிவலிங்கங்களை இவ்வளவென்று சொல்லக்கூடாது.

ஈசனார்வடிவமான லிங்கமவ்வெல்லைசூழ
யோசனைமூன்றுஞ்சேர நெருங்கும்வானுடுக்கள்போலப்
பேசுவதெவனோவந்தத் தலத்தினிற்பெருமைவேலன்
நேசுறுங்கவுரியானை முகத்தனுந் தெரிக்கொணாதே.

(இ-ள்) பரமசிவரூபமான அனேக லிங்கங்கள் அவ்வெல்லையைச்சுற்றி மூன்றுகாதவழிமட்டும் ஆகாயத்து நக்ஷத்திரங்களபோல நெருங்கியிருக்கும் அப்படியிருக்கிறபோது அந்தஸ்தலத்தினது பெருமையை சிவசுப்பிரமணியர் பார்வதி விநாயகர் இவர்களாலேயே சொல்லக்கூடாமலிருக்கிறபோது என்னால் சொல்லப்படுமோ-எ-று. (௩௪)

தாதவிழ்மலரோனிவ்வா றுரைத்தலுஞ்சனகன்போற்றி
வேதனேபிறவிதீர்க்கும் விமலனேவிமலனான
வாதியைப்பழித்தோரசெம்பொன் கவர்ந்தபேரடையுந்தீங்கும்
பாதகந்தவிருமாறும் பகரெனப்பதுமன்கூறும.

(இ-ள்) தாதுவிரிந்த தாமரைமலரிலிருக்கின்ற பிரமமா இந்தப்பிரகாரஞ்சொன்னதும், ஜனகரிஷியானவர்வணங்கி வேதமுழுதுங்கற்றுணர்ந்தவரே, பிறப்பைநீக்குமபரிசுத்தரே மலரகிதரான சிவனைப்பழித்தவர்களுக்கு வந்தபாவமும் அவர்தனத்தை அபகரித்தவர்களடையும் பாவமும அவைகள்நீங்கும் வகையும் சொல்லுமென்றுகேட்கப் பிரமாசொல்லுகிறார்-எ-று. (௩௫)

ஒன்பதாவது திருமலை வலம்புரிச்சருக்க முற்றிற்று.
ஆ திருவிருத்தம் ௫௨௪

உ

பத்தாவது

# ஆதித்தச்சருக்கம்.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

அற்றமற்றமுனிவாசூழ மருணபூதரத்துடன்
மற்றவெறபுமொக்குமென் றிகழுந்துராத்தமனிதர்வாய்

புற்றெழுந்து புகையெழுந்து புழுநெளிந்துபுலவுநீர்
சுற்றெழுந்துபெருகுமண்டு சோரிமாரிசொரியுமே

(இ-ள்) குற்றம்நீங்கிய முனிவர்கள் சூழ்ந்துவருகின்ற அருணாசலமென்னு மலையோடு மற்ற மலைகளையு மொக்குமென்று நிந்தை சொன்னமனிதருடைய வாயிலே புற்றுஉண்டாகிப் புகைபுகைந்து புழுக்கள நெளிந்து புலால்நாற்றம் நாறுகின்ற நீர்சுற்றியெழுந்து மிகவும இரத்தமாரி சொரியும்-எ-று (க)

அந்தமைந்தர் தம்மையேற்றி யந்தகன்றனேவலாய்
வந்ததூதர்செக்கிலிட் டரைத்தரைத்தெடுப்பர்வாய்
வெந்தவாளிநுறறுப்ப ரெங்கள்சோணவெற்பையே
நிந்தைசெய்வையென்றடித்து நெய்யில்வேகவைப்பரே.

(இ-ள்) அருணாசலத்தை நிந்தித்த அந்தமனிதர்களைப் பின்புயமனுடைய ஏவலாய வந்த தூதர்கள செக்கில் அநேகதரமபோட்டு அரைத்து எடுப்பார்கள் அவர்களுடைய வாய்களை நெருப்பிற் போட்டுக் காய்ச்சியகத்தியினாலறுப்பார்களஎங்களாண்டவன்மலையையோநிந்தைசெய்வாயென்று அடித்துநெய்யிலேவேகப்போடுவார்கள்.-எ-று.

பஞ்செழுத்துவைத்தரக் குருக்கிவாய்பரப்பியே
நஞ்சினைப்புகட்டிவெய்ய நரகிலேயிடத்துவார்
அஞ்சியந்நரகுதானுமருவருத்தலேநிடும்
நெஞ்சகத்திலெண்ணினூர் தமக்குமீது நிகழுமே.

(இ-ள்) பின்னும்அந்தஅருணாசலததை நிந்தித்தவர்களையமதூதர்கள்பஞ்சாகத்துவைத்து அரக்கையுருக்கி வாயிலேவிட்டு நஞ்சைக்குடிப்பித்துத்தீமையாகியநரகிலே தள்ளுவார்கள் அந்நரகமோவென்றால் பயப்பட்டுஇவர்களைத்தாங்குகிறதற்குசசகிக்காமல மிகவும்வருந்தும இப்படிப்பட்டதுன்பம்மனதிலேஇந்தமலையைக் குறைவாக வெண்ணினவாகளுக்குமஉண்டாம்-எ-று. (கூ)

குருக்கடைந்தைதாயராவி கொன்றதீயர்முதலோர்
ரிருக்கும்வெய்யநரகின்மீதி விட்டபோதிலவர்களும
பெருக்கநொந்துபாவியென்று பேசுவார்கடம்முடன்
சரிக்கொணாதுதள்ளுமென்று தங்கள்கண்புதைப்பரே.

(இ-ள்) ஆசாரிகளையும் தாய்தகப்பன்மாரையும் பிராணன்வாங்கிய தீயபாவிகள்முதலானவர்கள்வாசஞ்செய்யுங்கொடிதாகியநரகத்திலே இந்த அருணாசலத்தைநிந்தித்தவர்களைப் போட்டபோதுஇவர்களைமுன்னமேயிருக்கும் பாவிகள்மிகவும்வருத்தப்பட்டு சுவாமியைநிந்தித்தபடியினாலேநம்மிலுமபாவிகளென்று சொல்லிநமமோடேயிவாகளசரியாயிரு

க்கக்கூடாதுதள்ளிவிடுமென்று தங்கள்கண்களைப் பொத்திக் கொள்ளு வார்கள்-எ-று. (௪)

என்றுரைத்துநானுமையை மேழுமுண்டமாலுமா
யன்றுமின்றுமளவிடாதவருணபூதரத்தையோர்
குன்றமென்றிகழ்ந்துசென்று குன்றிமெய்குறைந்துமுன்
கன்றினனொருதக்னென்று கதைவிளம்பலாயினன்.

(இ-ள்) பிர்மமாவானவர் இப்படியென்றுசனகரிஷிக்குச்சொல்லிப்பி ன்னுஞ்சொல்லுவார் நானும் ஏழுலகத்தையுஞ் சாப்பிட்ட விஷ்ணுவுஞ் சோகது அன்றுமுதலின்றையவரைக்கு மளவிடப்படாத மகிமையுள்ள அருணசலத்தைஓருவன்ஒருமலையென்றிகழ்ச்சிசெய்துபோய்க் குன்று தலடைந்து தேகங்குறைந்துதுக்கப்பட்டான் முன்காலத்திலேயென்று அக்கதையைசசொல்லத்தொடங்கினர்-எ-று.

உலவுகின்றசோதியாவு முளளில்வைத்திவ்வுலகிலோர்
மலையதாகிநின்றதெய்வமலையைமறறமலைகளபோல
அலகுபெற்றவிரவியெண்ணி யாழியொன்றுவாசியே
ழிருந்தேரம்மலையினுச்சி யெல்லையாய்நடத்தினன்

(இ-ள) நான்குதிக்கிலுஞ்சென்று விளங்குகின்றபிரகாசங்களையெல் லாம தனதுளளத்திலவைத்துக்கொண்டு இத்தப்பூலோகத்தில் ஒப்பற் றமலையுருவங்கொண்ட தெயவீகமாகிய அருணசலத்தை மறறமலைகள போல்நினைத்த ஒருசக்கரமும ஏழுகுதிரையும்பூண்ட தேரை அந்தஅரு ணசலமலையினுச்சிவழியின் எல்லையாகநடததினன்சூரியன்-எ-று. (௬)

முகுந்தர்தேடுமெந்தவெறபின்முடியின்மேவுமுன்னமே
மிகுந்தசோதியுள்ளினும வெடித்தெழுந்துவெம்மையாய்
புகைந்துசொல்லவிர கஹவர்புரமெனப்பொரிந்ததே
யுகைத்துபச்சைவாசியோ வுலர்ந்தவாசியானதே,

(இ-ள்) சூரியன்விஷ்ணுவால்தேடப்பட்டஅந்தமலையினது உச்சியி லே போகிறதற்குமுன்னே மிகுந்தபிரகாசமான மலைவெடித்து அந்தவு ள்ளிடத்தில்நின்றுஎழுந்துவெப்பங்கொண்டுபுகைந்துவரத் தேரானது திரிபுரமெரித்த பரமசிவனது நகையாகிய நெருப்பிலேபொரிந்ததுபோ லப் பொரிந்துபோய்விட்டது நடத்தப்பட்டகுதிரைகளோ சீவனில்லாத குதிரைகளானதுகள்-எ-று. (எ)

அறுசீரடி-யாசிரிய-விருத்தம்.

குதிரையுங்கரிகளாகிக் கொடியதேரலகைத்தோராய்க்
கதிரையுந்தனதுபாகன் காலெனவிழுந்தடாது
மதியழிந்திருந்தானந்த மலைவலஞ்செய்துஞானக்
கதிபெறசசெல்வேன்கண்டு கதிரவறகிவையுரைத்தேன்.

(இ-ள்) அந்தமலையினிடத்திலின் மெழுந்தவாரணமயப்பத்தினாலே குதிரைகளேழும் கரிகளாகப்போய்க் கொடியையுடைய தோ காலல் போலத்தேரன்றியு முருவில்லாத தாய்த்தன்னுடைய பாகனுமவன் கா லையிழந்ததுபோலக் கிரணங்களெல்லாவற்றையும் தானிழந்து சூரியனா மதிகெட்டிருந்தான் அந்தமலையைவலஞ்செய்துகொண்டு மேலாகியகதி யை யடையும்படியாகப்போகாநின்றானென்பார்த்து அந்தச்சூரியனுக்கு இந்தவார்த்தைகளைச்சொன்னேன்-எ-று. (அ)

ஐயனைமலையென்றெண்ணி யகந்தையாலிகழ்ந்துவீழ்ந்த
கையனேயொருகாலத்துங் கதியிலையுனக்கென்றாலும்
செய்யுமோர்தொழிலினாலே நற்காலத்தெளிவுளார்க்கு
மெய்யனையருணையானை வலஞ்செயென்றுரைத்துமீண்டேன்.

(இ-ள்) அருணாசலேசுரனை ஒருமலையென்றுநினைத்து அகங்காரத் தினால் நிந்தித்து கீழ்விழுந்து கிடக்கின்ற ஆயிரங் கிரணங்களையுடைய சூரியனே உனக்குள்ளதவனையிலும் ஒருகாலத்துங் கதிகிடையாது அப் படியிருந்தாலும் ஒருதொழிலினாலே கிடைக்கலாம் அது யாதென்றால் தெளிவுள்ளவருக்கு மெய்மையாகிய அருணாசலத்தை வலஞ்செய்து கொள்ளென்று சொல்லத்திரும்பினேனென்றார் பிரம்மா-எ-று. (கூ)

ஓதியபடியேசென்று பொன்மலைவலமாய்முன்னஞ்
சாதித்தவருக்கனசோணா சலத்தினை வலமாய்வந்தான்
வாதிக்குமழுவினொடு மழுவிடைமீதிற்கோடி
யாதித்தரெனமேவத்தோன்றி யாதித்தற்கருளிப்போனான்.

(இ-ள்) பிரம்மாவினது அனுக்கிரகஞ் செய்தபடியே மகாமேருகி ரியை முன்னேவலமாகவருகின்ற சூரியன் அருணாசலத்தை வலஞ்செய் துகொண்டேந்தான் அந்தச்சூரியனுக்கெதிரே வாதித்துசத்துருக்களை க்கொல்லுகின்ற மழுவையேந்திய பரமசிவன் இளமையாகிய ரிஷபத்தி லே கோடிசூரியர்போலத்தோன்றி அனுக்கிரகஞ்செய்து கைலாயத்துக் குளெழுந்தருளினார்-எ-று. (௰)

பன்னிருமாதந்தோறும் பரிதிமுற்பயத்தினாலே
வன்னரியின்வடிவதான மலையினைவலமாய்ச்செல்வான்
சென்னியினெல்லைசெல்லா னிடப்புறஞ்செல்வானன்றேல்
அங்கிலைவரும்போதே தகியலாசொரிந்தகலுமென்றான.

(இ-ள்) சித்திரைமுதல்பங்குனியீறாகச்சொல்லப்பட்ட பன்னிரண் டுமாதமும் சூரியன் முன்னேதனக்குண்டானபயத்தினாலே அக்கினிசொ

ரூபராகியமலையைப்பூவலஞ்செய்துகொண்டுபோவான அம்மலையினுடைய உச்சியின்மேலும்போகான் இடப்புறமாகவும்போகான் அந்தமலைக்குச் சமீபத்தில்வரும்போது ஸ்தோத்திரஞ் செய்துபுஷ்பமாரியொழிந்து செலவானென்றுசொன்னார்பிர்ம்மா-எ-று.

பத்தாவது-ஆதித்தச்-சருக்கம்-முற்றிற்று.

ஆ திருவிருத்தம-௫௬௫



உ

பதினோராவது.

# பிரதத்தச்சருக்கம்.



எழுசீர்க்கழிநெடில்விருத்தம்.

அருணைவாழிறைவன்றிரவியமணுமட்டாயினுங்கரந்தபேருடனே மரணமாய்யமனுடைமுலிலேகுளிப்பர் வசிரவுலக்கையான்மறிவ, ரிருணிறைநரகமிருபத்தெண்கோடியிடத்திலுமடைவிலேயிருப்பார,தரணியிற்புழுவாயபிறபபர்களகளவுதனக்கியைந்தவருமத்தகையர்.

(இ-ள்) அருணாசலேசுரரது திரவியத்தில் அணுவளவாவது திருடினவர்கள உடனேமரணமடைந்து யமலோகத்திறகுப் போய்அக்கினிக்குழியிலேவிழுந்து அவஸ்தைப்படுவார்கள் வசிரத்தினாற்செய்தவுலக்கையால் அடிபடுவாாகள் இருள்நிறைந்த இருபத்தெட்டுகோடிநரகங்களிலும் அடைவாகவிருந்து கிடப்பார்கள் மறுபடியும பூமியிலேவந்து புழுவாய்ப்பிறப்பார்கள் அந்தத்திருட்டுக்குடன்பட்டிருந்தவர்களும் அப்படிப்பட்டதுன்பத்தை அடைவார்கள்-எ-று. (௧)

ஓங்கியதரைபுவிசைத்தபொன்னெதிரே யுற்றபேருடலையு மொறுக்குங், தேங்கியகருணையருணநாயகர்பொற்செய்கையைப்படியினிற்கரந்து,வாங்கியபெயரைக்கிளையுடன்சிதைக்குமலையினுங்கடலினுமொளித்து, நீங்கியபொழுதுந்தொடர்ந்திடும் விடுமோநிழலெனத்தொடருமொந்திலத்தும்,

(இ-ள்) திருடிபூமியினுள்ஒளித்துவைக்கப்பட்டபொன்னுனது அந்தவிடத்தின்மேல் தந்தவருடையதேகத்தையும் கண்டிக்கும அப்படிசெய்வது மிகுந்தகிருபையை யுடைய அருணசலேசுரருடையதிரவியத்தினது செய்தியாம் அந்தப்பூமியில்ஒளித்துவைத்துஎடுத்துக்கொண்டவனையோவென்றால் அவர்களுறவோடுகெடுக்கும் மலையிலுங் கடலினுமொளித்துக்கொண்டபொழுதுந் தொடர்ந்தவருத்தம் விடமாட்டாது எவ்விடத்திற்போனலும் நிழலைப்போலதொடரும-எ-று, (௨)

கடிக்கலாஞ் சிலையைவிழுங்கலாநெருப்பைக் கடுவிடங்குழைத்திழைத்தெடுத்துக், குடிக்கலாமிரும்பை யருந்தலாங்கடும்பாறகொள்ளலாமருந்தினற்குணத்தால். முடிக்கலாம்பகையை யருணநாயகாபொன்விழுங்கினல்மிடற்றிலேபிடிக்கும், உடற்குளேகனலும்புகையுமவ்வளவோ வுயிரையுமுளத்தையுமொறுக்கும்.

(இ-ள்) பின்னுஞ்சொல்லுவார் பிர்மா கல்லைக்கடிக்கலாம்நெருப்பையெடுத்துவிழுங்கிவிடலாம விஷத்தோடுகொல்லும்படியான வஸ்துக்களைச்சேர்த்துக் குழைத்தெடுத்துச்சாப்பிடலாம் இரும்பைப் புசிக்கலாம் கள்ளிப்பால்முதலியவற்றையுங் குடிக்கலாம் இவைகள்உபத்திரவஞ்செய்யவொட்டாமல்நல்லமருந்துகளாலே நிவர்த்திபண்ணிக்கொள்ளலாம் அருணசலேசுரர் திரவியத்தைச்சாப்பிட்டவுடனேதொண்டையைப்பிடித்துக்கொள்ளும்தேகத்துக்குள்ளேநெருப்பாகக்கனற்றும்புகையுண்டாக்குமவ்வளவுதான் செய்யுமோவென்றால அவர்களுயிரையுங்கொனறு உள்ளத்தையுங்கெடுக்கும்-எ-று. (௩)

முக்கணன்பொருளைக்கவர்ந்தபேரிருக்க முயன்றபேர்நினைத்தபேர்முதலா, யக்கணத்தழிவரவர்களுமிருக்கவடியவர்பொருட்கவர்ந்தலைக்கத்தக்கதுநினைத்தார்கெடுவரென்றுரைத்துச் சத்தியம்பலபலசாற்றிச்,செக்கருங்கருகவொளிவிடுமணிப்பூண்திசைமுகனுருகதைசெப்பும்.

(இ-ள்) மூன்று கண்களை யுடைய அருணசலேசுராது திரவியத்தைத் திருடின வர்கள் படுகின்றதுன்ப மிப்படிப்பட்டது அது இருக்கட்டும் அந்தப்பொருளைத் திருடுகிற தற்கு முயற்சி செய்தவர்கள் திருடநினைத்தவர்கள் இவர்க ளக்தக் கணத்திலே யழிவார்கள்

அவர்களுமிருக்கட்டும் சிவபத்தர்களுடையபொருளைத் திருடியவர்களை
த் துன்பப்படுத்த நினைத்தபேர்களும் கெடுவார்களென்று பலபலசத்தி
யத்தோடேஞ்சொல்லிச் செல்வானமுன் கருகும்படி ஒளிவிடுகின்ற இட
த்திருபாணங்களைத்தரித்த பிர்மாவானவர் ஒருகதைசொல்லத்தொடங்
கினார்-எ-று. (௪)

முன்னையேயொருநான் வடதிசைக்கிறைவன் மூழ்மணிக்கங்கைநீர்த்
துறைவன், இக்கிலத்திழிந்தவிந்திரனனையானாண்மையில் முருகவேளனி
கர்வான், மன்னவர்நிறைந்த மகுடகோடிகளின் வயிரநாயகங்களாற்றே
ய்ந்த,பொன்னவிர்கழலான் றருமமுங்கழலான் புகழ்பெயர் பிரதத்தனென்
பான்.

(இ-ள்) பிர்மாசொல்லுகிறார் முன்காலத்திலே ஒருநாள் வடதேசத்
துக்கு இராஜாவாயிருக்கிறவன் விலையுயர்ந்தமுத்துக்களுக் கிருப்பிடமா
கியகங்காநதிக்துறையையுடையவன் தெய்வலோகத்தினின்று பூமியிலி
றங்கிய தேவேந்திரன்போன்றவன் ஆண்மைக்குணத்தில் சிவசுப்பிரம
ணியருக்குச் சமானமானவன் இராஜாக்கள்பணியும்போது அவர்களா
லே நிரைநிரையாகத்தாழ்த்தப்பட்ட கிரீடகோடிகளில்இழைக்கப்பட்ட
வீரகண்டையைத்தரித்தவன் தருமமென்பதை இடைவிடாதுசெய்கிற
வன் கீர்த்திபொருந்தியபிரதத்தனென்னும் பெயரையுடையவன்-எ-று.

காலனோர்விழியார்முகமெனவிளங்கிக் களங்குடைத் தொழுக்கியமதி
போல், நீலமாமணிகாமபிரைக்தவெண்கவிகைநெடுநிலப்பரப்பெலாநி
ழற்றச், சாலவேபணிவோரரசர்களிவன் பொற்சரணமே படிந்துபோபெ
றுமென், ஞாலமேயழைக்குந்தருமதேவதைபோலிரண்டு சாமரைகளா
ர்த்திடவே.

(இ-ள்) மயன்போலக்கொடுமையைச் செய்கின்றகண்களையுடைய
பெண்களதுமுகம்போல விளங்கிக்களங்கத்தையுடைத்தா யொழுகவிட்ட
சந்திரன்போல நீலரத்தினமிழைத்திருக்கிற காம்பையுடைய வெள்ளை
க்குடையானது நீண்டசக்கிரிகைகளைப் பூமியினபரப்பெல்லாம் நிழற்
றவும் மிருக்தவரியாரையோடு பணியாத சத்துரு ராஜாக்களைப் பார்த்
து இந்திரனுடைய அழகியபாதங்களை வணங்கி உங்களுயிரை இறக்
காமல் பெறுக்கொள்ளுங்களென்று பொருந்த அழைக்குந்தருமதேவ
தையைப்போல இரண்டுசாமரங்கள்வீசவும்-எ-று, (௫)

வருணமண்டலத்திற் புரவிபோந்திடந்தமரகதக்குரகதம்வயங்க, அ
ருணமண்டலத்தை யனவிடுங்கொடித்தே ரடவிகள்புடைவிளையடைப்ப
க், இரணசிந்துரத்துப்புகர்முகக்குப்பிற்றிம்புரிக்கிரிசைகளரத், தாணி
பாதமெங்க மந்திரிகணத்தோ டெழுகதனுன்மண்டபத்திருந்தே,

(இ-ள்) வருணமண்டலத்தில் விளங்கும் குதிரைகள்போல் உயர்வாகிய மரகதநிறத்தையுடைய குதிரைகள் பிரகாசிக்கவும் சூரிய மண்டலத்தையளாவிய கொடிகள் கட்டியதேர்க்காடுகள் பூமியைப்படைக்கவும் இரணம்பொருந்திய சிந்தூரந்தீட்டிய புள்ளிகளையுடைய முகத்தையும் பூண்கட்டிய தந்தங்களையுடைய யானைகள் திசைகள்தோறும் பிரகாசிக்கவும் சத்துருமன்னர் பயப்பட மந்திரி கூட்டத்தோடுஞ் சேனைகளோடும் பிரயாணப்பட்டான் யாத்திரையாகப் பிரதத்தராஜன்-எ-று. (எ)

அங்கர்புற்றேற யவனர்வெற்படைய வலத்தியர்வில்லினுண்கெளவச்
சங்கிலித்தொடக்காய மற்றமன்டலீகர் தம்மிறைதாங்களேசுமக்க
சிங்கமேவறெனவே சோழநாடணைவான் றிருநதிகடந்துதென்னருணைக்
கங்கைவார்சடையான்கோயிலிற்புகுந்தான்கங்கையுங்காசியுமபுரப்பான்

(இ-ள்) இந்தபிரதத்தராசன்பிரயாணப்பட்டபோது அங்கதேசத்தரசர் பயந்து புற்றிலேறிக்கொள்ளவும் யவனதேசத்து இராசர்கள் மலையிலொளித்துக்கொள்ளவும் அவந்திதேசத்தரசர் விலவிலிருக்கிற நாணியைக்கொளவிக்கொள்ளவும் மற்றதேசத்துஇராசக்கள சங்கிலிபோலத் தொடர்ந்து நின்று தாங்கள் கட்டவேண்டிய கப்பணங்களைத்தாங்களே சுமந்துவரவும் ஆண்சிங்கம்போலச் சோழநாட்டுக்கு போகும்படியாக புறப்பட்டுத் திருநதியைக்கான்டி அழகிய அருணாசலஸ்தலத்துக்குவந்து கங்கையைத்தரித்த சடையையுடைய பரமசிவனது கோயிலிற்புகுந்தான் கங்காநதியையும் காசிதேசத்தையும் ஆளுகிற பிரதத்தராசன்.

அரும்பவிழ்மலர்கொண்டருச்சனைபுரியவருணைநாயகர்திருக்கோயில்
விரும்பியுட்புகுந்து பணியுமவ்விடத்தில்விடத்தினுங் கொடியகூர்விழியாள், இரும்பையு முருக்கையு மிசையினுளொருத்தியிலங்கிழையாருடனிறையால், கரும்பெனுமொழியார்பாடுதல்கேட்டான் கண்டனன்வளைத்தவேள்கரும்பை.

(இ-ள்) காசிதேசத்து ராஜாவாகிய பிரதத்தன் அரும்புகள் மலர்ந்த புஷ்பங்களைக்கொண்டு அருச்சனைபண்ணுகிறதற்காக அருணாசலேசுரர் விற்றிருக்கும் திருக்கோயிலுள் பத்தியோடுபோய் வந்தனஞ்செய்யும்போது அவ்விடத்தில் விஷத்திலுங்கொடுமை செய்கின்ற கூர்மையாகிய கண்களையுடையவள் இரும்புகூட உருகும்படிச்செய்யும் சங்கீதவித்தையையுடையவளாகி ஒருதாசிப்பெண் பிரகாசிக்கின்ற ஆபரணங்களைத்தரித்த சிலபெண்களோடு நின்று சுவைநிறைந்தபாலும் கரும்பின்ரசம்போன்ற மொழியினாலே பாடுகிறதைக்கேட்டான் அக்ஷணத்தில்தானே மன்மதன் வளைத்தகரும்புவில்லையுங்கண்டான் காமவிகாரங்கொண்டு பிரதத்தராஜன்-எ-று. (௮)

அன்னமோகிளியோ வமிர்தமோதிருவே வமிர்தமோவமரருக்களித்த
வன்னமோகிளியோயிரதியோபிரமன்மனத்தினால்வகுத்தமேனகையோ
என்னமோகமதாய்த்தனதுநாட்டினிற்கொண்டேகுவனினைத்தனனதற்கு
முன்னமேகுரங்குமுகமதாயிருந்தான் முறுவலாயினதேவர்முகமும்.

(இ-ள்) காசிதேசத்துப் பிரதத்தராஜனானவன் அந்தத்தாசிப்பெண்ணைப்பார்த்துச்சொல்லுவான் இவள் அன்னமோ கிளியோ தேவாமிர்தமோ இலட்சுமியோ அசுரரைக்கொன்று அமிர்தத்தை முன்காலத்தில் தேவருக்குக்கொடுத்த அழகாகிய மோகினியோ இரதிதேவியோ பிரமதேவன்மனத்தினாலே சிருஷ்டித்தமேனகையோ என்றுநினைந்து மோகத்தோடு தன்னுடையதேசத்துக்கு அந்தப்பெண்ணைக் கொண்டுபோகிறதற்கு நினைந்தான் அந்நினைப்பு உண்டாகுமுன்னமேதானே குரங்குமுகத்தையுடையவனாயிருந்தான் அதைக்கண்டு எல்லாரும நகைத்தார்கள் எ-று. (௰)

மந்திரிக்கிழவராசனைவினாவி மன்னவனினைத்தவாறதனால்
வந்தவித்துயர்தவிர்ந்திடமலைமேன் மருந்தினைப்பணியெனவவனுஞ்
சிந்துரக்குலங்கணவாம்பரியுஞ் செழுமணிச்சிவிகையுந்தேரும
சந்தனமணியுந் தனத்தினர்பலருந் தமனியக்கோயின்முன்விடுத்தான்,

(இ-ள்) மந்திரிமார்கள பிரதத்தராசனைப் பார்த்து குரங்குமுகம் வந்ததற்கு காரணங் கேட்டறிந்து கொண்டு அரசனே தீமையாகிய உமது நினைப்பினால அடைந்த இத்துன்பம் நீங்குமபடி மலைமேல்மருந்தாகிய அருணாசலேசுரரைவணங்கென்றுசொல்ல அந்தஇராஜனும்மலையையொத்தயானைகளும்வேகமாய்த்தாவுகின்றகுதிரைகளையும் நல்லஇரத்தினங்களாலிழைக்கப்பட்டிருக்கிற குதிரைகளையும் தேவர்களையும சந்தனக்குழம்பைப்பூசுகின்றஸ்தனங்களையுடையபெண்களையும் பொற்பிரகாசமபொருந்திய அந்தக்கோயிலுக்கு முன் காணிக்கையாகக் கொடுத்துவிட்டான் எ-று. (௰௧)

பன்னருமக்கபூசனைபுரிந்தான்பரமனுமவற்கருள்புரிந்தான், கின்னரமொழியாள் விருப்பினாலடைந்த கிலேசவானரமுகமொழித்தான், நன்னரமுகம்பெற்றிறையுநாட்டணைந்தானுதலாலான்பொருட்கலரா, உவ்வினிய பாவம்பதின்மடங்கும்பொன்னுதவினுறநவிருமென்றுரைத்தான்.

(இ-ள்) பிரதத்தராஜன்சுவாமிக்குச்சொல்லுதற்கரியஅருந்தமருமையான பூசைகள்செய்தான் அப்பொழுதுசுவாமியும் அந்தஇராஜனுக்குக் கிருபைசெய்தார் வீணையினிசைபோலும் வார்த்தையையுடைய பெண் மேற்கொண்ட ஆசையினாலடைந்த துன்பம்பொருந்தியகுரங்கு முகத்தையொழித்தான் நல்லமானிடமுகத்தையடைந்து அந்தஇராஜன தன்

னுடைய நாட்டுக்குப்போய்ச்சேர்ந்தான் ஆனபடியினலே அருணாசலே சருடைய பொருளைத்திருடவினைத்ததனலுண்டாகிய பாவமும் அப்பொரு ளுக்கும் பதின்மடங்குதிரவியங்கொடுத்ததால்நீங்கிமென்று சொன்னர் பிர் ம்மா. அருசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம். (௱௨)

மூர்த்திவுனையருணகிரிவளமிதுதானெனத்திருவாய்மலர்ந்தானக்தப போதனையக்கடிபணிந்துன்போதனையாள்மகிழ்ந்தனமிப்புவியின்மீதே, கோதமுடனறிந்துசெய்தபவந்தவிருங்கதையினியுங்கூறுகென்றான்,மூ தறிவாயினனுமூகத்தினுமாயிரமுகமாய்மொழியலுற்றான்.

(இ-ள்) மகத்தாகிய தவத்தையுடையசனகரிஷியே அருணா சலத்தி னதுவளம் இதுதானென்றுசொன்னர் அந்தப பிர்ம்மாவை அவ்விடத் திலசனகரிஷியானவர் வகதனஞ்செயது உம்முடைய போதனையினலே ஆநந்ததனைதயடைந்தேன்இந்தலோகத்தில்குற்றமாக அறிந்துசெயதபா வமீக்கும்படியானகதையையும்அருள்செய்யவேண்டுமென்றார் பேரறி வுகொண்ட பிரம்மாவானவர்தம்முடையவாய்நான்கும் ஆயிரம்வாயாக ச்சொல்லத்தொடங்கினன்-எ-று. (௱௩)

பதினோராவதுபிரதத்தச்சருக்கம்முற்றிற்று
ஆ திருவிருக்கம்-கூஅ.



உ

பன்னிரண்டாவது,

# பாவந்தீர்த்தச்சருக்கம்.

கலிவிருத்தம்.

வாக்கினல்வடிவினல்மனத்தினலபலங்
காகினைருணமா சயிலனேக்கினு

ற்போய அளவில்லாதகாலம் பரமசிவனைநினைத்து அரிதாகியதவத்தைச்செய்தார்கள் பார்வதியை வாமபாகத்தில் வைத்துக்கொண்ட அந்தச்சுவாமியானவர் ஒருநாள இளமையும்ரிஷபவாகனத்திலெழுந்தருளிவந்து நாம்உங்களுக்குக்கொடுக்கவேண்டிய வரமென்னவென்றுகேட்டு அருள்செய்தார அந்தவசுக்கள இதழினையுடையதாமரைமலரிலிருக்கின்றபிரம்மாவாலுண்டாகொடுத்தகொடியசாபமாகியகடலிலநின்றும் எங்களைஎடுத்தருளவேண்டுமென்றார் எ-று. (௬௫)

கருணைமுகின்முகமலர்ந்துவசுக்களுட னுமதுபவங்கடக்கவேண்டில,
தரணியின்மேலொருநகரந்தலேசகரமென் றிலங்குமந்தத் தலத்தின்மீதே,
அருணகிரியெனுமலையாயிருக்குமந்தப் பதியணுகி யசலஞ்சூழ்ந்த,வரு
ணதிசைதொடங்கியெட்டுத திசைகளினுமிருந்துதவ மியற்றுமென்றார

(இ-ள்) கிருபாவருஷத்தைப்பொழிகிறமேகமாகிய பரமசிவனானவர் திருமுகமலர்ந்து அந்தவசுக்களைப்பார்த்து உங்களுடையபாவத்தைநீங்களகடக்கவேண்டினால்பூமியிலதலேசகரமென்று ஒருதிவ்வியஸ்தலமவிளங்குகின்றது அந்தஸ்தலத்தில் அருணாசலமென்று ஒருமலையிருக்கும அந்தஸ்தலத்தையடைந்து அந்தமலையைசூழ்ந்த மேற்குத திக்குத தொடங்கிஎட்டுத திக்குகளிலுமிருந்துதவஞ்செய்யுங்களென்றருளிச்செயதார்-எ-று. (௬௬)

அன்னவயலருணையிலசேரியதவமியற்றிடு மவ்வளவேயுங்கள்.முன்
னரழற்கிரியுருவெட்டிமுகமாகவிளங்கியொ-டமூர்த்தியாகு, மன்னுமுங்கள
ருமபவமுங்கழிநுமெனவுரைத்துவெள்ளிமலையிற்சேர்ந்தான், தனையு
டைந்தவர்களெல்லாந்தனைப்போலவிருக்கவரந்தருந்தவானே.

(இ-ள) அன்னபட்சிகள்தங்கிய வயல்சூழ்ந்தஅருணாசல ஸ்தலத்திற்குப்போய் நீங்கள அரியதவத்தைசெய்யுங்கள அப்படிச்செய்த அளவிலே அக்கினிசொரூபமாய் விளங்கிய இப்பற்றஅந்தமலையானதுஉங்களுக்குமுன்பாக எட்டுமுகமாயககாட்சிகொடுக்கும் அப்போது நிலைபெற்ற உங்களுடையபாவமுமநீங்குமென்றுதிருவாய்மலர்ந்து கைலாயத் திற்குயெழுந்தருளினார் தமமிடத்திலடைந்தவர்க ளெல்லாரையுந் தம்மைப்போல உருவத்தையடைந்திருக்க வரமருளிச்செய்கிறபரமசிவன்எ-று.

முந்தவசுரரையுமவர்புரத்தினையுமெரித்தபிரான்மொழிந்தவாறே
அந்தவசுவனைவருஞ்சென லருணையிலேயரியதவமியற்றினர்க
ளிந்தவசுமதிகழைக்கலமுற்கிரியெட்டுருவாகியிருந்ததங்கே
தந்தவசுநிலைபுசழ்ந்துகொடுஞ்சாபகிரிகளெலாந்தள்ளினாகள்.

(இ-ள்) முன்பு அசுரர்களையும் அவர்கள் வாசஞ்செய்துக்கொண்டிருந்த திரிபுரங்களையும் கையைத்தெரித்த சுவாமியானவர் அருளிச்செய்தபிரகாரமே அந்த எட்டுவசுக்களும்போய் அருணாசலத்தில் அருமையாகிய தவத்தைசெய்தார்கள் இந்தப் பூமியானது தழைக்கும்படி அக்கினிமலை எட்டுமுகமாய் விளங்கி யிருந்தது முன்னேதங்களுடைய தவத்தைப்புகழ்ந்து சொல்லி யதனால் வந்த கொடியசாபமென்று சொல்லப்பட்ட மலையைத்தாண்டிவிட்டார்கள் எ-று. (௭)

பூதலஞ்சூழ்திசைகளெல்லா மிருந்தஷ்டமூர்த்திதனைப்பூசித்தார்க
ளாத லிறும்பழயபடிதமதுபதவிகளையடைந்தருள்பெற்றாரக
ளேதமறுமபடிக்கரிய மறைப்பயனெட்டுருவாகி யிருந்தபோதுஞ்
சீதரனும்பதுமகிரமத் துடனறியான்முடியெனக்குத்தெரிந்திடுமே.

(இ-ள்) அந்தமலையைச்சூழ்ந்த எட்டுத்திக்கிலு மிருந்தவசுக்கள் அஷ்ட மூர்த்தமாகிய சுவாமியைப் பூசித்தபடியினாலே பழயபடியேதமது பதவிகளைப்பெற்றுக்கொண்டு சுவாமியினது கிருபையும் பெற்றார்கள் குற்றம்நீங்கும்படி அருமையான வேதப்பொருளாகிய அந்த சுவாமியானவர் எட்டுமுகமாயிருந்தபோதும் விஷ்ணுவும் திருவடியைக்கிரமத்துடனே அறியாமற்போனாற் எனக்கும் முடிதெரியவில்லை-எ-று. (௮)

சண்முகனையளித்துவைத்துமுகத்தவனெண்வசுக்கள்செயுந்தவத்தினாலே எண்முகமா யிருந்ததுகல்லொடொருமுகமாயிமையவர்வாழ் தெடுத்தாரென்று, தண்முகநான்குடையபிரான்சனகமுனிக்குரைத்தருளச்சயிலத்தாயே, பண்முகமாமுழையமொழித் திலோத்தமைசேர் கதையினையும்பகரலுற்றான்.

(இ-ள்) சிவசுப்பிரமணியனைப்பெற்ற பரமசிவனானவர் எட்டுவசுக்களுஞ் செய்த தபோபலத்தினாலே எட்டுமுகமாயிருந்ததைப் பார்த்துத் தேவர்களெல்லாம் ஒன்றாய்க்கூடிவணங்கிப் பல்லாண்டு கூறினார்களென்று கருணைபொருந்திய நான்குமுகங்களையுடைய பிரமாவானவர் சனகரிஷிக்குச்சொல்லி அருள்புரிகின்ற அந்தத்திருமலையில் யாழினது இசைபோன்ற வார்த்தையையுடைய திலோத்தமை யென்பவள் அந்தக்கதையையுஞ் சொல்லத்தொடங்கினாள்-எ-று. (௯)

கலிவிருத்தம்.

தேவர்கோன்முன்னமென் னிகுத்திற்சேர்ந்துதன்
பாவமதிலாப்பெரும்பதவிவேண்டியே
யாவருமருந்தவ மியற்றினாரதற்
காவதுசெய்யென வறைந்துபோயினான்.

(இ-ள்) பிரமர்சொல்லுவார் தேவேந்திரன்முன்னே என்னிடத்தில் வந்து தன்னுடையபரிசுத்தமான பதவியைச்சிந்தித்து எல்லாரும் அருமையான தவத்தைச்செய்கிறார்கள் அந்ததவம் நிறைவேறாதபடிக்கு ஏதாவது ஒருவிக்கினத்தைச்செய்யவேண்டுமென்று சொல்லிவிட்டுப்போனான்-எ-று. (௧௦)

இந்திரன்போனபின் னியக்கமங்கைய
ரந்தரமங்கைய ராகநாட்டவர்
சுந்தரச்சுடம்புவித் தோனகமார்வரை
மந்தரமுலைச்சிய ரழகுவாரியே.

(இ-ள்) தேவேந்திரன் போனபிற்பாடு யட்சலோகத்துப்பெண்கள் தேவலோகத்துப்பெண்கள் நாகலோகத்துப்பெண்கள் அழகுபொருந்திய கடல்சூழ்ந்தபூலோகத்திலுள்ளபெண்கள மந்தரகிரிபோன்ற முலையையுடைய வரையரமகளிர் இவர்களுடைய அழகுமெடுத்துக்கொண்டு.

வருத்தமில் றிலோத் தமையெனுமவஞ்சியை
யுருத்தனனவலியமன் மதிலையயோட்டினன்
மிருக்கதோர் விஞ்சையிற் புழுவின்வேட்டுவ
னக்குமவழித்தட லளிப்பதென்னவே.

(இ-ள்) குளவியானது தன்னிடத்திலுள்ள ஒரு சாமார்த்தியவிசேஷத்தினாலே புழுவினது உடலைக்கெடுத்து அதற்குவேறொருதேகத்தைக் கொடுப்பதுபோலத் திலோத்தமையென்னும் பெண்ணை உண்டாக்கினேன் அப்பொழுதே அதளமேற்கொண்ட ஆசையால் என்னுடைய வல்லமையையிழந்தேன் ஞானத்திற்செல்லுகின்ற என்னுடைய புத்தியையுந்தூரத்திவிட்டேன் எ-று. (௧௨)

மன்மதன்கணையினுன் மயங்கிவாடுமென்
றன்மையையறிந்துநான் றனக்குத்தாதையென்
றென்மனம்பொருந்திலா ளெனதுகையுறாள்
முன்பினின் றொளிக்கநான் முகமுந்தேடினேன்.

(இ-ள்) மன்மதனுடையபாணத்தினாலே மயக்கத்தையடைந்து வாடுகின்றஎன்னுடைய இயல்பையறிந்துதான்தனக்குத்தகப்பனென்றுஎன் கருத்துக்கு ஒவ்வாதவளாகியும் நான்பிடிக்கும்போது என்கைக்கு அகப்படாதவளாகியும் எனக்குமுன்னின்றும் ஓரிடத்தில் தானறியாதபடி ஒளித்துக்கொள்ள நான்குபக்கங்களிலும் அவளைத்தேடினேன்-எ-று. ()

அறுசீரடியாசிரியவிருத்தம்.

கன்னிமானாகச்சென்றாள் கலையதாய்த்தொடர்ந்தேன்பேட்டு
வன்னியாய்ப்பறந்தாள்சேவல் வடிவமாய்த்தொடர்ந்தேன்மங்கை

பின்னையோர் கதியுங்காணுள் பிறங்கலாமருணாநாதன்
றன்னையேதூரக்கண்டாள் சரணமென்றுரைத்துசார்ந்தாள்.

(இ-ள்) அப்படிநான்தேடி அவளைக்கண்டுபிடிக்கும்போது பிடிக்கிறத ற்குமுன்னே பெண்மானுகி ஓடினுள் நான் கலைமானுகத்தொடர்ந்தேன் அதன்பின் பெண்கிளியாய்ப்பறந்தாள் நான் ஆண்கிளியாய்ப்பறந்து தொடர்ந்தேன் அந்தத்திலோத்தமையானவள் பிற்பாடு என்கையிலகப் படாமலிருக்கிறதற்கு வேறொருகதியுங்காணுமல் வருந்தும்போது மலை யுருவாகிய அருணசலேசுரரைக் கொஞ்சதூரத்திற்கண்டு நீரேதஞ்ச மென்றுசொல்லி அடைந்தாள்-எ-று. (௰௪)

மாயமால்விடையின்பாகர் வடிவிலாவிடையின்பாகர்
காயழலானமெய்யர் கானகத்தாடுமையர்
ஆயுமாரணத்தின்சோதி யடைக்கலமென்றிளையாள்
சேயிளமழலைபோலத் திருச்செவிசாற்றினளே.

(இ-ள்) மாயஞ்செய்கின்ற விஷ்ணுவாகிய ரிஷபத்தின்மேல் வருகி ன்றவரோ தோற்றாத இடையினையுடைய பார்வதியையும் பாகத்திலேவை த்துக்கொண்டிருக்கிறவரோ தகிக்கின்ற அக்கினிசொரூபமானவரோ திரு வாலங்காட்டினிடத்தில் நடனஞ்செய்த சுவாமியே ஆராய்ந்து தேடுகிற வேதத்தையுடைய சோதியே நானடைக்கலமென்று சகலரையும் ஆளு கின்ற பரமசிவனது திருச்செவியிற்சொல்லும்படி குழந்தையினதுஇள மையாகிய குதலைச்சொல்லைப்போலச் சொன்னுள்-எ-று. (௰௫)

முருகலர்குழலிதன்னுள் முறையிடுமுறைக்கெம்மையன்
திருவுருவனைத்துந்தூய செவிகளாயிருந்தபோது
சிறைவின்மால்வரையைக்கீறி வேட்டுவனுகினுனும்
சுருதியுஞமலியாகத் தோன்றினன்றோகைபாகன்.

(இ-ள்) வாசனைபொருந்திய புஷ்பமாலையணிந்த கூந்தலை யுடைய திலோத்தமையினது முறையிடுதலுக்கு எங்கள்சுவாமியினது அழகிய உ ருவமெல்லாம் செவிகளாலிருந்தன அதனால் சிகரத்தில் மலையைக்கீறி அதில்நின்றும் தாம் வேடரூபமாகவும் நாலுவேதங்களும் நாய்களாகவு ம் தோன்றினார் பார்வதியை யிடதுபாகத்திலே வைத்துக்கொண்டபரமசி வன்-எ-று. (௰௬)

கூடகச்செங்கைபாகன் சிலையொடுதோன்றும்போதில்
வாடியமருள்குலான்மேன் மயக்கமும்வருத்தந்தீர்த்தே
நாடியபெருமானம்மை முனியுமென்றஞ்சித்தாழ்ந்தேன்
வேடனைப்பறவைகண்டால் வெருவுமோவெருவுறாதே.

(இ-ள்) வினைபலைபளிக்க கைகளையுடைய பார்வதியை திருப்பக்கத்தில் வைத்துக்கொண்டிருக்கிற பரமசிவன்வேடனுகி, வில்லைக்கையிலேந்திக் கொண்டு தோன்றியபோது முன்னை கூனைந்து செய்த சுவாமியானவர் என்னைக் கோபித்துக் கொள்வாரென்று பயக்துடனிருக்கிற இப்பிழையுடைய நிலோத்தமையின் மேலுண்டாகிய மையலையும் அதனாலுண்டாகிய வருத்தத்தையுந்தீர்த்து அந்தச்சுவாமியையணங்கினேன் வேடனைப்பட்சிகண்டால் பயப்படுமோ பயப்படாதே-எ-று. (௧௨)

வெறமெனுமுலையாடன்னை விதித்ததுசீவிரும்புந்திமை
கற்பகோடியினுந்தீரா தாயினுங்கருணையாமித்
தற்பரமலைகண்டாயே யாதலாற்றவிர்த்தோம்போவென்
றற்புதன்மொழிந்துமீளப் புகுந்தனனருணைவெற்பில்.

(இ-ள்) மலைக்குவிகராகிய ஸ்தலத்தையுடைய திலோத்தமையைப்படைக்க நீயே விரும்புசலாலுண்டாகிய பாவமானது கற்பகோடிகாலத்திலுந்தீரமாட்டாது ஆனாலும் அருணுருவமாகியும் தானேபரமாகியும் உள்ள இசுகமலையைதகரிசித்தாயாதலால் அப்படிப்பட்ட பாவத்தைத்தீர்த்துவிட்டோம உனனிடத்திற்குப் போவென்று திருவாய்மலர்ந்து அம்மலைக்குள் சுவாமியானவர் மறைந்து விட்டார்-எ-று. (௰௮)

கலிவிருத்தம்

தன்னையறியாமல்வினை சாருமுடனுணுக்
தென்னருணைசேரிலது தீருவதுதிண்ண
மின்னல்வினையறறதனி லெண்ணியதுபெற்றூர்
முன்னமுளரொன்றயன் முனிக்குமொழிகின்றுன்.

(இ-ள்) ஒருவனுக்கு அபுத்தி பூருவமாகவந்த பாவமானது அவன் அழகுபொருந்திய அருணைசலத்தை யடைந்தால் தீரும் அது நிச்சயமே முற்காலத்திலும் அநேகர் தஙகளுடைய வினையை நீக்கி அந்தஸ்தலத்தில் தாங்கள் நினைத்த வரத்தைப்பெற்றுக்கொண்டார்களென்று பிரமாவானவர்சனகரிஷிக்கு ஒருகதைசொல்லுகிறுர்-எ-று (௧௧)

கற்பமுடிவாயிருள் பெயர்த்துபுலர்காலத்
தற்பவிருணின்றதுமுன் னுளிறையினுலே
சொற்பரவைமாயனுணை ராதுதயில்கொள்ளச்
சிற்பரமயோகியர்கள் செம்மலைநினைந்தார்.

(இ-ள்) முற்காலத்திற் பரமசிவனுடைய திருவிளையாட்டினுலே கற்பகாலமானது முடிவுற்று மகத்தாகிய அந்தகாரமானது நீங்கி வெளிச்சமுண்டாகிறகாலத்தில் அந்த அந்தகாரத்திற்கொஞ்சம் நின்ற அக்காலத்தில் இதனையறியாமல் விஷ்ணுவானவர் சமுத்திரத்தில் நித்திரைசெய்

துங்கொண்டிருக்க மேன்மைபொருந்திய சின்மயமாகிய யோகியாகள பரமசிவனை நினைந்தார்கள்-எ-று. (௨௰)

அத்தனடியார்கடம தாணவமறுக்குந்
சுத்தனருளானந்த சோதிவடிவானே
னெத்தலமுமெத்திசையு மெங்கும்வெளியானே
னுயத்தபொறிதமயிலுலா வாயவுலகெல்லாம

(இ-ள்) எல்லாச்சீவராசிகளுக்கும் பிதாவாகியும தமதடியாாகளுடைய ஆணவமலத்தைக் கெடுக்கின்ற சுத்தராயு மிருக்கின்ற பரமசிவன் நெருப்புமயமாகிய ஒருசோதிரூபத்தையடைந்தார் எந்தஸ்தலங்களிலும் எததிக்குகளிலும்மற்ற எந்தவிடங்களிலும் ஆகாயமே நமக்குருவமாகிய அந்த சுவாமியானவர் அப்போதுசிந்திய பொறிகளாலே உலகமெல்லாம் உண்டானதுகள-எ-று, (௨௧)

ஊழிமுடிவாயிருள் புலர்ந்துணராதே
யாழிமிசையிற்றுயிலுமச்சுதனையெய்தி
வாழியெனயோகிய ரெழுப்புதலுமாயன்
பாழியிலுநின்றதி பயத்துடனெழுந்தான்.

(இ-ள) ஊழிகாலமுடிந்து மகத்தாகிய அந்தகாரம் நீங்கியும் அறியாமல் சமுத்திரத்தில் நித்திரைசெய்கின்ற விஷ்ணுவினிடத்தில்வந்து வாழியென்றுசொல்லி யோகியர்கள் எழுப்புதலும அந்த விஷ்ணுவானவர் சர்ப்பசயனத்தில் நின்றும் அதிகபயத்துடனெழுந்திருந்தார-எ-று. ()

வையகமளிக்கமல ரோனையுதவாதே
பையரவின்மிக்கதுயில் கொண்டபரிசாலே
வெய்யபுன்வினைதொழல் விளைந்தனனெனத்துன்
றையுணர்வுமஞ்சியென தையனைநினைகதான

(இ-ள்) உலகத்தையுண்டாக்கும்பொருட்டு பிரமாவைச் சிருஷ்டிக்காமல் படத்தையுடைய பாம்பின்மேல் நித்திரைசெய்த தன்மையினாலே வெம்மையாகிய தீவினையைச் சம்பாதிதது கொண்டேனென்று ஐம்பொறிகளுங்கலங்கி யென்னுடைய ஆண்டவனாகிய சுவாமியைநினைத்தார்-எ-று. (௨௩)

அன்பாகருதிற்கணமை யாகிவெதிாவநதே
துன்பையகல்விக்குமது தூயதொழிலானுன்
வனபடிகவெற்புமிசை மன்னுசுடாபோலே
மின்படருமேனியுடன் வெள்விடையில்வந்தான்

(இ-ள) அடியார்கள நினைத்தால் சீக்கிரத்தில்தானே அவர்களுக்கு எதிராகத்தோன்றித் துன்பத்தைநீக்குவதே தமக்குப்பரிசுத்தமாகியதொழிலாகக் கொண்ட பரமசிவ ஞானவடிவன்மையராகிட ஸ்படிகமலையினமே

ல் விளங்குகின்ற சோதிபோல வெண்மையாகிய ரிஷபத்தின்மேல் மி ன்போன்ற சிறத்தோடெழுந்தருளிவந்தார்-எ-று. (௨௪)

பொருக்கெனவெழுந்தடி பணிந்தருள் புகழ்ந்தே
யருக்கியமுதற்புரி யருச்சனையினாலே
யுருக்கியென்வினைத்தொட ரொருத்தருள்தியென்று
னொருக்கணிகுவாணிவை யெடுத்துமொழிகின்றான்

(இ-ள்) அப்படி பரமசிவன் ரிஷபவாகனத்தில் எழுந்தருளிவந்தவுடனே விஷ்ணுவானவர் சீக்கிரத்தில் எழுந்து திருவடிக்கமலங்களுக்கு வந்தனஞ்செய்து அவருடைய திவ்வியகிருபையைப்புகழ்ந்து அவருக்கு அருக்கிய முதலிய பூசைகளினாலே சுவாமியினுடைய திருவுள்ளத்தை இளகச்செய்து எனக்கு நிந்தனையினால் வந்த வினையைநீக்கியருள் செய்யவேண்டுமென்று எருக்கம்பூமாலையைத் தரிக்கின்ற சுவாமியானவர் இவைகளைச் சொல்லத்தொடங்கினார்-எ-று. (௨௫)

வாசிமகமேமுதல் மகம்பலசெய்தாலும்
பாசமகலாதவினை பறறறுதலெண்ணித்
தேசுமிகுதென்றிசை செறிந்தருணைதன்னிற்
பூசைபுரிவிட்டுவினை போகுமுனையென்றான்.

(இ-ள்) ஒருவன்தனக்குண்டாகிய பாசவினையை நீக்கும்படியாக நினைந்து அஸ்வமேதமுதலிய பலயாகங்களைச்செய்தாலும் அதுபோகாது ஆனபடியினாலே சோதிமயமாகிய தெற்குத்திசையில் விளங்காநின்ற அருணாசலத்திற்குப்போய பூசைசெய்தால் உனைவிட்டுவினையானது போகுமென்றார் பரமசிவன்-எ-று. (௨௬)

நாறுபொழிலண்ணாகரு ளாமும்வடிவொன்றே
வேறலவதன்பெருமை வேதமுணராதல்
நீறுபுனையோகியாக ணீவிரபலதொண்ணூற்
றாறுபிரமாவதி லருச்சனையுரிந்தீர்.

(இ-ள்) வாசனையுடைய சோலைகள்சூழ்ந்த அந்த அருணாசலத்திற்கும் எனக்கும வடிவம் ஒன்றுதான் பேதமென்று அதனுடையபெருமையைவேதங்கள்கூட அறியாதுகள் விபூதியை முக்கியமாகத்தரிக்கின்ற யோகியாகளும விஷ்ணுக்களாகிய நீங்களபலரும் தொண்ணூற்றாறுபிரமாக்களும அந்தஸ்தலத்தில் பூசைசெய்தீர்கள-எ-று. (௨௭)

முறைநிறையுரோகிணி முலைகளிடையின்மூழ்கா
மற்றவிருபத்தறுவர் வாழ்வையுமறந்தான்
கறைமதிதக்கனுடல்கன் றுறசபித்தான்
அற்றமதியப்பதியி லத்துயரொழித்தான்.

(இ-ள்) சந்திரனானவன் நன்றாகவேலை தீர்ந்த ஆபரணங்களுடைய ரோகிணியினது ஸ்தனங்களினுடைய போகத்தைவிரும்பி மற்றையிருபததாறு நாயகிகளுடைய போகவாழ்வுகளையுமறந்துவிட்டான் அதைமுன்சொன்ன இருபத்தேழு பெண்களுக்குந்தகப்பனாகிய தக்கன்கே

ள்விப்பட்டு எல்லாநாயகிகளில் மீதும்விருப்பம் வைக்காது ஒருத்தியின் மேல் மாத்திரம் வைத்ததனால் அவனுடல் குன்றிபோகக்கடவதென்று சபித்தான் இந்தச்சாபத்தை யடைந்த சந்திரன் அந்த அருணாசலத்தில் வந்து அந்தத்துன்பதலதை நீக்கிக்கொண்டான்-எ-று. (௨௮)

வினைப்பளவின்முத்திதரு நீணகரமுற்றே
மகக்குறைதவிர்த்திடுகெ யென்றிறைமகிழ்ந்தா
னறகிரியைநாடியரி யுத்திசையினண்ணிச்
சுனைக்கமலவாசமிகு சோணகிரிகண்டான்.

(இ-ள்) நினைத்தமாத்திரத்தில் முத்தியைக்கொடுக்கின்ற அருணாசலமெனகிற அந்தஸ்தலத்திற்குப்போய் மகக்குறையைநீக்கிகொள்வென்று சுவாமிமகிழ்ந்தார் விஷ்ணுவானவர் அக்கினிவடிவாகிய மலையைதரியானஞ்செய்து அதுவிளக்குந் தெற்குத்திசையையடைந்து சுனையிலிருக்கிற தாமரைபுஷ்பத்தினது வாசனைமிகுந்த அந்தஸ்தலத்தைக்கண்டார்-எ-று. (௨௯)

நசர்வடிவானமலை கண்டினிதிறைஞ்சித்
தேசுமிகுநன்னகர் செறிந்துமகிழ்வாகி
வாசவதடத்திடை மடிந்துவலமாகிப்
பூசனைபுரிந்துவினை போயமலனானான்

(இ-ள்) மலையுருவாகிய சுவாமியைத்தரிசித்து அன்போடுபணிந்து பிரகாசம்பொருந்திய அந்தஸ்தலத்திற்போய்ச் சந்தோஷத்தையடைந்து இந்திரதீர்த்தத்தில் முழுகிக் கிரிப்பிரதக்ஷணமவந்து பூசைசெய்து கொண்டுவரத் தம்முடைய வினைநீங்கிவிஷ்ணுவானவர்பரிசுத்தரானார்,

மேவியருணைப்பதியின் மிக்கபுகழ்மாயன்
பாவமகல்வித்திடு பலத்தினையுரைத்துத
தாவியுமைபாகமுறை சோணகிரிநாத
னாவியின்மகிழ்ச்சியையு நான்முகனுரைப்பான்.

(இ-ள்) மிகுந்த புகழையுடைய விஷ்ணுவானவர் அருணாசலத்திற்குப்போய்த் தம்முடைய பாவத்தைநீக்கி அவர் அடைந்தபலத்தைப் பிர்மாவானவர் சனகரிஷிகருக்குச்சொல்லிப் பார்வதியானவள் ஒருபுறத்தில் வாசஞ்செய்கின்ற அருணாசலேசுரர் புழுகுபூனையினாலே அடைந்த சந்தோஷத்தையுஞ் சொல்லத்தொடங்கினார்-எ-று. (௩௰)

பன்னிரண்டாவதுபாவந்தீர்த்தச்சருக்கம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௬௱௬௰.

பதின்மூன்றாவது

புளகாதிபச்சருக்கம்.

(*)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

உருவுபலவேறாபுனைபுளகனெனு மோரசுரனொருபொழுதநாவிவடி.
வா, யருணைகிரிமீதுலவியரிபுழுகேசிதறியதிகபலமாயவளியேயா, மெ

ஞன், மனமுருகியேமுனிவ ரிமையவர்கண்மானிடாகள் மகிழ்வடியின் மேலணியவே, அனவரதமாண்மத பூமிமசலமுமாலயம தருவிமெனவே பெருகுமே.

(இ-ள்) சர்வேசுரத்த உருவமாகிப் புழுகுபூனையினது மரபினால் உண்டாகின்ற புழுகானது உம்முடைய திருமேனி ஏறக் கொள்ளவும் அதனால் புழுகணிபிறைவனென்று ஒருகாமத்தை சீர்சரித்துக்கொள்ளவும் அருளசெய்யவேண்டுமென்றுவணங்கி உயிர் விட்டவுடனே அந்த அசுரன்கதிசேரும்படி சுவாமி அனுக்கிரகஞ்செய்தார் அப்படி அதனை பிரட்சிதததகண்டு முனிவர்களும் தேவர்களும் மனிதர்களும் மலவருத்தத்தையடைந்து சந்திரனைத்தரித்த சுவாமியினது சிரசில் புழுகுசாப் புச்சாத்த எப்போதும் அக்கபுழுகுகளோடு பனிநீரோடு சுவாமியினுடைய ஆலயமானது அருவியையுடையதாகப்பெருகியோடும்-எ-று. ( )

புழுகுபனிநீர்களப மனுவளவதேறுமிறை புனையும்வகையானுதவினோ, விழிகுளிர நாடியானிணையடிகளேபரவி வினைவினைகளவீடுபெறுவா, ருழைமருவுபாணியினர் சரிதமிதுவாகுமெனவுவகையுடனேயுரைசெய்தான், மொழியுமலாலயனை முனிவருடனேசனக முனிபுகழுவினோடுதொழுதான்.

(இ-ள்) புழுகும், பனிநீரும், கூட்டுவர்க்கச்சந்தனமுமாகிய இவைகளில அனுவளவாவது சுவாமியானவர் ஒப்புகிகொளளும்படி செயதவர்களும், கண்கள் களிப்படையும்படியாகத் தரிசித்துச் சுவாமியினது திருவடிகளை வணங்கி அவர்சரித்திரத்தைக்கேட்டவர்களுமமோட்சத்தையடைவார்கள் மானைக்கரத்தில வைத்தருளிய பரமசிவனுடைய திவ்ய சரித்திர மிதுவாகுமென்று சந்தோஷமாய் அநந்தப்பிரமாவானவர் சொன்னார், அப்படிச்சொல்லியபிரமாவைச்சனகரிஷியானவர முனிவர்களோடு தோத்திரஞ்செய்துவணங்கினார்-எ-று. (௫)

கலிவிருத்தம்.

அஞ்செழுத்தும்வாழிவாழி யருணைவாழியருணையான்
கஞ்சமுறுசரணம்வாழி கருணைவாழிகருணைபோன்
மஞ்சுபெற்றவானம்வாழி வையமவாழிவையமேற
றஞ்சமுறுநீறும்வாழி சைவம்வாழிவாழியே.

(இ-ள்) பாவங்களைப்போக்குகிறதற்குக் காரணமாயிருக்கின்ற பஞ்சாக்ஷரமானது வாழ்கவாழ்க, அருணாஸ்தலம்வாழ்க, அருணாசலேசுரருடைய தாமரைமலர்போன்றதிருவடிகள்வாழ்க, அந்தசுவாமியினுடைய கிருபையானதுவாழ்க, அக்கருணைபோன்ற அழகாகிய மேகவருஷம்வாழ்க, பூலோகம் வாழ்க, பூமியில் உயிர்களுக்குப் பற்றுக்கோடாகிய திருநீறுவாழ்க, சைவசமயமானதுவாழ்க-எ-று. (௬)

ஞானம்வாழிநன்மைவாழி நாடுராஜநீதிசேர்
தானம்வாழிதர்மம்வாழி சரதவேதமாகமங்
கானம்வாழிகலைவாழி கற்றறிந்தகேள்வியர்
பானயேர்களவாழியீச னடியாவாழிவாழியே.

(இ-ள்) ஞானம்வாழ்க, நன்மையானது வாழ்க, நாடும் இராசனும் அவனுக்குரியநீதியும், கீர்த்தியும், தானமும்வாழ்க, தருமமும்வாழ்க, உண்மையாகியவேதமும், ஆகமங்களும்வாழ்க, சங்கீதம்வாழ்க, மற்றவி த்தைகளும்வாழ்க, அவைகளைக்கற்றறிந்தும், கேள்விப்பட்டும், யாவரி டத்தும் அன்புஉண்டானவர்கள்வாழ்க, பரமசிவனது அடியார்கள்வாழ் க வாக-எ-று. (எ)

அறுசீரடியாசிரிய விருத்தம்.

இக்கதைபடித்தோர்கேட்டோரெழுதினோரெழுதிவைத்தோர்
மைக்கடல்சூழ்ந்தவிந்த வையகமுழுதுங்காத்துத்
தக்கசந்தானபோக சௌக்கியந்தழைபவாழ்ந்து
இக்கருணேசரன்பாற் சிவபதம்பெறுவர்தாமே.

(இ-ள்) அந்தஅருணாசலத்தின் மான்மியத்தைப் படித்தவர்களும் கேட்டவர்களும் எழுதினவர்களும் எழுதிவைத்துக் கொண்டவர்களும் கரியகடல்சூழ்ந்த பூமிமுழுதும காத்துத் தகுந்த புத்திரசம்பத்தும் போகசௌக்கியமும் தழையும்படியாக வாழ்ந்து யாவருக்கும் ஆதார மாகிய அருணாசலேசுரர்கிருபையினாலேசிவபதம்அடைவார்கள-எ-று.()

பதின்மூன்றாவது

புளகாங்கிதசருக்கம்—முற்றிற்று.

———0———

# அருணாசலபுராணம்

## மூலமும் - உரையும்,

முற்றிற்று.

———(*)———

பாயிரம்உள்பட ஆ சருக்கம் பதினான்குக்கும்,

கூடிய திருவிருத்தம—சுசஎ.

திருச்சிற்றம்பலம்.